பசியின்மையால் சரியாக
சாப்பிடாத குழந்தையை...






## அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

### தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்— அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள்!




இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.

**இன்க்ரிமின்*... வளர்ச்சிக்கு மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

CNCH-24 TAH




லெடர்லி டிவிஷன். ஸயனமிட் இந்தியா லிமிடெட்



# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, சித்திரை, 10-ஏப்ரல், 23



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

### நினைவுத் திரையில்....

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் 'சார்பாகக் கல்கி ஆசிரியர் தமிழ்த் திருநாளை நடத்திய மதுரை அன்பர்களுக்கு நன்றி கூறினார். இரண்டு தினங்களாகத் தமிழ் மூன்றை முன்னிட்டுப் புது மண்டபத்தில் மணிக் கணக்காக அசையாது உட்கார்ந்திருந்தவர்களின் அலுப்பும் களைப்பும் கல்கி ஆசிரியரின் அரை மணி நேரப் பேச்சைக் கேட்டுச் சிரித்து மகிழ்ந்ததில் தீர்ந்து போயின. கல்கி ஆசிரியரின் அன்றைய பேச்சைக் கேட்ட சபையோரில் சிலர், இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்ற முத்தமிழோடு நாலாவதாக 'நகைச்சுவைத் தமிழ்' என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார்கள்!

'பகீரதன்' எழுதிய ''மதுரைத் திருநாள்'' என்ற கட்டுரையிலிருந்து.

கல்கி, ஜனவரி 25, 19:8.



இலங்கையில் 40 சதம் தபால் செலவு தனி


உணவு
நிதி உதவி
மத்திய சர்க்கார்
ராஜ்ய சர்க்கார்
அதிகாரக் கடிவாளம்
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 38



# மயக்கு சோஷலிஸமா? மக்கள் நல சோஷலிஸமா?

சுயராஜ்யம் தேசத்துக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்தது. ஆனால் பொருளாதார அபிவிருத்தி நமக்கு இன்னும் ஏற்படவில்லை. பொருளாதார வளர்ச்சி பெற வேண்டுமாயின், அதாவது ஏழை மக்களின் நிலையை உயர்த்தி, படித்தவர் — படிக்காதவர் அனைவருக்கும் வேலை கிடைக்கச் செய்ய வேண்டுமாயின் தனிமனிதனுக்குச் சுதந்திரம் வழங்கியாக வேண்டும். தேசம் சுதந்திரம் பெற்றபின்னும் மக்கள் சுதந்திரம் பெறவில்லை. மக்கள் சுதந்திரத்துக்காகவே ஏற்பட்டது சுதந்திரக் கட்சி. இதற்கு மாறாகச் சர்க்காரும் அதன் அதிகாரிகளுமே அதிகாரம் பெற வேண்டும் என்பதே காங்கிரஸின் லட்சியம். சோஷலிஸம் என்ற மயக்கு வார்த்தை இவர்களுக்குப் பயனாகிறது. இந்த வார்த்தையால் மயக்கப்பட்டே வேறு பல கட்சிகளும் மத்திய அதிகாரக் குவிப்புக்கும், தொழிலூக்கத்தின் நசிவுக்கும், உற்பத்தியைக் குலைக்கும் கட்டுப்பாடுகளுக்கும், பறிமுதல் சட்டங்களுக்கும் உடந்தையாக உள்ளன. இவை யாவும் சுதந்திரமான தனி மனிதர்கள் மட்டுமே காட்டக்கூடிய உற்பத்தி உயர்வைச் சர்க்காரின் அதிகார இயந்திரத்தின் மூலம் சாதிக்கலாம் என்ற வீணாசை கொண்ட கட்சிகள். சுதந்திரமாகத் தொழில் நடந்தாலொழியப் பொருளாதாரம் ஒருகாலும் முன்னேறாது. குறுக்கு வழிகளைக் கடைப்பிடிப்பதால் சர்க்கார் செலவு உயரும்; வரி உயரும்; அதோடு உழைப்பாளிகள் மீது உத்தியோகஸ்தர்களின் அதிகாரம் ஓங்கும். ஆனால் உற்பத்தி ஒருகாலும் உயராது. சுதந்திரத் தொழில் தரும் ஊக்கமின்றி மக்கள் நேர்மையாய் உழைத்து உற்பத்தியைப் பெருக்குவார்கள் என்று எதிர்பார்க்க இடமேயில்லை.

காங்கிரஸ் கொள்கைகள் வியர்த்தமாகிவிட்டன என்பதைக் கண்டனர் காங்கிரஸ்காரர்கள் பலர். எனினும் ஆட்சி அதிகாரத்தைக் கொண்டு பெறுகிற லாபங்களில் பங்கு பெறுவதற்காகவே இவர்கள் கட்சியில் இருக்கிறார்கள். லாபம் கிடைக்காமல் போனால் தனியாகப் பிரிந்து 'மக்கள் காங்கிரஸ்' அமைக்கிறார்கள். "காங்கிரஸுக்கு ஆதரவாளர் தேவை; ஆதரவாளர் ஒவ்வொருவருக்கும் பதவி தரப்படும்" என்று காங்கிரஸ் கட்சி விளம்பரம் செய்ய வேண்டிய ஸ்திதி ஏற்பட்டிருக்கிறது.

கொள்கையில் பிடிப்பு இல்லாமலே லாபத்தில் பங்கு பெறுவதற்காக ஒன்றுபட்டு நிற்கிற காங்கிரஸ்காரர்கள், விவசாயம் — தொழில் இரு துறைகளிலும் தங்கள் கொள்கை தோல்வியுற்றதை ஒப்புக் கொண்டால் தேசத்துக்கு அது ஒரு பொன்னாளாகும். இந்தக் கொள்கைகளால் ஏழைகளின் நிலையை உயர்த்த முடியவில்லை என்பதை நிதரிசனமாகக் கண்டபின், இப்போதேனும் காங்கிரஸ்காரர்கள் சுதந்திரமான போட்டித் தொழில் முறையை ஏற்படுத்தினால், கடும் உழைப்புத் திறனோடு அறிவுக் கூர்மையும் படைத்த நம் மக்கள் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வது திண்ணம்.

இன்றையத் தேவை 'மக்கள் காங்கிரஸ்' அல்ல; 'மக்கள் சுதந்திரம்' என்பதே தேவை. நிர்ப்பந்தங்கள் செய்யாமல், தொழில் துறையில் ஈடுபட்டோருக்குச் சர்க்கார் உதவிக் கரம் நீட்டினாலே உற்பத்தி பெருகும். 'பலவந்தத்தையும் கடும் வரி விதிப்பையும் விடுத்து உற்பத்திக்கு உதவ வேண்டும்' என்பதே சர்க்காரின் வழிகாட்டிக் கொள்கையாக இருக்க வேண்டும்.

சுதந்திரக்கட்சி ஆட்சி அதிகாரத்தைப் பெற ஆசைப்படவில்லை. கண்ணுக்கு மெய்யாகத் தோல்வி கண்ட காங்கிரஸின் கொள்கைகளுக்குப் பதில் நல்ல கொள்கைகள் நாட்டு நிருவாகத்தில் மேவ வேண்டும் என்பதே அதன் விருப்பம். சோஷலிஸம் என்றால் சமூக நலன் எனில், சுதந்திரக்கட்சி கூறுவதே அறிவுக்குப் பொருந்திய சோஷலிஸம்.

எதிர்க்கட்சிகள் அனைத்தும் ஐக்கியப்பட வேண்டும் என்று ஸ்ரீ மது லிமாயி கோருவதை நாம் இதயபூர்வமாக வரவேற்கிறோம். எனினும் இதில் சிந்தித்துப் பார்க்க வேண்டிய அம்சங்கள் உண்டு. சோஷலிஸச் சார்புள்ள எல்லாக் கட்சிகளிடமும் சர்க்கார் சர்வாதிபத்தியத்தில் சிறிதளவு நம்பிக்கையும், சுதந்திரத் தொழிலுரிமையில் சிறிதளவு அவநம்பிக்கையும் உள்ளன. இந்நிலை உள்ள வரையில் எதிர்க்கட்சிகளின் ஐக்கியம் எப்படி அழுத்தமாக அமைய முடியும்?

'அறியாத மக்களின் மீது தவறான சோஷலிஸ சித்தாந்தத்துக்கு நிரம்ப வசிய மிருக்கிறதே, அதை விடுவதா?' என்ற பயத்தை விடுத்து, சமூக நலன் என்ற உண்மை சோஷலிஸத்தை எதிர்க்கட்சிகள் யாவும் தழுவ வேண்டியது ஐக்கியத்துக்கு அவசியம். காங்கிரஸாட்சியில் மக்கள் அதிருப்தி அடைந்திருப்பது கண்கூடு. 'நீங்கள் வாழ்க்கை வசதிகளை அடைய முடியாமல் தடை செய்தது சர்க்கார் சர்வாதிபத்திய சோஷலிஸம்தான். இதை நீக்கினாலே பொருளாதாரம் செழிக்கும்' என்று மக்களுக்கு எடுத்துக் கூறினால் அவர்கள் புரிந்து கொள்வார்கள். தங்களது பொருளாதார மேம்பாட்டைத்தான் மக்கள் விரும்புகிறார்களேயன்றி எந்த அரசியல் கொள்கையையும் அல்ல.

அரசாங்கக் கட்டுப்பாடுகளால் தருமம் எப்படி அழியும் என்பதைப் பார்த்துவிட்டோம். இனியேனும் சுதந்திரத் தொழிலை ஆதரிப்பது பணக்காரருக்குப் பரிந்து பேசுவதே என்ற கருத்து மறைய வேண்டும். உற்பத்தியின் உயர்வை விரும்பியே தனி முதலீட்டாளருக்குச் சுதந்திரம் கோரப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். சர்க்கார் வர்த்தகம் புகுத்தப்பட்ட ஒரு துறையிலேனும் லாபகரமாக உற்பத்தி நடத்த முடியவில்லை என்பதைப் பிரத்தியட்சமாகக் கண்ட பின்னும் இதே தவற்றை நீடிப்பது எப்படிப் பொருந்தும்?

சுதந்திரமான தொழிலுரிமை; டில்லியில் அதிகாரம் குறைந்த சமஷ்டி சர்க்கார்; அண்டை நாடுகளுடன் நட்பு இம்மூன்றுமே தேசத்தைக் காக்கக்கூடிய கொள்கைகள். இந்த அடிப்படையிலேயே எதிர்க்கட்சிகள் அனைத்தும் ஒன்றுபட வேண்டும். தேர்தலில் காங்கிரஸ் பெற்ற தோல்வி அதோடு போகாமல், நாட்டுக்கு நல்லாட்சி உதயமாக வேண்டுமாயின் பகுத்தறிவு சார்ந்த உண்மை சோஷலிஸத்தையே எதிர்க்கட்சிகள் யாவும் ஏகோபித்து ஆதரிக்க வேண்டும்.

# நினைத்ததொன்று; நடந்ததொன்று

**பா**ரதமும், பாகிஸ்தானும் முதலில் நட்பு வழியில் நடவடிக்கை எடுத்துவிட்டு அதன் பின் பிரச்னைகளைத் தீர்க்க முற்படுவதுதான் புத்திசாலித்தனம் என்றும், பிரச்னைகளைத் தீர்த்துக் கொண்ட பின் நட்புச் செய்துகொள்ளுவது அசாத்தியம் என்றும் சமீபத்தில் ராஜாஜி எழுதினார். ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்களும் அயூப் கான் அவர்களும் நட்புப் பாதையில் அடிவைப்பது சாத்தியம் என்று நாமும் நம்பினோம். இச்சமயத்தில் நாம் நினைத்ததற்கு நேர்மாறாக ஒரு சம்பவம் நிகழ்ந்து, மறுபடி மன மாறுபாட்டை வலியுறுத்தத் தொடங்கி யிருக்கிறது.

அமெரிக்கா பாகிஸ்தானுக்கு மீண்டும் பெருமளவில் ஆயுத உதவி செய்ய முன் வந்திருக்கிறது. முன்பே இவ்வாயுதங்கள் இந்தியாவுக்கு எதிராகப் பிரயோகிக்கப்பட மாட்டா என்று அமெரிக்கா வாக்குறுதிகள் தந்தபோதிலும் அதன் வாக்குறுதிகளைப் பாகிஸ்தான் மீறி வந்திருப்பதை நாம் கண்டு விட்டோம். எனவே இப்போது அமெரிக்க ஆயுத உதவி குறித்து நாட்டில் கண்டனம் எழும்பி யிருக்கிறது. 'உயிராபத்தான கருவிகளைப் பாகிஸ்தானுக்கு அளிக்க மாட்டோம். முன்பே தந்த உயிராபத்தான கருவிகளின் பழுதுபட்ட பாகங்களை மட்டுமே அளிப்போம். இவற்றையும் ஒரு மொத்தமாக அளிக்க மாட்டோம். ஒவ்வொரு அம்சம் குறித்தும் பரிசீலித்தே அளிப்போம்' என்றெல்லாம் அமெரிக்கா உறுதி சொல்லி யிருக்கிறது. எனினும் ருஷியாவுக்கோ சீனத்துக்கோ எதிராகப் பாகிஸ்தான் ஆயுதப்பிரயோகம் செய்யும் வாய்ப்பில்லாத இப்போது இந்த உதவியை அமெரிக்கா அளிப்பதால் என்ன விபரீதங்கள் எழுமோ என்ற கேள்வி எழும்பவே செய்கிறது.

பூகோள ரீதிப்படியும், அரசியல் அவசியப்படியும், பொருளாதாரத் தேவைப்படியும், மக்களின் நலனையொட்டியும் இணைந்து செயலாற்ற வேண்டிய இரு நாடுகளிடை மேலும் பிணக்கம் ஏற்படாமல் இறைவன் தான் காப்பாற்ற வேண்டும்!

# மணிவிழாக் காணும் மகனீயர்

**ஸ்ரீ** வைஷ்ணவ சமயசாரியர்களில் ஒருவராக பக்தி நெறியையும் அன்பு வழியையும் எடுத்தியம்பிவரும் ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவன் சுவாமிகள் இவ்விதழ் அட்டையில் சேவை சாதிக்கிறார்கள். சுவாமிகளின் ஷஷ்டியப்தபூர்த்தியை யொட்டி, அவரது திருப்பணிக்குத் தலைநகராக விளங்கும் ஸ்ரீரங்கத்தில் மணிவிழாக் கொண்டாடி வருகிறார்கள். இச்சமயத்தில் அப் பெரியாருக்கு நமது வந்தனங்களையும் அளித்து, அவர் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்திருக்க ஸ்ரீரங்கநாதனைப் பிரார்த்திக்கிறோம்.

# என்ன சேதி?

"சிவனருட் செல்வர்"
நேரு சமாதானப் பரிசு
"தமிழ் நாடு அரசு"
பெருந்தொண்டரின் பிரிவு
இந்தியா ஒன்றுதானே?

வேத நெறிகளுள் வாராத பிற சமய இலக்கியங்களில் ஈடுபாடு கொண்டிருந்த அநபாய சோழனுக்குச் சைவ சமய உணர்வைப் புகட்ட வேண்டும் என்பதற்காகவே அமைச்சர் சேக்கிழார் எழுதிய நூல் பெரிய புராணம். இதனில் சைவத்துக்கு மேம்பாடு தரப்படுவது மட்டுமின்றி எல்லா மதங்களுக்கும் பொதுவான ஒழுக்கத்தையும், இறையுணர்வையும் பெற்றிருந்த பெரியோர்கள் பலரின் உணர்ச்சி செறிந்த வரலாறுகள் தொகுத்து உரைக்கப்படுகின்றன. எந்நாட்டவர்க்கும் பொதுவான இறைவனது அருள் திறமும் இவ்வரலாறுகளின் வாயிலாக விரிகிறது. ஆண்டவனின் கருணையையும் அடியார்களின் பக்திப் பாங்கையும் நம் வாசகர் அனைவரும் உய்த்துணர வேண்டும் என்று விரும்பியே இச்சமய நூலைத் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் அநுபவ பூர்வமான விளக்கத்துடன் தித்திக்கும் உரை நடையில் "சிவனருட் செல்வ"ராக வாசகர்களுக்கு அளித்து வருகிறோம். இச் சரிதையில் பிற மதங்களைச் சைவ குரவர்கள் கண்டனம் செய்த சம்பவங்களும் உண்டு. இதனால் பிற சமயத்தினர் மனம் புண்படாமலிருக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம். அம்மதங்களை 'கல்கி' அவமதிப்பதாக அவர்கள் எண்ணலாகாது. எம்மதமும் சம்மதம் என்பதே நமது கொள்கை. எனினும் மூல நூலுக்கு இசையவே அதன் உரை நடையாக்கம் அமைய வேண்டும் என்பதைப் பிற சமய அன்பர்கள் அநுதாபத்துடன் புரிந்து கொள்ள வேணும்.

அவைதிகமான பிற சமயங்கள் தமிழகத்தில் குன்றிச் சைவம் தலையெடுத்ததற்குச் சரித்திரமும் சான்று கூறுகிறது. இதைச் சரித்திரக் கண்ணோட்டத்துடனேயே பார்க்க வேண்டும். சைவ சமயக் கருத்துக்களும், சிவாசாரியர்களின் பர மத கண்டனங்களும் ஒருபுறமிருக்க, மொத்தத்தில் 'சிவனருட் செல்வரில்' இடம் பெறும் சீரிய பாத்திரங்களின் பக்தி உணர்வையும், புனித வாழ்முறையையும் எல்லா சமயத்தினரும் அன்புக் கண்ணோடு பார்த்துப் பயன் பெற முடியும் என நம்புகிறோம்.

நேரு சமாதானப் பரிசைப் பெறவே ஏற்பட்டவர் ஊதாண்ட் என்று சொல்லலாம்; அல்லது ஊதாண்டுக்கு அளிப்பதற்கென்றே ஏற்பட்டது நேரு சமாதானப் பரிசு என்றும் சொல்லலாம். பரிசும் பரிசு பெறுபவரும் உலகமே ஏகமனதாக ஏற்கும் வண்ணம் பரஸ்பரம் பொருத்தம் பெற்றிருக்கின்றனர். ஒன்றையடுத்து ஒன்றாகப் பெரிய தலைவலிகளைச் சமாளிக்க வேண்டிய பொறுப்பு ஐ. நா. சபைக் காரியதரிசிக்கு உண்டு. அந்தப் பொறுப்பை எவ்வளவு அந்தரங்க சுத்தத்துடனும், உலக அமைதியில் ஈடுபாட்டுடனும் ஊதாண்ட் அவர்கள் ஆற்றி வருகிறார் என்பது அனைவரும் அறிந்த விஷயம். அனைவரும் அறிந்த விஷயத்துக்கு ஓர் அற்புதமான உருவமாகவே ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள், ஊதாண்டுக்கு நேரு சமாதானப் பரிசைப் புதுதில்லியில் அளித்தார். பரிசுத் தொகையாகிய ஒரு லட்ச ரூபாயை நேரு அவர்களின் ஆன்மாவுக்கு மிகவும் உகந்த குழந்தை நலனுக்காக ஊதாண்ட் அள்ளிக் கொடுத்திருப்பது அவரது உதார குணத்தை எடுத்துக் காட்டுகிறது.

'சென்னை சர்க்கார்' என்பதைத் 'தமிழ் நாட்டு அரசு' என்றோ 'தமிழக அரசு' என்றோ தான் தமிழாக்க வேண்டுமேயன்றி, 'தமிழ் நாடு அரசு' என்றல்ல எனச் சென்ற இதழில் எழுதியிருந்தோம். இவ்விதழ் வெளியாகு முன்பே, சம்பந்தப்பட்டவர்கள் பிழையைத் திருத்தித் 'தமிழக அரசு' என்று பெயர்



சூட்டி விட்டனர். பெரிதும் மகிழ்கிறோம்.

இனியும் அரசாங்கம் 'தமிழ் நாடு' அரசாகவே இருக்கும் எனவும் நம்புகிறோம்—'தமிழ் நாடு அரசு' என்றால் 'தமிழை நாடுகிற அரசு' என்றும் அர்த்தம் கொள்ளலாமன்றோ?



ஏழைக் குழந்தைகளுக்குக் கல்வியும் தொழிலும் நன்னடத்தையும் ஒருங்கே புகட்டி வரும் அற்புத நிறுவனமாகிய வாலாஜாபாத் ஹிந்துமத பாடசாலை அதன் பொன் விழாக் கொண்டாட வேண்டிய தருணத்தில், அப் பொற்பணியின் சிற்பியாகிய திரு மாசிலாமணி முதலியார் அவர்கள் மறைந்தது மிகவும் துர்ப்பாக்கியம். பெயருக்கேற்ப மாசற்று வாழ்ந்தவர் அவர். முதலியாரவர்களின் தொண்டார்வமும் தொழிலூக்கமும் தெய்வ பக்தியும் காண்பதற்கரியன. தாம் எடுத்த காரியத்தைச் செவ்வனே சாதித்து முடித்த பெருமையுடன் அப் பெரியவர் மறைந்து விட்டார். அவரது பணி என்றும் அவருக்கு நினைவுச் சின்னமாக நிற்கும்.

தேசிய உணவுக் கொள்கை, தேசிய உணவு பட்ஜெட் என்றெல்லாம் சிறிது காலத்துக்கு முன் வானளாவ முழக்கப் பட்டு வந்தது. ஆனால் தேசம் முழுவதும் ஆவலுடன் எதிர்பார்த்த முதன் மந்திரிகள் மாநாட்டில் இவை குறித்து உருப்படியாக ஒரு முடிவும் எடுக்கப்படவில்லை. 'பழைய குருடி, கதவைத் திறடி' என்கிற பல்லவியுடன் முதல்வர்கள் திரும்பியுள்ளனர்.

குறுகிய பிரதேச நலன்கள் காரணமாக, இந்தியாவின் பல ராஜ்யங்களுக்கிடையே உணவுதானியங்கள் பரிவர்த்தனையாவதைச் சிலர் எதிர்க்கிறார்கள். இந்தக் குறுகிய நோக்கம் மேலும் வலுவாகி ஒரே ராஜ்யத்தில்கூட ஒரு மாவட்டத்திலிருந்து இன்னொரு மாவட்டத்துக்கு உணவுப்பொருட்கள் செல்வது தடை செய்யப்படுகிறது. இத்தகைய தடைகள் யாவும் நீக்கப்பட வேண்டும். இந்தியாவின் எந்த ஒரு பகுதியிலாவது பஞ்சமோ நோயோ ஏற்பட்டாலும், அது இந்தியா முழுவதற்கும் ஏற்பட்ட துர்ச்சம்பவம் என்ற உணர்ச்சி ஏற்பட்டு, அதற்குப் பரிகாரம் தேட வேண்டும். இந்தியாவின் ஒரு பகுதி பிறபகுதிகளின்மீது அநியாயமாக ஏகாதிபத்தியம் செலுத்த முற்பட்டால் அதை எதிர்க்க வேண்டியது அவசியமே. எனினும், எந்த ஒரு பகுதியிலும் கஷ்டம் ஏற்பட்டால் அதை நாடு முழுவதும் பகிர்ந்து கொள்ள வேண்டும். பஞ்சம் ஏற்பட்டு ஒரு பகுதி தவிக்கும்போது தேசம் முழுவதும் அதைத் தாங்க வேண்டும். பிரதேசப் பிரியர்களுக்கு இந்தக் கொள்கை ருசிக்காது. ஆனால் இந்தியாவை ஒன்றாக்கி, உட்பூசலிலிருந்து காக்கக்கூடிய கொள்கை இதுவே.

### காமகோடியின் கருணைமொழி

இன்றைக்கு நமக்குக் கிடைக்கும்படியான சாஸ்திரங்களை எல்லாம் ரட்சிக்க வேண்டும். நமக்குப் புரியவில்லை, உபயோகம் இல்லை என்று எதையும் ஒதுக்கிவிடக் கூடாது. நம்முடைய அசட்டுத்தனத்தினாலே, இருப்பதையும் இழந்துவிடக் கூடாது. அந்தக் காலம் என்றால் ராஜாக்களுக்கு அவற்றை ரட்சிப்பது பொறுப்பாக இருந்தது. இப்போது சர்க்காருக்கு நிம்மதியே இல்லை. ஒரு பக்கம் பாஷைச் சண்டை, இன்னொரு பக்கம் சாதிச் சண்டை. இப்படி ஒரே பூசல். குடும்பங்களுக்கும் ஒரே கஷ்டம். எப்படி வாழ்க்கை நடத்துவது, எப்படி ஜீவிப்பது என்ற ஒரே கவலை. என்றாலும் அலை ஓய்ந்துதான் ஸ்நானம் பண்ணுவது என்பது முடியாது. காட்டிலே சிங்கம் புலியை அடிக்கிறது. புலி மானை அடிக்கிறது. இருந்தாலும் அங்கே மான் குட்டி, புலிக்குட்டி எல்லாம் வளர்ந்து கொண்டும் விளையாடிக் கொண்டும்தான் இருக்கின்றன. நாளைக்கு என்ன செய்வோம், அடுத்த நிமிஷம் என்ன செய்வோம் என்று மனிதர்களைப் போல் அவை மனக் கஷ்டப்படுவதே இல்லை. நாமும் அந்த மாதிரி வைத்துக் கொள்ள வேண்டும். நேற்றைப் பற்றியும், நாளையைப் பற்றியும் எதற்காக அழுது கொண்டிருக்க வேண்டும்? எல்லாம் ஈச்வர சங்கல்பப்படி நடக்கிறது; நடக்கட்டும். இப்போது என்ன செய்ய வேண்டுமோ அதைக் கவனித்துச் செய்ய வேண்டும். நாமாகவே ஒன்று சேர்ந்து தனியாகவோ கூட்டமாகவோ நம்முடைய சாஸ்திரங்களையெல்லாம் ரட்சித்துக் கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும்.






கொள்கை காரணமாகவோ, அல்லது வேறு அவசியங்கள் காரணமாகவோ ரூபாய் நோட்டுக்களை அச்சடித்துச் செலாவணியில் உள்ள பணப் புழக்கத்தை அரசாங்கம் அதிகமாக்கிவிடுகிறது; கடனுதவிகளையும் அதிகப்படுத்துகிறது. கடனுதவியை அதிகரிப்பதாலும், நோட்டுக்களை அச்சடித்து வெளிவிடுவது போலவே பணப் புழக்கம் பெருகுகிறது. இவற்றின் பலனாக விலைவாசிகள் உயர்வதைத் தடுப்பதற்கில்லை. ஆனால் விலைவாசி உயர்வு மக்களிடம் எவ்வளவு அதிருப்தியை உண்டாக்குகிறது என்பதை அம்மக்களிடம் வோட்டைப் பெற வேண்டிய ஆட்சியாளர்கள் கவனிக்கிறார்கள். முக்கியமாக அன்றாடம் உபயோகமாகும் அத்தியாவசியப் பண்டங்களின் விலை உயர்வதால் மக்கள் எவ்வளவு அதிருப்தி அடைவார்கள் என்பதை ஆட்சியாளர்கள் கவனிக்கிறார்கள். உடனே 'விலை உயர்வைக் கட்டுப்படுத்துவோம்' என்று வாக்குறுதி தருகிறார்கள். அத்தியாவசியப் பண்டங்களை இன்னின்ன விலைக்கு விற்க வேண்டும் என்று விலை நிர்ணயம் செய்து உத்தரவு பிறப்பிக்கிறார்கள். மிகவும் கூர்ந்த கவனத்தோடு விலைகள் நிர்ணயம் செய்யப்பட்டாலும் கூட, இதனால் சிரமங்கள் ஏற்படத்தான் செய்யும். ஏனெனில் அத்தியாவசியமான ஒரு பண்டத்தின் விலை அதோடு முடிகிற விஷயமல்ல. ஆட்சி அதிகாரத்தைக் கொண்டு குறிப்பிட்ட சில பண்டங்களின் விலையைக் கட்டுப்படுத்தினாலும் அதன் விளைவாக ஏதோ ஒரு கட்டத்தில் பொதுவாகச் சகல பொருட்களின் விலைவாசிகளிலுமே சமநிலை மாறித் தடுமாற்றங்கள் உண்டாகும். முக்கியமாக உழைப்பின் விலை இவ்வளவுதான் என்று சர்க்கார் கட்டுப்படுத்த முடியாதபோது, உழைப்பாளிகளின் ஊதியப் பெருக்கம் காரணமாகப் பொருட்களின் விலையை அதிகப்படுத்தவே நேரிடும். இவைகளையெல்லாம் மீறி விலையைத் தீர்மானமாகக் கட்டுப்படுத்துகிறார்கள் எனில் அப்போது பொருளின் தரம் குறையத்தான் செய்யும். கறுப்புச் சந்தையும் ஏற்படத்தான் செய்யும். இதோடு நில்லாமல் இந்த அத்தியாவசியப் பண்டங்களை உற்பத்தி செய்தவர்களின் ஊக்கம் குறைந்து அவர்கள் நல்ல லாபம் தரக்கூடிய மற்ற பண்டங்களையும், போகப் பொருட்களையும் உற்பத்தி செய்யத் தொடங்குகிறார்கள். ஏழை மக்களின் அன்றாட உபயோகத்துக்கான பண்டங்களின் உற்பத்தியை இவ்வாறு குறைப்பது நல்ல கொள்கையாகுமா? எல்லோருக்கும் எல்லாப் பண்டங்களும் சரஸமான விலைக்குக் கிடைக்க வேண்டும் என்ற கருத்தில் செய்யும் விலைக் கட்டுப்பாடு அதற்கு நேர் எதிரான விளைவை—பண்டமே கிடைக்காத நிலையை—உண்டாக்கும். மொத்தத்தில் மக்கள் நினைக்கக் கூடிய அளவுக்கு விலைக் கட்டுப்பாடு என்பது நன்மை பயக்காது.

ஃஃஃ

முன்னேற்றத்தை விரைவுபடுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் சர்க்கார் அதிகாரிகளிடம் மிகுந்த பொருளாதார அதிகாரத்தைத் தருவது ஆபத்திலேயே முடியும். ஜனநாயக ஆட்சியில் அதிகாரத்திலுள்ளவர்களையும் கட்டுப்படுத்தத் தேவை உண்டு. அதிகார வர்க்கத்திடம் வரம்பில்லாமல் சக்தியைத் தந்துவிடக் கூடாது. பொருளாதாரத் துறையில் மக்கள் அனைவர் மீதும் ஆதிக்கம் செய்ய ஆட்சியாளருக்கு அநுமதி தந்ததன் விளைவாகவே ஒரு குறிப்பிட்ட கட்சியின் ஏகாதிபத்தியம் ஏற்பட்டதை அநுபவ பூர்வமாகப் பார்த்து விட்டோம். அதோடு அந்தக் கட்சிக்குள்ளேயே அதிகாரப் பிரயோகத்துக்காகப் போட்டி ஏற்பட்டு அதன் விளைவாகத் தார்மிகச் சீர்குலைவு உண்டானதையும் பார்த்து விட்டோம். பொருளாதார முன்னேற்றத்துக்காகவும், ஏழை மக்களின் வாழ்நிலையை உயர்த்துவதற்காகவும் திட்டங்கள் வகுக்கும்போது இத்திட்டங்கள் திறமையுடனும் விரைவாகவும் நிறைவேற்றப்படுமா என்று பார்த்தால் மட்டும் போதாது. இத் திட்டங்கள் காரணமாக ஒரு குறிப்பிட்ட கோஷ்டியே வரம்பற்ற அதிகாரம் பெற்றுத் தனது ஆட்சியை நிரந்தரமாக்கிக் கொள்ள இடமில்லாதவாறும் செய்ய வேண்டும். இல்லாவிடில் கொள்ளை லாப ஜாதி என்றே ஒன்று உருவாகிவிடும். யோக்கியர்களையும் திருடர்களாக்குகிற நிலை ஏற்படும்.

ஃஃஃ

இந்தியாவின் கோடாநுகோடி ஏழை மக்களுக்குத் தேவையான எரிசக்தியைத் தருவதில் மாட்டுச் சாணம் முதன்மை வகிக்கிறது என்று காலஞ்சென்ற டாக்டர் பாபா அவர்கள் கருதினாராம். இந்தியாவுக்கு மொத்தம் தேவைப்படும் 130 கோடி கிலோ வாட் எரி சக்தியில் 100 கோடி கிலோ வாட், சாணத்தை எரிபொருளாக உபயோகிப்பதிலேயே கிடைக்கிறது என்று தெரிய வருகிறது. இது மலைப்பூட்டும் புள்ளி விவரமாகும். மதிப்பு மிகுந்த உரமாகக் கூடிய சாணம் வீணாக எரிக்கப்படுகிறது என்று இது வரை நிபுணர்கள் கூக்குரலிட்டு வந்தனர். கிராம மக்களுக்கு அத்தியாவசியமான எரிசக்தி பெறுவதை 'வீண்' என்று சொல்வது சரியல்ல. கறவை மாடுகள் வைக்கோல் முதலியவற்றிலிருந்து மக்களுக்கு, முக்கியமாகக் குழந்தைகளுக்கு, பால் தயாரித்துத் தருகின்றன வெனில், 'உபயோகமற்ற' மாடும் மின்விசை வசதி பெற வொண்ணு மக்களுக்கு அதே நிவனத்திலிருந்து எரிசக்தியைத் தருகிறது.

# மணக் கோலம்



குடும்பச் சொத்தெல்லாம் கரைந்த பிறகு இரண்டும் கெட்டான் வயதில் வேலையை நாடிச் செல்லும் நிர்ப்பந்தம் சீதாவின் தகப்பனாரான சாம்பமூர்த்திக்கு உண்டாயிற்று. அவருடைய அரைகுறைப் படிப்புக்கு என்ன பிரமாத வேலை கிடைத்துவிடும்? எத்தனையோ கம்பெனிகள் ஏறி இறங்கினார். நிரந்தரமான வேலையோ பூரணமான ஊதியமோ இல்லாமல் பல வருடங்கள் தத்தளித்து விட்டுக் கடைசியில் கோதண்டராமனிடம் வேலைக்கு அமர்ந்தார். இதுவரையில் ஏழைமைக்கே இருக்கும் ஒரே சொத்தான சுய கௌரவத்தையும், தன்மானத்தையும் சாம்பமூர்த்தி இழந்ததில்லை. 'என்னிடம் வேலையில் இருந்தால் நிறையப் பணம் கிடைக்கும். ஆனால் அதையெல்லாம் நீ இன்னமும் லட்சியமாக வைத்துக் கொள்ள முடியாது!' என்று கோதண்டராமன் எடுத்த எடுப்பிலேயே கூறிவிட்டார்.

கோதண்டராமன் செய்யும் தொழில் நாணயமற்றது, ஆபத்தானதும் கூட என்று சாம்பமூர்த்தி சேர்ந்த சில நாட்களிலேயே அறிந்து கொண்டார் என்றாலும், அவரால் வேலையை விட்டுவிட முடியவில்லை. எடுத்த எடுப்பில் இருநூறு ரூபாய் சம்பளம் அவர் எதிர்பார்க்காத தொன்று. கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, கோதண்டராமன் சாம்பமூர்த்தியைத் தமது அந்தரங்கக் காரியதரிசியாக நியமித்து, முந்நூறு ரூபாய் சம்பளமும் கொடுத்தார். அன்றையிலிருந்து சாம்பமூர்த்திக்கு நாணயம், உண்மை, நியாயம் என்ற வார்த்தைகளின் அர்த்தங்களே தெரியாமல் போய் விட்டது. போலீஸை எப்படிக் கையில் போட்டுக் கொள்ளுவது என்ற கலையையும் வருமான வரி இலாகாவை எப்படி ஏமாற்றுவது என்ற சாஸ்திரத்தையும் கோதண்டராமனிடம் நன்றாகப் பயின்று, சிறந்த மாணவன் என்ற பெயரும் பெற்றார்.

---

**இதுவரை:** சாம்பமூர்த்தி - பார்வதி குடும்பத்தில் மூன்று பெண்கள் - சீதா, ஜானு, கமலா. ஒவ்வொருத்தியின் குணமும் ஒவ்வொரு மாதிரி. மூத்த பெண் சீதா குடும்பப் பொறுப்பை ஏற்கிறாள். ஜானுவுக்கு நாகரிகமாக வாழ வேண்டும் என்று ஆசை. கல்லூரியில் படிக்கும் கமலாவோ முழுச் சோம்பேறி. இந்த மூன்று பெண்களும் இருக்கும் குடும்பத்தில் வந்து தங்குகிறான் சந்தானம் என்னும் வாலிபன். கேட்க வேண்டுமா, கதை வளர?

---

ன்றாவது பரிசு நாவல்

**பி.வி.ஆர்**

பல வருடங்களாக இருண்ட வானம் போலாகி விட்ட தன் குடும்பத்தில் சூரியன் உதயமாவதை உணர்ந்தாள் பாகீரதி. அவள் எதிர்பார்த்ததைவிட அதிக வருவாயுடன் கணவர் வருவதைக் கண்ட அவள் தனக்கு விடிவு வந்துவிட்டது என்றே எண்ணினாள். ஒரு பெரிய பணக்காரருக்குத் தன் கணவர் அந்தரங்கக் காரியதரிசி என்றவுடன் எதிர்காலம் பிரகாசமாகக் கண் முன் நின்றது.

வீட்டில் நிறையப் பணம் புழங்கவே, தரித்திரம் இருந்த சுவடு தெரியாமல் மறைந்து போகவே, சீதாவின் கலியாணத்துக்கு இதுதான் தருணம் என்று பாகீரதி தன்னைத் தயார் செய்துகொண்டாள். பி.ஏ. பாஸ் செய்து செக்ரடேரியட்டில் இரண்டு வருடங்களுக்கு மேலாக வேலை பார்க்கும் வரன் வீட்டு மாப்பிள்ளையாகத் திகழும் நாளை அவள் எதிர்நோக்கினாள்.

நிச்சயமான கலியாணம் நடக்க இருபது நாட்கள் இருக்கும்போதுதான் பாகீரதி கண்டு மகிழ்ந்த சூரியோதயம் திடீரென்று அஸ்தமித்தது.



அவள் பார்த்த, உணர்ந்த விடிவே அஸ்தமனத்தின் ஆரம்பம் என்பதைச் சொல்லாமல் சொல்லிய விதியின் வலிமைக்குப் பாகீரதியால் ஈடு கொடுக்க முடியவில்லை. திடீரென்று சூறாவளியில் விழுந்த மரம் கேட்பாரற்றுக் கிடப்பது போல் குடும்பம் நின்றது. அது என்றுமே மீள முடியாதோ என்று பயப்படும் அளவுக்கு விதி துரத்தித் துரத்தி அடித்தது.

கோதண்டராமனின் காரியம் ஒன்றை முடித்து வரக் கான்பூர் சென்ற சாம்பமூர்த்தி திரும்பவேயில்லை. இறந்து போன மூன்றாம் நாள்தான்

சென்னைக்கே தகவல் வந்தது. மகள் கலியாணத்துக்கு வாக்களித்த பண உதவியைக் கோதண்டராமன் சாம்ப மூர்த்தியின் கடைசிக் காரியங்களுக்கு அளித்தார்.

பாகீரதி மீது திடீரென்று விழுந்த இடி அவளைக் கலக்கி விட்டது. விதி அவளை வஞ்சித்து விட்டது. நம்பிக்கை அவள் மனத்தை விட்டே அகன்றது. விவரிக்க இயலாத ஒருவித வெறுப்பும் விரக்தியும் மேலிட்டன. வாழ்க்கை என்பதே பொய் என்று வேதாந்திகள் என்னதான் சொல்லி அவள் கேட்டிருந்தாலும் வாழ்க்கையிலும் வாழ எவ்வளவோ இருக்கின்றன என்ற எண்ணம்தான் அவளுள் நிறைந்திருந்தது. ஆனால் கணவருடைய திடீர் மரணமும் அதனால் தடைப்பட்டுப் போன சீதாவின் கலியாணமும் நிர்க்கதியாக நிற்கும் மூன்று பெண்களின் நாதியற்ற நிலையும் அவளை ஒரு வெறுப்புக் களஞ்சியமாக மாற்றி விட்டன.

இந்த நிலையில்தான் மணக்கோலத்தில் நிற்கத் தயாராக இருந்த சீதா விழித்துக் கொண்டாள். தான் பெண்





அமெரிக்காவின் பிளாரிடா மாகாணத்தில் ஒரு விந்தையான மிருகக் காட்சிசாலை உள்ளது. அங்கே வேடிக்கை காண வரும் மக்களைக் கூண்டில் அடைத்து, வெளியே மிருகங்களைத் தன்னிச்சையாக உலவ விடுகிறார்கள். இதை வெகுவாக ரசித்துக் களிக்க மக்கள் திரளாகக் கூடுகிறார்கள். — க. குமரேசன்

---

ஞகை இல்லாமல் பெற்றோருக்கு ஒரு பிள்ளையாகப் பிறந்திருந்தால் என்ன செய்திருப்பாள்? தாயார் எதையுமே லட்சியம் செய்யாமல் தன் துக்கத்தில் மூழ்கியிருக்கிறாள். பதின்மூன்று வயது ஜானு, வெறும் பாவாடைக்கு மேல் ஒரு தாவணியைச் சுற்றத் துடிக்கிறாள். பத்து வயதுக் கமலா துக்கப்படவும் தெரியாமல் பள்ளிக்கூடத்துக்குப் போக அவசரப்படுகிறாள்.

சீதாவைப் பொறுத்தவரையில் வர வேண்டிய கணவன் வராமலேயே 'இறந்து' போய்விட்டான். அம்மாவுக்கு அப்படியில்லை. நிழலைத் தரும் மரமே சாய்ந்துவிட்டது. அம்மா தன் சோகத்தில் பெண்களை மறந்திருப்பது நியாயம் தான். ஆனால் சீதாவும் தன் ஏமாற்றத்தில் தன்னுள்ளேயே புதைந்து கிடந்தால் யார்தான் வீட்டைப் பார்த்துக் கொள்ளுவார்கள்? யார் தான் தங்கைகளை ஆதரவாக அணைத்துக் கொள்வார்கள்?

விழித்துக் கொண்ட சீதாவுக்கு, அதிர்ஷ்டவசமாக ஒரு வேலை கிடைத்தது. எஸ். எஸ். எல். ஸி. படித்த படிப்பைத் தொடர்ந்து அவள் கற்றுக் கொண்டிருந்த தட்டெழுத்து இப்போது உறுதுணையாக நின்றது. அவள் வேலையில் சேர்ந்தாள். தந்தையின் மரணத்தைக் காலம் என்னும் வெள்ளம் கொஞ்சம் கொஞ்சமாக மறக்கச் செய்தது.

மெல்ல, மெல்ல, பாகிரதி புதிய பாதையை ஏற்றுக் கொண்டாள். நாட்கள் ஓடின. அரிசிக்காரன் தெருவில் முப்பது ரூபாய்க்கு ஒரு வீடு கிடைக்கவே, குடி மாறினாள். பெண்ணின் வருமானம், மானத்தைக் காப்பாற்றியது.

சீதா வெறும் வேலையுடன் நிற்கவில்லை. தெரிந்த இரண்டு மூன்று குடும்பங்களில் சிறு குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தாள். காலையில் ஒரு மணி நேரம் சுருக்கெழுத்தும் பயின்றாள். நாட்களின் ஓட்டத்தில், உயிரற்ற அன்றாட நிகழ்ச்சிகளில் சீதாவுக்கே தான் எத்தகைய தியாகத்தைச் செய்து கொண்டிருக்கிறோம் என்று தெரியவில்லை. தெரிந்திருந்தாலும் அவளுக்கு அதை உணரும் சக்தி இருந்திருக்குமா என்பதும் சந்தேகம்தான்.

சீதாவின் அதிருஷ்டம் அவளுடைய வேலை உயர்ந்தது. வீட்டுச் செலவும் தங்கைகளின் படிப்புச் செலவும் அதிகமாக அதிகமாக அவற்றை ஈடு கட்ட ஓரளவு வரும்படியும் உயர்ந்தது. இந்த விஷயத்தில் அவள் என்னதான் திருப்தி அடைந்தாலும், தாயார் எந்தவிதமான சந்தோஷமும் பெறவில்லை. வயிற்றைக் கழுவவும், உடம்பைப் போர்த்தவும் மூத்த பெண் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு விட்டாள். இரண்டு தங்கைகளையும் காப்பாற்றி விட்டாள்.

ஆனால் இவை போதுமா? ஒரு பெண்ணின் வாழ்க்கை பிறந்த வீட்டில் வாழ்வதுடன் நின்று விடுகிறதா?

இந்த வேதனைதான் பாகிரதியை இந்தப் பத்து ஆண்டுகளாக அரித்து வருகிறது. அவளுடைய வேதனை எப்படி விலகும்? எப்போது விலகும்? இல்லை, பாகிரதி வேதனையுடன்தான் மடிந்தே போவாளா?

இருபத்தேழு வயதில் முன் நரை விழுந்த கேசத்துடன் கண்ணாடியை மாட்டிக் கொண்டு காரியாலயத்தில் உழைக்கும் சீதாவுக்கு வாழ்வு உண்டா? பிள்ளைப் பேற்றை நிறுத்திக் கொள்ள வேண்டிய வயதில் கன்னியாகவே நிற்கும் சீதாவுக்கு என்ன எதிர்காலம் இருக்க முடியும்? அதை ஏழைமை என்னும் வெள்ளத்தில் கரை காண முடியாமல் கைசோரக் கால் சோர நீந்தும் பாகிரதியால் எப்படி வகுக்க முடியும்?

சீதாவுக்கு மட்டும் ஓர் எதிர்காலம் நிச்சயமாகி விட்டால் பாகிரதிக்குக் கவலையே யில்லை!

ஜானுவின் அழகுக்கு அவளை எத்தனையோ நிறைந்த குடும்பங்கள் மருமகளாக ஏற்றுக்கொள்ளக் காத்து நிற்கும். கமலாவின் இளமையும் படிப்புமே எளிதில் ஒரு வரனைக் கொண்டு வந்து விடும்.

சீதாவுக்கு வாழ்வு இருக்கிறதா?

தெய்வம் என்னதான் அவளைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறது?

பாகீரதி தெய்வத்தைத்தான் நம்பி யிருந்தாள்.

**ம**ருதித் தெருவில் இறங்கிய சீதா மெள்ள நடந்தாள். பஸ்ஸில் பார்த்த குழந்தையை அவள் எப்போதோ மறந்தாகிவிட்டது. வீட்டுக்குப் போனதும் அம்மா காப்பியைக் கொடுத்துக் கொண்டே, இரண்டாம்தார வரனைப் பற்றிப் பேச ஆரம்பிப்பாள். அம்மாவுடன் நேருக்கு நேர் நிற்கும் போது என்னதான் அவள் மீது எரிந்து விழவேண்டும் என்று தோன்றினாலும் உண்மையில் இப்போது அவளை நினைத்தபோது சீதாவின் மனத்தில் இரக்கம்தான் உண்டாயிற்று. அம்மாவுக்கு வாழ்க்கையில் என்ன திருப்தியும் இன்பமும் இருக்கின்றன? பெண்கள் தங்கள் கணவன்மார்களுடைய நிழலை நாடிச் சென்றால்தானே ஒரு தாயாருக்கு ஜன்ம சாபல்யம் ஏற்படுகிறது. எல்லா அம்மாக்களையும் போலத்தான் சீதா, ஜானு, கமலாவின் அம்மாவும். இப்போது சீதாவின் கல்யாணத்தைப் பார்க்கத் துடிக்கும் அம்மா, அடுத்த வருஷம் ஜானுவுக்காக அலைபாய்வாள். அதற்குப் பின் கமலா ஒருத்திக்காக வாடிப் போவாள். அவளுடைய எண்ணமெல்லாம் பூர்த்தியாகி விட்ட பின் எல்லாப் பெண்களும் புக்ககங்கள் சென்ற பின் அம்மாவுக்கு வேறு என்ன இருக்கிறது, ஏங்கி நிற்க? அப்புறம் அவள் இந்த உலகிலேயே ஏகாங்கிதான். கல்யாணமான பின் என்னதான் பெற்ற பெண்களாக இருந்தாலும் கடைசி வரையில் தாயாரைப் பெண்களால் பார்த்துக் கொள்ள முடியுமா?

அம்மா ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அநாதையாகி விடுவாள். தான் அப்படிப்பட்ட நிலையை அடைவோம் என்று தெரிந்தும் பெண்களின் வாழ்வுக்காக அம்மா ஏங்கி ஏங்கித் தவிக்கிறாள்.

இதை நினைத்துத்தான் சீதா இப்போது மனம் வருந்தினாள்.

**சீ**தா வீட்டை அடைந்தபோது மணி ஏழு.

அம்மா கோவிலுக்குப் போனவள் இன்னும் திரும்பி வரவில்லை, காலை நீட்டிக் கொண்டு முற்றத்துத் தூணில் சாய்ந்தவாறே கமலா ஏதோ ஒரு புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஜானு ஓர் இந்திப் பாட்டில்

மீனும் நீரும்!



மீனை வாழ வைப்பதே நீர்தான். நீரில் இருந்தால்தான் மீன் உயிர் வாழ முடியும். ஆனால் அதே நீர் மீனுக்கு யமனாகவும் அமைந்து விடுகிறது. மீன் பிடிப்பவன் வலை வீசினால் மீனோடு நீரும் வலையில் சிக்குகிறது. ஆனால், மறுகணமே மீனை மட்டும் வலையில் சிக்க வைத்து விட்டு நீர் மட்டும் வலையின் துவாரங்களின் வழியாக வெளியே வந்து விடுகிறது.

- ஒரு வடமொழி கவிதை

---

தன்னைப் பறி கொடுத்தவள், சீதா வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை.

"கமலா....!"

"என்ன அக்கா?"

"எனக்குத் தலை ரொம்ப வலிக்கிறது....கொஞ்சம் காப்பி கலந்து தர்றியா?"

"என்ன அக்கா! இப்போதான் சாதத்தை இறக்கி வைத்து ஸ்டவ்வை அணைத்தேன். ஜானு, அக்காவுக்குக் காப்பி வேணுமாம். கொஞ்சம் போய்க் கலந்து கொடேன்..."

"உன் கிட்டேதானே சொன்னாள். நீயே கொடு..."

"இந்த அத்தியாயம் ரொம்பச் சுவாரசியமா யிருக்குடி..."

"இந்தப் பாட்டு ரொம்ப ஜோரா இருக்கு...."

இரு தங்கைகளையும் மாறி மாறிப் பார்த்த சீதா கைப் பையை மேஜை மீது வைத்துவிட்டு, உள்ளே சென்றாள்.

"பாவம், அக்காவே கலந்து குடிக்கப் போகிறாள் போலிருக்கு!"

கமலாவின் வார்த்தைகள் சீதாவின் காதுகளில் ஸ்பஷ்டமாக விழுந்தன. ஆனால் அவள் வாயைத் திறக்கவில்லை.

"இருந்தாலும் உனக்கு ஆகாத்தியம் கூடாது, ஜானு!"

"ஏய்... கொஞ்சம் மூடு வாயை. அவ என்னைப் பார்த்தா கேட்டாள்? அவ்வளவு கரிசனம் இருந்தால் நீயே போறதுதானே காப்பி கலந்து கொடுக்க..."

''யாருகிட்டே கேட்டால் என்ன? நான்தான் சாதத்தை வடிச்சேனே. நீதான் ஒரு துரும்பைக்கூட இந்த இடத்திலிருந்து அந்த இடத்துக்குப் போட மாட்டாய். உன் சுபாவமே அப்படி...''

''நீ ஒண்ணும் என்னை எடை போட வேண்டாம்...''

''எடை போட ஒருத்தன் வருவான்னு சொல்றியாக்கும்...''

''சரிதான் போடி.... மார்ச்—செப்டம்பர் மார்ச்...''

''ஏதாவது பதில் சொல்ல வரலேன்னு இந்தப் பாட்டைப் பாடு. அதுதான் உனக்குத் தெரியும்.''

''சரி, சரி போதும். உன் திருவாயை மூடிண்டு இரு...''

இவர்களுடைய யுத்தம் இப்படி நடக்கையில் அம்மா திடீரென்று பிரவேசம் செய்தாள்.

''சீதா வந்தாச்சா கமலா?''

''உம்... எல்லாம் வந்தாச்சு!''

''எங்கே?''

'' காப்பி கலந்து தரட்டுமான்னு கேட்டான், வேண்டாம்னு அக்கா ! நான் கலந்து தரேன் அக்கான்னு இவ கெஞ்சினா .... 'வேண்டாம், கமலா! நீ அந்தப் புஸ்தகத்தைப் படி...ரொம்பச் சுவாரசியமாக இருக்கும்'னு சொல்லிவிட்டு அக்கா உள்ளே போனாள். இதுதானம்மா இங்கே இப்போ நடந்தது'' என்றான் ஜானு.

அவளுடைய நையாண்டி, கமலா ஆத்திரத்துடன் எழுந்த போதுதான் பாகீரதிக்குப் புரிந்தது.

''அம்மா! இந்த ஜானுவுக்கு வரவரத் திமிர் அதிகமாயிண்டு வர்றது. நீயோ அக்காவோ அடக்கவில்லேன்னு ஆபத்தாய்ப் போயிடும்...''

நிதானமாகப் பாகீரதி, ''ஏன் உன்னால் முடியுமானால் அந்தக் காரியத்தைச் செய்யேன்'' என்றாள்.

ஜானு சிரித்துக் கொண்டே ''இப்போதைக்குக் கமலா படையெடுப்பில் கவனமாக இருக்கிறாள். அடுத்த செப்டம்பருக்கும் மார்ச்சுக்கும் இப்போதே அட்வான்ஸாகப் பணம் கட்டப் போகிறாளாம். அதிலே ஏதோ சலுகை கூட இருக்காம்'' என்றாள்.

''சரிதான் போதும், நிறுத்துங்கடீ.''

சமையலறையிலிருந்து திரும்பிய சீதாவிடம், ''காப்பி சாப்பிட்டாயா சீதா?'' என்று கேட்ட பாகீரதி ''இன்னிக்குக் கோவிலிலே தீபாராதனை கொஞ்சம் தாமசமாகப் போயிடுத்து'' என்று மன்னிப்புக் கோரும் பாவனையில் கூறினாள்.

எங்கே கலியாணப் பேச்சை அம்மா ஆரம்பிக்கப் போகிறாளோ என்ற பயத்தில் சீதா ரேடியோவைத் தாண்டிச் சந்தானத்தின் அறைக்கு நேர் எதிரே இருந்த அறையை நோக்கிச் சென்றாள்.

கமலா, ''அம்மா! திருவல்லிக்கேணி ஜோஸியர்கிட்டே அலமேலு மாமியோடு போன விவரத்தை அக்காகிட்டே சொல்லலியா?'' என்றாள் சீதாவின் தலை மறையுமுன்.

''நீ தூங்கினப்புறம் சொல்லலாம்னு இருக்கா'' என்றாள் ஜானு.

இரு தங்கைகளும் என்ன வேண்டுமானாலும் பேசிக் கொள்ளட்டும் என்று சீதா அந்த அறைக்குள் மறைந்தாள். அம்மாவும் திண்ணையில் நல்ல காற்று வரும் என்ற எண்ணத்தோடு வாசற் பக்கம் சென்றாள்.

## அத்தியாயம் 3

மூந்தின இரவு பன்னிரண்டரை மணிக்கு வீடு திரும்பிய சந்தானத்துக்கு வெகுநேரம் தூக்கம் வரவில்லை. ஃபண்டாபீஸ் மணி ஒன்று, ஒன்றரை, இரண்டு என்று அடித்துக் கொண்டேயிருந்தது. பாகீரதி அம்மாள்தான் அவனுக்கு ஒரு சிறு வேலையைக் கொடுத்திருந்தாள். ஆனால் போன இடத்தில், யாரைத் தேடிக் கொண்டு சந்தானம் சென்றானோ, அவரை ஏற்கனவே ஏழெட்டு வருடங்களுக்குமுன் அவனுக்கு இன்னொரு நண்பன் மூலம் தெரியும் என்ற திருப்தி உண்டாயிற்று. அவர் பழைய கதைகளையெல்லாம் பேசிப் பேசி, பன்னிரண்டு மணி வரை இழுத்து விட்டார். அவர் போட்டுப் போட்டுத் துப்பிய வெற்றிலை புகையிலையை இப்போது நினைத்த போதும் சந்தானத்துக்கு வெறுப்புத்தான் தோன்றியது.

இரண்டரை மணிக்கு மேல் சந்தானம் தூங்க ஆரம்பித்தான் என்றாலும், என்றும்போல ஐந்து மணிக்கே எழுந்து விட்டான். அதிகாலையில் எழுந்திருக்கும் பழக்கம் கூடப் பிறந்தது போல நிலைத்து விட்டது அவனிடம். படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு, பிரஷில் பற்பசையை ஒட்டியபடியே, தோளில் துண்டைப் போட்டவனாய், கிணற்றடியை நோக்கி நடந்தான்

கூடத்தில் விளக்கு இல்லை. இன்னும் விடியாத அதிகாலை. சந்தானம் மெது

யாக நடந்தான். படுக்கை அறையில் மூன்று பெண்களில் ஒருத்தி இலேசாகக் குறட்டை விடும் ஒலி கேட்டது. எல்லாரையும் விடப் பருமனான கமலாதான் இப்படிக் குறட்டை விடு கிறாள் என்று தன்னுள் நினைத்துக் கொண்டே சந்தானம் தாழ்வாரத்துக்கு வந்தான். சமைய லறை விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பாகீரதி அம்மாளின் சிவப்புச் சுங்கிடிப் புடவை அவன் கண்களில் பட்டது.

'ஜில்'லென்று குளிர் காற்று முகத்தில் வீச, அவன் கிணற்றடியில் இருந்த குடத்தைப் பார்த் தான். அதில் ஏற்கனவே தண்ணீர் இருக்கவே, பாகீரதி அம்மாள்தான் வைத்திருக்க வேண்டும் என்ற நினைப்பில், செம்பில் ஊற்றினான். பல் தேய்க்கும் போது, கண்கள் மாமரத்தைப் பார்த்தன. சமையலறையின் மங்கிய வெளிச்சத் தில், மாமரத்தின் பிரும்மாண்டமான உருவம் தான் தெரிந்ததே தவிர, வேறு ஒன்றும் கண் ணுக்குத் தெரியவில்லை. ஆனால் அன்று சாயங் காலம் அவன் பார்த்த கோடிக்கணக்கான மாம் பூக்கள் நினைவுக்கு வந்தன. இந்தக் கோடிக் கணக்கான பூக்களில் சில நூறுகளே பூத்ததின் பயனை அடையப் போகின்றன. மற்றவையெல் லாம் காற்றிலே பறந்தும், மண்ணிலே விழுந்தும் மடியப் போகின்றன! இந்த எண்ணங்கள் எழுந்த போது பாகீரதியின் மூன்று பெண்களும் மனக் கண் முன்னால் வந்து நின்றார்கள். இந்த மூன்று பேரும் எந்த வகையைச் சேர்ந்தவர்கள்?

காற்றிலே பறந்தும், மண்ணிலே விழுந்தும்.

அவன் முகத்தைத் துடைத்துக் கொண்டே திரும்பிய போது, முற்றத்துத் தூண் அருகே பால் பாட்டில்களும் கார்டும் இருந்தன. சித்திரக் குளம் பால் டெப்போவிலிருந்து காலை நேரத்தில் பால் வாங்கும் பொறுப்பை அவனாகவேதான் ஏற்றுக் கொண்டான். பாகீரதி அம்மாளால் சமையலறையை அநாதையாக விட்டு விட்டுச் செல்ல முடியாது. இரவெல்லாம் ஆபீஸ் பைல் களில் உயிரை விடும் சீதா ஆறரை மணிக்கு முன்பே எழுந்திருக்க மாட்டாள். ஜானு, கமலா இவர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். எழுந்திருந்ததும் எழுந்திருக்காததுமாய்ச் சுடச் சுடக் காப்பி தொண்டையில் விழுந்தால்தான் ஜானுவால் வேறு எதைப் பற்றியும் நினைக்கவும் முடியும். கமலா 'காலேஜ்' பெண். பால் பாட் டில்களுடன் தெருவில் நடப்பதே அநாகரிகம் என்று நினைக்கிறவள். போதாததற்கு முழுச் சோம்பேறி வேறு.

**பா**லுடன் சந்தானம் திரும்பியபோது மணி ஐந்தரை. திண்ணையில் கிடந்த 'ஹிந்து'ப் பத்திரிகையை எடுத்துக் கொண்டு அவன் உள்ளே சென்றான். பாலுக்காகவே காத்திருக்கிறவளைப் போல் கூடத்தில் நின்று கொண்டிருந்த பாகீரதி பால் பாட்டில்களை வாங்கிக்கொண்டாள்.

"சந்தானம், இதோ அஞ்சு நிமிஷத்திலே காப்பியைக் கொண்டு வர்றேன்."

சந்தானம் பதில் ஏதும் சொல்லவில்லை. கடந்த பல வருடங்களாகத் தினம் தினம் அவளும் தான் இப்படிச் சொல்லுகிறாள். எங்கே அவன் அவசரப்பட்டு, பொறுமையை இழக்கிறானோ என்ற பயம் அவளுக்கு. ஆரம்ப நாட்களில், அவனைப் பூரண மாகத் தெரிந்து கொள்ளாத போது, இம்மாதிரி பயம் உண் டாவது சரியாக இருக்கலாம். ஆனால் அவனை இப்போது நன்றாகப் புரிந்து கொண்டுள்ள பாகீரதி இன்னமும் இப்படிச் சொல்லுவானேன்? ஒரு வேளை பழக்க தோஷமோ? (தொடரும்)

---

இந்தப் படத்தில் தலைப்பாகையும் இளமையும் கொண்டு துலங்கும் இவரை யாரென்று உங்களால் அடையாளம் கண்டு கொள்ள முடிகிறதா? ரொம்பக் கஷ்டமான காரியம்தான். என்ன செய் வது? 27ம் பக்கத்தைப் புரட்டிவிடுங்கள். கஷ்டம் தீர்ந்துவிடும்.



# சென்னையில் அமெரிக்க மாதர்

**அ**ன்று என் மனைவியைப் பார்த்து, "சமையல் சற்றுச் சீக்கிரம் ஆகட்டும். நான் மாதர் சங்கம் ஒன்றுக்குப் போகப் போகிறேன்!" என்றேன்.

"கலி நன்றாகத்தான் முத்திப் போச்சு, மாதர் சங்கத்துக்கு ஆண் பிள்ளைகள் போகிற அளவுக்கு!" என்று முகத்தைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டாள். ஆனால் நல்ல வேளை, சட்டுப்புட்டென்று சமைத்துப் போட்டு என்னை விரட்டி விட்டாள். அவளுக்கு எங்கே அப்பளக் கச்சேரியோ, யார் கண்டார்கள் ?

சமூகப் பணிகள் பல புரியும் மாதர் சங்கம் ஒன்றின் செயலாளரைப் பேட்டி காணச் சென்ற எனக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது. ஒரு பெண்மணிக்குப் பதிலாக ஆறு பெண்மணிகள் அங்கே உட்கார்ந்திருந்தார்கள் ! ஒரு பெண்ணைப் பேட்டி கண்டு அவர் சொல்வதை யெல்லாம் சரியாக வாங்கிக் கொண்டு, அதை எழுத்தில் வடிப்பதே சிரமசாத்தியமான காரியமாயிற்றே. இத்தனை பெண்மணிகளும் பேசப் பிடித்துக் கொண்டு விட்டால், நம் மண்டையில் யார் பேச்சுத்தான் ஏறும்? இப்படி எண்ணி மதி இறங்கிய நான், 'பேசாமடந்தை' யென அமர்ந்து விட்டேன்.

ஸ்ரீமதி பிராங்களின், ஸ்ரீமதி டியர் பீல்டு, ஸ்ரீமதி கால்ட்வெல், ஸ்ரீமதி ஜோசப் — இப்படி அங்கு கூடியிருந்த அமெரிக்க மாதர்கள் அனைவருமே பல ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து நம் நாட்டுக்கு வந்தவர்கள். 1957ம் ஆண்டு தொடங்கப்பெற்ற அமெரிக்க மாதர் சங்கத்தின் இந்த ஆண்டுக்கான நிர்வாக அலுவலர்கள். ஊர், பெயர் தெரியாத இடத்துக்கு வந்திருக்கிறோமே, ஒன்று கூடி அளவளாவ ஒரு பொது இடம் இருக்கட்டுமே என்று இப்படி ஒரு சங்கத்தை நிறுவியிருப்பார்களோ என்று எண்ணினால், நாம் தப்புக் கணக்குப் போட்டவர்களாவோம். காரணம், தன் மொழி, தன் இனம், தன் கலாசாரம் — இவற்றைக் காக்க வேண்டும் என்ற குறுகிய நோக்கோடு இச்சங்கம் செயல்பட வில்லை. சென்னையில் நிறுவப்பட்டிருக்கும் அமெரிக்க மாதர் சங்கம், நம் நாட்டுப் பண்புகளை, கலைகளைக் கண்டு ரசிக்க விரும்புகிறது. நம்மிடம் உள்ள நற்பண்புகளைக் கற்றுத் தேறவும் தங்களிடமுள்ளவற்றை நமக்குத் தரவும் முன்வந்துள்ளது. இத்துடன் ஏழை எளியோருக்கும் பிணியாளருக்கும் உதவும் வகையில் சமூக சேவை புரியவும் விரும்புகிறது. இந்த நல்ல நோக்கங்களின் காரணமாக, நம் நாட்டில் இயங்கி வரும் பல மாதர் பணி மன்றங்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டு இயன்ற அளவு உதவவும் அவா கொண்டுள்ளது. எனவே, இச்சங்கத்தின் அமைப்பு அதற்கேற்ற வகையில் உருவாகியுள்ளது. இந்தச் சங்கத்தின் அங்கத்தினர்கள் மாற்றலாகி வேறு ஊர்களுக்குப் போய்விடலாம், அல்லது தங்கள் நாட்டுக்கே திரும்பிவிடலாம். ஆயினும் அவர்களுக்குப் பதிலாக வருபவர்கள் இந்தச் சங்கத்தின் பணி சிதறாத வண்ணம் செயல்படுவார்கள்.

**அமெரிக்க மாதர் சங்கம் ஒன்று சென்னையில் இயங்குகிறது : அதுபற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்வோமா?**



**ஊ**ட்டியம் தொராம்பாக்கம் என்று ஒரு சிற்றூர். தாழங்குடை முடைவதும், பரிசலோட்டுவதும் இவ்வூர்வாசிகளின் வயிற்றுப் பிழைப்பாயிருந்து வந்தது. ஆற்றுக்குப் பாலம் கட்டப்பட்டுப் பஸ்களும் ஓடத் தொடங்கவே இவ்விரு தொழில்களும் நசித்து விட்டன. மக்களும் கல்வி வாசனையற்றவர்களாக இருந்தார்கள். ஸ்ரீமதி மேரி பக் என்னும் அமெரிக்கப் பெண்மணி— ஸிம்ப்ஸன் கம்பெனிக்குச் சுகாதார டைரக்டராக இருந்தவர் — இக்குறையைப் போக்க ஒரு சிறு கல்வி நிலயம் நிறுவினார்கள். ஆப்பிரிக்க மார்க்கெட்டுக்கு ஏற்றுமதி செய்யக் கூடிய அளவில் எம்பிராய்டரி வேலைப்பாடு அமைந்த துணிகள் தயாரிக்கவும், பால் பண்ணை நிறுவவும் இக்கிராமம் அமெரிக்க மாதர் சங்கத்தின் ஒத்துழைப்பைப் பெற்றது.

காலடிப்பேட்டை என்று ஒரு கிராமம். சமீபத்திய புயலில் பாலைவனமென உருமாறி விட்டது. அங்கிருக்கும் பள்ளிக்குச் சமையல் விடுதியும், காய்கறித் தோட்டமும் அமைத்துக் கொடுக்கும் பொறுப்பை இரு இளம் அமெரிக்கர்கள் ஏற்று, தொழி

லாளர்களோடு தொழிலாளர்களாக வேலை செய்து வெற்றி கண்டிருக்கிறார்கள். அங்கேயே தங்கிப் பணி புரிந்தும் வருகிறார்கள்.

ஸ்திரீசேவா மந்திர், ஆதரவிழந்த பெண்கள், விதவைகளுக்குப் புனர்வாழ்வு அளிக்கக்கூடிய விதத்தில் கல்வி புகட்டி வருகிறது. அமெரிக்க மாதர் சங்கம் அதன் தேவைகளையும் உணர்ந்து உதவி வருகிறது.

அடையாற்றில், சேவா சமாஜத்தின் பெண்கள் விடுதியின் சார்பாக ஒரு நவீன முறை 'பேக்கரி' திறக்கப்பட்டிருக்கிறது. ஜெர்மன் கான்சலேட் ஒருவரின் மனைவியின் முயற்சி இது. மின்சார சாதனங்கள் பொருத்தப்பட்டுச் சிறப்பான முறையில் இயங்கும் இந்தப் பேக்கரியில் தயாரிக்கப்படும் ரொட்டி முதலிய தின்பண்டங்கள் ருசிக்குப் பெயர் போனவை.

செரியன் நகர் என்னும் நகர்ப்புறத்து மக்கள் இந்தச் சங்கத்தின் ஆதரவோடு தையல் வேலை கற்றுப் பிழைக்கிறார்கள். தையல் இயந்திரங்களும் ஊசிகளும் 'கேர்' நிறுவனத்தின் மூலம் இவர்கள் சங்கத்துக்கு நன்கொடையாக வழங்கப்பட்டுள்ளன. ஏழை எளியவர்களுக்கு இலவசப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இன்னும் பல விவரங்களையும் ஒருவர் மாற்றி ஒருவராக விளக்கும் வகையில் எடுத்துச் சொன்னார்கள். கேட்டபின் இவர்களுடைய ஆதரவோடு நடைபெறும் ஓரிரு பணி மன்றங்களையாவது பார்வையிட வேண்டும் என்ற எண்ணம் மனத்தில் எழுந்தது. அதை அவர்கள் எப்படித்தான் புரிந்து கொண்டார்களோ, "நீங்கள் விரும்பினால் இரண்டொரு இடங்களுக்கு உங்களை நாங்களே அழைத்துச் செல்கிறோம்!" என்றார்கள்.

அவர்கள் முதலில் அழைத்துச் சென்றது மங்களாபுரம். இது எங்கே இருக்கிறது என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா ? வேறு எங்கும் இல்லை, சென்னை நகரத்தில் சேத்துப்பட்டுப் பகுதிக்குள்ளேயே இருக்கிறது!

ஏறக்குறைய 9000 குடிசை வாழ் மக்கள் இந்தப் பகுதியில் இருக்கிறார்கள். குடும்பத்தில் உள்ள ஆண் பெண் இருவருமே உழைத்துப் பிழைக்கிறவர்கள். குடும்பம் என்று ஒன்று ஏற்பட்டு விட்டால், குழந்தைகளும் இருக்கக் கூடும் அல்லவா? பால் மணம் மாறாத குழந்தைகளையும், தளர் நடை போடும் சிறுவர் — சிறுமிகளையும் வேலைக்குப் போகும் இடங்களுக்கு அழைத்துச் செல்வதென்றால் சிரமந்தானே ?

இவர்களது சிரமத்தைக் குறைக்க மங்களாபுரத்தில் ஒரு சிறுவர் பராமரிப்பு விடுதி இருக்கிறது. வேலைக்குச் செல்லும் பல பெண்மணிகள் விடுதி திறப்பதற்கு முன்பாகவே கூடத் தங்கள் குழந்தைகளைக் கொண்டு வந்து ஆளோடியில் போட்டு விட்டுப் போய் விடுகிறார்கள் என்றால், இதன் சிறப்பான பணியில் அவர்களுக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்பது விளங்குகிறதல்லவா? பாலூட்டிச் சீராட்டி விளையாட்டுக் காட்டி இவர்களைப் பார்த்துக்கொள்ளும் பொறுப்பு இப்பணி மன்றத்தைச் சேர்ந்த தாதிமார்களுடையது.







பக்கத்து அறையில் ஒரு நர்ஸரிப் பள்ளி. பேசிப் பழகும் குழந்தைகளுக்குப் படிப்போடு மதிய உணவு, பால் ஆகியவையும் தருகிறார்கள். ஏன், மாற்றுடை கூடத் தருகிறார்கள். ஆனால் ஒரு நிபந்தனை, வீடு திரும்பும் பொழுது, இவர்கள் தரும் உடையைத் திருப்பித் தந்துவிட வேண்டும்.

இவற்றை ஒட்டினாற்போல் மருத்துவ விடுதி ஒன்றும் இருக்கிறது. உடல் நலம் குன்றிய தாய்மார்களுக்கும் குழந்தைகளுக்கும் இலவச வைத்தியம் செய்கிறார்கள். மருந்து — மாத்திரைகளும் இனாமாகத் தருகிறார்கள். டாக்டர் ஜுகேரியா என்னும் பெண்மணி இந்தப் பணியை மேற்கொண்டிருக்கிறார். வலுக் குன்றி கால் ஊன்றி நடக்க முடியாத ஓரிரு குழந்தைகளுக்கு மாலிஷ், மருந்து ஆகியவை மூலம் சிகிச்சை புரிந்து ஓரளவு வெற்றியும் கண்டிருக்கிறார் இவர்.

அமெரிக்க மாதர் சங்கத்தின் உதவியைப் பெறும் இந்த மங்களாபுரப் பணியைக் கவனிப்பதில் ஸ்ரீமதி சீதா விசுவநாதனுக்கும் பெரும் பங்கு உண்டு. 'கில்ட் ஆஃப் சர்வீ'ஸின் ஆதரவில் நடைபெறும் இப்பணியின் சிறப்புக்குக் காரணம் ஸ்ரீமதி கிளப்வாலா ஜாதவ் அவர்கள்.

பாலவிஹாருக்கு ஸ்ரீமதி பிராங்கலினுக்குப் பதிலாக எங்களோடு வந்தவர் ஸ்ரீமதி வால்ட்வெல் ஆவார்.

அறைக்குள் நுழைந்ததுதான் தாமதம், எங்களைப் பல சிறிய — பெரிய குழந்தைகள் சூழாக மொய்த்து விட்டன. 'என்னை ஏன் சினிமாவுக்கு அழைத்துப் போகவில்லை?' — 'என்னை ஏன் படம் பிடிக்கவில்லை?'—இப்படியாக ஒரே கூச்சல்; ஆரவாரம் !

'ஆறு, ஏழு வயதிலிருந்து பதினேழு பதினெட்டு வயதுவரை உள்ள இந்தக் குழந்தைகளிடம், இந்த அமெரிக்க மாதர்கள் எப்படி நெருங்கிப் பழகியிருந்தால், இவர்களுக்கு இப்படி உறவு கொண்டாடத் தோன்றியிருக்கும்?' — இப்படி எண்ணி முடிக்கவில்லை, பாலவிஹார் சூப்பரின்டெண்ட் ஸ்ரீ பி. நாராயணன், ''இந்தக் குழந்தைகளின் மூளை சரியானபடி வளர்ச்சி பெறவில்லை. சொல்லப் போனால் இவர்கள் ஒரு மறை கழன்றவர்கள்!'' என்றார்.

எனக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. ''இந்தக் குழந்தைகளிடம் அப்படி ஒன்றும் தவறு தென்படவில்லையே !'' என்றேன்.

''இவர்கள் போக்கில் விட்டு, இவர்களுக்குக் கல்வி புகட்டி வருகிறோம். எந்த விஷயமும் இவர்களுக்கு நினைவில் இருப்பதில்லை. எதைச் சொல்லிக் கொடுத்தாலும் உடனே மறந்து விடுகிறார்கள். கல்விமுறைப்படி இவர்களுக்கு எதுவும் சொல்லித் தர முடியாது. இவர்களை வலுக் கட்டாயப்படுத்தவும் முடியாது. முரண்டு பிடித்து விடுவார்கள். நாங்கள் பிரயாசை எடுத்துப் பல கை வேலைகள் செய்யக் கற்றுத் தந்திருக்கிறோம். இவர்கள் மேஜை, பெஞ்சு முதலியவற்றைச் செய்வார்கள். கட்டில் நாடா, டவல், விரிப்பு ஆகியவை செய்வார்கள். சொல்லப் போனால் இவர்களும் வாழ்க்கையில் ஏதாவது உபயோகமான, உருப்படியான காரியங்கள் செய்து வாழ வேண்டும் என்று திட்டமிட்டுப் பணியாற்றுகிறோம்.''

இப்படி யெல்லாம் விளக்கிய ஸ்ரீ பி. நாராயணன் சமூகப் பணியைச் சிறப்புப் பாடமாய்ப் பயின்று பட்டம் பெற்று, அமெரிக்கா முதலிய நாடுகளுக்கும் சென்று அநுபவக் கல்வி அடைந்தவர்.

இவ்வேளையில், வேங்கடராமன் என்று ஒரு பையன் எங்களிடம் வந்தான். ''சார், எல்லாவற்றையும் நான் இங்கு படித்துப் பயின்று தேர்ந்து விட்டேன்! எங்கு சென்றாலும் நான் பிழைத்துக் கொள்ள முடியும்'' என்றான்.

அவன் அந்தண்டை சென்றதும், ''அப்படியும் நடக்க முடியுமா ?'' என்று கேட்டேன் ஸ்ரீ நாராயணனை.

''முடியும். ஆனால் ஒரு சிறு சிரமம். ஏவின வேலையைச் செய்யும் மாயா ராக்ஷஸனின் பரம்பரையைச் சேர்ந்த இவர்கள் சொன்ன வேலையை — அதாவது சொல்லிக் கொடுத்த வேலையைத் தவறாது பிழையின்றிச் செய்து விடுவார்கள். ஆனால் வெளி உலகம் அவ்வளவு நல்ல உலகம் இல்லையே ! சூதுவாது தெரியாத இந்தக் குழந்தைகளைத் தங்கள் தீய செயல்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளத் துணியும் பைத்தியக்கார உலகமாயிற்றே ! எத்தனை வஞ்சகர்கள் இவர்களைச் சாராயம் கடத்தல், திருட்டுப் புரட்டு போன்ற காரியங்களுக்குப் பயன்படுத்தி விடுவார்கள், தெரியுமா ? அகப்பட்டுக் கொண்டால் அடிபடத் தெரியுமே தவிரக் குற்றவாளியைக் காட்டிக் கொடுக்கத் தெரியாது. இவர்கள் நிலையைப் பார்க்கும் பொழுது பதினெட்டு வயதுக்கும் பின்னரும் 'போஸ்ட் கிராஜுவேட்' படிப்பு என்பது போல ஒரு தொழிற்கூடம் நிறுவி விடவேண்டும். இவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் கல்விக்கு ஏற்ப இவர்களிடம் வேலை வாங்கி இவர்கள் வயிற்றுப்பாட்டுக்கு வழி செய்துவிட வேண்டும். இதுவே இவர்களுக்கு உகந்தது'' என்றார் ஸ்ரீ நாராயணன்.

''ஆமாம், அமெரிக்க மாதர் சங்கம் உங்களுக்கு எந்த வகையில் உதவுகிறது?''

''இப்போதைக்குத் துணி பொம்மைகள் செய்விப்பதில் கவனம் செலுத்துகிறது. இவர்களை உல்லாசப் பயணம் இட்டுச் செல்ல, நீந்த அழைத்துச் செல்ல என்று தானே வலிய வந்து பணி புரிகிறது. சினிமா முதலியவற்றுக்கும்கூட அழைத்துப் போகிறது.''

''இதுவும் ஒரு நல்ல காரியம்தானே ?''

''எனவேதான் இந்தக் குழந்தைகள் இவர்களை மறவாமல் இவர்கள் வந்ததும் இப்படிக் குதூகலிக்கின்றனர்! என்னதான் மூளை குன்றியிருந்தாலும் நன்றி மறவாத குழந்தைகள் இவர்கள். இந்த நிலைக்கு ஆளான குழந்தைகள் எந்த நாட்டிலும் ஏராளம். இவர்களைத் துன்புறுத்தாமல் பராமரிக்கும் பொறுப்பு சமுதாயத்தைச் சேர்ந்தது இல்லையா ? பிறர் மனம் நோகப் பார்க்கச் சகிக்காத சமுதாயப் பண்பும் மனிதாபிமானமும் பெண்களிடம்தானே அதிகமுள்ளது ! இந்த அமெரிக்க மாதர் சங்கம் இதனை உணர்ந்து பணியாற்றுகிறது.''

அமெரிக்க மாதர் சங்கத்தின் நடவடிக்கைகளுள் சிலவற்றைப் பார்த்துவிட்டுத் திரும்புகையிலேயே பத்துப் பதினைந்து மாதர் சங்கங்களின் ஆக்கப் பணிகளை ஒரு மொத்தமாகப் பார்த்து விட்டுத் திரும்பிய உணர்ச்சி உண்டாயிற்று.

—ரா. வீ.



# ஜில்லென்று சில விஷயங்கள்!

கோடை காலம் ஆரம்பமாகிவிட்டது. இந்தருணத்தில் "ஐஸ் கிரீம்" என்றதுமே நாக்கைச் சப்புக் கொட்டாதவர் யார்?

'எத்தனை வயதானாலும் மனிதர்களுக்குச் சிறு பிராயத்து உணர்வுகள் மங்கிப் போவ இல்லை. எத்தனை பேர் குழந்தைத்தனமான ஆவலுடன் ரயிலையும் யானையையும் வேடிக்கை பார்க்கிறோம்!' என்று பிரபல நாவலாசிரியர் ஒருவர் எழுதி யிருக்கிறார். அந்த ஆசிரியர் இன்னும் ஒரு பொருளைக் குறிப்பிட மறந்து விட்டார். அதுதான் ஐஸ்கிரீம். பெரியவர்களாகட்டும், சிறியவர்களாகட்டும்-எல்லாருமே விரும்பி, ரசித்துச் சாப்பிட்டு மகிழக்கூடிய ஒரு தின்பண்டம் ஐஸ்கிரீம்தான்; இல்லையா? நீ சாப்பிடுகிற எந்தப் பண்டமாகத்தான் இருக்கட்டுமே; 'இதை எப்படிப் பண்ணுகிறார்கள்?' என்று அறிந்து கொள்ள வேண்டுமென்கிற ஆவல் நமக்குத் தோன்றுவதில்லை. ஆனால் ஐஸ்கிரீம் விஷயத்தில் மட்டும் அப்படியில்லை. 'இதை எப்படித் தயார் பண்ணுகிறார்கள், இதிலே என்னென்ன சேர்க்கிறார்கள், எப்படி அச்சில் வார்த்த மாதிரி இவ்வளவு கச்சிதமாகச் செய்கிறார்கள்' என்றெல்லாம் தெரிந்து கொள்ள ஆவல் பிறக்கிறதல்லவா?.... சென்னையிலே பிரபல ஐஸ்கிரீம் தயாரிப்பாளர்களாக விளங்கும் 'குவாலிட்டி'க்காரர்களின் தொழிற்சாலைக்குச் சென்று பார்த்த போது ஒரு மகத்தான உண்மை வெளிப்பட்டது. அதாவது, 'ஐஸ்கிரீம்' என்றால் அதிலே ஐஸ் கலந்திருப்பதாகத்தானே நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம்? அதுதான் கிடையாது! ஐஸ்கிரீமில் ஐஸே கிடையாது. வெறும் கிரீம்தான். வெஜிடபிள் பிரியாணியில் பிரியாணியும், வசன கவிதையில் கவிதையும், ஜனநாயக சோஷலிஸத்தில் ஜனநாயகமும் எப்படி இடம் பெறாமல் போய்விடுகின்றனவோ, அதே போல இந்த ஐஸ்கிரீமில் ஐஸும் இருப்பதில்லை.

பாஸ்டர், பாஸ்டர் என்று ஒரு பொல்லாத மனிதர் — கிருமிகள்குல பாதகர் — 'கிருமிகளால்தான் பால் தயிராக மாறுகிறது' என்று ஓர் உண்மையைக் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார் என்பது நினைவிருக்கும். அந்தப் பொல்லாத மனிதரது பெயரைத் தாங்கிக் கொண்டு ஆள் உயரத்துக்கு இயந்திரம் ஒன்று இருக்கிறது. பாஸ்டரைஸர் என்ற இந்த இயந்திரத்திலே பால் பண்ணைகளிலிருந்து வந்த பாலைக் கொட்டிக் காய்ச்சுகிறார்கள். 170°F. வரைக்கும் பாலைக் காய்ச்சி விட்டு அப்புறம் அதைக் குளிர வைக்கிறார்கள். ஆனால் ஒரே யடியாக இல்லை. சில ஆபீஸ்களில் சில

நகரின் மூலைமுடுக்குகளுக்கெல்லாம் சென்று வீட்டு வாசலில் 'ஐஸ்கிரீம்' விநியோகிக்கத் தயாராக உள்ள தள்ளு வண்டிகள்



பெரிய அதிகாரிகளின் தலையில் குட்டி, அவருக்கு இருக்கும் அதிகாரங்களை மெள்ள மெள்ள, கொஞ்சம் கொஞ்சமாகப் பறிப் பார்களே அதே போல 170 டிகிரியிலிருந்து 140 டிகிரி, அப்புறம் 120 டிகிரி என்று படிப் படியாகப் பாலைக் குளிர வைக்கிறார்கள். அதற்குப் பிறகு இந்தப் பால் 'ஏஜிங் சேம்பர்' என்று சொல்லப்படும் இன்னொர் இயந்திரத்துக்குப் போய் அங்கே எட்டு மணி நேரம் தனியாய்த் தவிக்கிறது. (பால் கெட்டுப் போகாமல் இருப்பதற்காகவே இத்தனை முன்னேற்பாடுகளும்) பின்னர் அந்தப் பால் ஃப்ரீஸருக்கு (Freezer) வந்து சேருகிறது. இங்குதான் கிரீமுடன் பால் கலந்து உறவாடி, ஐஸ்கிரீமாக உருவெடுக்கிறது. இந்த ஃப்ரீஸர் இயந்திரம் எட்டு காலன் பாலை ஒரே நிமிஷத்தில் ஐஸ்கிரீமாக்கி விட்டு 'அக்கடா' என்று இருந்துவிடுகிறது.



ஹோமோஜெனைசர்



'பாஸ்சுரைஸர்' எனப்படும் காய்ச்சிய பாலைக் குளிரவைக்கும் யந்திரம்

நீள் சதுரவாக்கில் அலுமினிய 'ட்ரே'கள் இருக்கின்றன. ஒவ்வொரு 'ட்ரே'யிலும் மொத்தம் முப்பத்திரண்டு ஓட்டைகள். அந்த ஓட்டைகளில் குச்சிகளைச் செருகி வைத்து விடுகிறார்கள். 'ட்ரே'யில் கிரீமை வார்க்கும் போது கிரீம் குச்சிகளில் படிந்து கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விடுகிறது.

பிறகு இந்த 'ட்ரே'க்களெல்லாம் ஒரு தொட்டியில் நீச்சலடிக்கின்றன. (இந்தத் தொட்டிக்கு 'டிப் டாங்க்' என்று பெயர்.) குளித்துவிட்டு வந்த குச்சி ஐஸ்கிரீம்களை 'பர்னர்' என்கிற இன்னொர் இயந்திரத்துக்குள் அனுப்பி வைக்கிறார்கள். இந்த இயந்திரத்துக்குள் எப்போதும் சீதோஷ்ண நிலை—5 டிகிரிதான். எனவே, கொஞ்சம் மெழுகு பதத்திலிருக்கிற ஐஸ்கிரீம் இன்னும் கெட்டிப்பட்டு வெளியே வருகிறது. அப்புறம் ஜம்மென்று காகித உறையைச் சுற்றிக் கொண்டு வெளியே புறப்பட்டு விடுகிறது.

ஃப்ரீஸரிலிருந்து வருகிற கிரீமை எந்த விதமான ஐஸ்கிரீம் தயாரிக்கவும் உபயோகிக்கலாம். சாக்லேட் லாஸில் தோய்த்துச் சாக்கோபாராகவோ; ஆரஞ்சு ஜூஸில் தோய்த்து ஆரஞ்சு பாராகவோ செய்து கொள்ளலாம். இதிலே ஆச்சரியப்படத்தக்க விஷயம் என்னவென்றால் அத்தனை வேலையையும் இயந்திரங்களே செய்து முடித்துவிடுகின்றன. மனிதர்களுக்கு ஒரே ஒரு வேலைதான்: ஐஸ்கிரீமைச் சாப்பிடுவது!

ஐஸ்கிரீமில் முட்டை சேர்க்கிறார்கள் என்று ஓர் எண்ணம் இருந்துவருகிறதல்லவா? இது முற்றிலும் தவறானது. ஒரே ஒருவகை ஐஸ்கிரீமைத் தவிர — அதன் பெயர் கஸாட்டா — மற்ற ஐஸ்கிரீம்களில் முட்டை கலப்பதில்லை. பால், கிரீம், உலர்ந்த பழங்கள் எஸன்ஸ் ஆகியவைதான் இடம் பெறுகின்றன.

ஐஸ்கிரீம் உடம்புக்குச் சூடு பண்ணும் என்கிற கூற்று தவறானது என்று க்வாலிட்டி தொழிற்சாலை நிர்வாகி ஒருவர் தெரிவித்தார். ''ஐஸ் சூடு பண்ணும்; ஐஸ்கிரீம் உடம்புக்குக் கெடுதலே பண்ணாது'' என்றவர், ''ஐஸ் கிரீம் ஓர் உணவுப் பொருள்; மிட்டாய் சாக்லேட் போன்றதல்ல!....'' என்றார் அழுத்தம் திருத்தமாக.

மழைக் காலத்தில் ஐஸ்கிரீம் அவ்வளவாக விற்பனையாகாதே?.... அது தவிர, தினசரிகூடக் கொஞ்சம் ஐஸ்கிரீம் மிகுந்து போகுமே? அதை என்ன செய்கிறார்கள்?

இந்தத் தொழிற்சாலையில் 'ஸ்பெஷல்' ஒரு 'குளுகுளு' அறை இருக்கிறது. (அதற்குள்ளே போய் ஐந்து நிமிஷத்துக்கு மேல் நின்றால் உடல் விறைத்துப் போய் விடும்! அத்தனை குளிர்ச்சியாக இருக்கிறது!) அந்த அறையிலேதான் மிகுந்து போகும் ஐஸ்கிரீம் பாக்கெட்டுகளைப் பத்திரப்படுத்தி வைக்கிறார்கள். மறு நாள் விற்பனைக்குக் கொடுப்பதற்காக. இரண்டு மாத காலம் வரை ஐஸ்கிரீமைக் கெட்டுப் போகாமல் வைத்திருக்க முடியுமாம், இந்த அறையில் வைத்திருப்பதன் மூலம்.

இரண்டு வருடங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட தொழிற்சாலை இப்போது இரவு பகலாக வேலை செய்து வருகிறது. "ஜனங்களிடம் ஐஸ்கிரீம் சாப்பிடும் பழக்கம் முன்னைவிட அதிகரித்திருக்கிறது"

என்று கூறும் நிர்வாகி இன்னொரு விஷயத்தைச் சொன்னார். ஐஸ்கிரீம் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் தரத்துக்காக இவர்கள் உயிர்விடுவதுதான். தரம் தான் இவர்கள் உயிர்மூச்சு. பண்ணைகளிலிருந்து தினசரி வருகிற பாலைக் கூட நாள் தவறாமல் பரிசோதனை செய்து பார்த்துவிட்டுத் தங்கள் தரத்துக்குத் தகுந்தபடி இருந்தால்தான் ஏற்றுக் கொள்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

தொழிற்சாலையில் தயாரான ஐஸ்கிரீம்களை நகர் முழுவதும் விற்பனை செய்ய நகரில் பல பகுதிகளில் 'டெப்போ'க்கள் திறந்திருக்கிறார்கள். அத்துடன் விற்பனைப் பையன்கள் மூலமும் கொடுத்தனுப்புகிறார்களாம். 'அவர்களுக்கு ஒரு நாளைக்கு என்ன வருமானம் கிடைக்கிறது?' என்று கேட்டதற்கு நிர்வாகி சொன்னார்: "நான் சொல்கிறேனே என்று நினைத்துக் கொள்ளாதீர்கள்.... பொதுவாகவே இங்குள்ள மக்கள் வெகு எளிதில் திருப்தியடைந்து விடுகிறார்கள். ஏதோ அன்றையத் தேவைக்குப் போதுமான பணம் கிடைத்து விட்டால், அப்புறம் அவர்கள் அலட்டிக் கொள்வதில்லை. 'இன்னும் நிறைய விற்போம்; நிறையச் சம்பாதிப்போம்' — என்கிற ஆர்வம் இருப்பதில்லை. 'எல்லாம் இது போதும்' என்று கம்மா இருந்து விடுகிறார்கள்...."

ஜில்ஜில்லுப்பான உண்மை இல்லை தான்; இருந்தாலும் அவர் சொல்வதை ஏற்றுக் கொண்டு தானே ஆக வேண்டும்?

- முருந்தன்

---

வலப்பக்கம்: பால் சேமித்து வைத்துக் கொள்ளும் 'மில்க் ஸ்டோரேஜ்.'

இடப்பக்கம்: க்ரீமும் பாலும் ஒன்றுகலந்து உறவாடி ஐஸ்கிரீமை உருவாக்கித் தரும் 'ப்ரீஸர்' என்ற யந்திரம்.

கீழே: குச்சியில் செருகிய 'ஐஸ்கேண்டி' தயாராகிறது இங்கே.

ஆகாயத்தில் பறப்பதென்பது அந்தக் குழந்தைகளுக்கு ஓர் அற்புதமான செயல்தானே? பறவைகளால்தான் பறக்க முடியும் என்று எண்ணி இருந்தவர்களுக்குப் பீட்டரின் செயல் – அவன் அந்த அறைக்குள் லாகவமாக மிதந்து சென்றது – ஆச்சரியத்தையும் பிரமிப்பையும் உண்டாக்கியது.

ஜூன் பீட்டரை, அவன் வசிக்கும் அற்புத உலகத்துக்குத் தங்களையும் அழைத்துச் செல்ல, வெண்டி, ஜான், மைக்கேல் மூவரும் வேண்டிக் கொண்டார்கள். பீட்டரும் அவர்கள் விருப்பத்தை ஏற்றுக் கொண்டான். ஆனால் இப்போது அவனுடன் செல்வதற்கு அவர்களுக்கும் பறக்கத் தெரிந்திருக்க வேண்டுமே? இந்தப் பிரச்னையைத் தீர்ப்பது எப்படி?

அவர்களின் பறக்கும் முயற்சி தேவதை டிங்கருக்குச் சிரிப்பூட்டுகிறது

தொடரும்

# பிரானின்

அயோத்தியாபுரியில் சக்கரவர்த்தித் திருமகனின் அழகிய உத்தியானவனம். சக்கரவர்த்தித் திருமகன் இப்போது சக்கரவர்த்தியாகவே ஆகிவிட்டான். அதனால்தான் போலும் பொறுப்புக்கள் மிகுந்தபடியால் முன்போல வைதேகியிடம் வேடிக்கையும் விளையாட்டுமாகக் காலம் கழிக்காமல் அடிக்கடி தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

இன்றும் அப்படித்தான் சிந்தாகுலனாக நந்தவனத்தின் புஷ்பாசனத்தில் அமர்ந்திருந்தான் ராகவன். 'ராஜ்யபாரம் மட்டும்தான் நாயகனின் விசாரத்துக்குக் காரணமா? அல்லது...' என்று சீதா தேவிக்குச் சம்சயம் தட்டிக் கொண்டே யிருந்தது.

"ஆரிய புத்திர, ஏன் இப்படி அடிக்கடி நெடுமூச்செறிந்து கொண்டு சிந்தனை வசப்பட்டு விடுகிறீர்கள்? வனவாச காலத்தின் போதுகூடக் களிப்புக்குக் குறைவின்றிப் பரிகாசம் செய்வீர்களே! எதனால் இப்போது இப்படியாகி விட்டீர்கள்?" என்று கவலையுடன் விசாரித்தாள் தேவி.

ஸ்ரீ ராமச்சந்திரன் அவளைத் தீனமாக நோக்கினான். எதையோ சொல்ல மாட்டாமல் அவன் தவிப்பது தேவிக்குப் புரிந்தது.

"எத்தனை நாளைக்குத்தான் விளையாடுவது. தேவி! எதற்கும் ஒரு முடிவு வேண்டுமல்லவா?" என்றான் அயோத்தியாபதி.

ஜானகி எதையோ எண்ணி இளநகை பூத்துக் கொண்டாள். "ஆம், நீங்கள் விளையாடுவதைப் படிப்படியாகக் குறைத்துக் கொள்ளத்தான் வேண்டும்" என்றாள்.

ஐயன் அவளை உற்று நோக்கினான். அவளது திருமேனியில் புதிதாகப் பரவியுள்ள திவ்விய சௌந்தரியத்தைக் கவனித்தவன் உவகையுடன், "மைதிலி..." என்று வினவும் குரலில் அழைத்தான்.

பார்வதி அம்மாள்

"ஆமாம், அப்படித்தான்" என்று சொல்லித் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் நாணம் நிறைந்த ஜானகி.

"அப்படியானால் உனக்கு நான் செய்ய வேண்டிய கடமையைச் செலுத்தியாயிற்று. அயோத்தி சிம்மாசனத்துக்கு ஆற்ற வேண்டிய பொறுப்பையும் நிறைவேற்றியாயிற்று" என்று ஈரப்பசையற்ற குரலில் கூறினான் மன்னர் மன்னன்.

சடேரென்று அவனிடமிருந்து விலகி எட்ட நின்றாள் தேவி. தவக் கொழுந்தல்லவா அவள்! எனவே ஐயனின் பேச்சு அவனிடம் தவ சீலத்தையும் வனவாசத்தையும் இச்சிக்கும் ஓர் ஆசையைத் தூண்டி விட்டது.

"ஏன் தேவி என்னிடமிருந்து விலகி ஓடுகிறாய்? உன்னால் கூட என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லையா?" என்று கேட்டான் ராமபிரான்.



# பிராயச்சித்தம்

''ஓ. புரிந்து கொள்கிறேன். புரிந்து கொண்டே உங்களை ஒரு வரம் கேட்கிறேன். தருவீர்களா?'' என்றாள் சீதாப்பிராட்டி.

''அவசியம் செய்கிறேன் பிரியே! இந்தச் சமயத்தில் உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வது என் கடமை யல்லவா?'' என்றான் தாசரதி.

சீதை தனக்குள் துயரச் சிரிப்புச் சிரித்துக் கொண்டாள். 'இப்போதும் கடமையைப் பற்றித்தான் நினைப்பு. தரும மூர்த்தி என்றும் சொந்த நினைவு, சொந்த அபிமானம் என்பதை யெல்லாம். இப்படியா அடியோடு துறக்க வேண்டும்?' என்று எண்ணினாள்.

''ஆர்ய புத்திர. அரண்மனை வாழ்வும் அரச போகமும் அலுத்து விட்டன. தபோ வனங்களும் புண்ணிய தீர்த்தங்களும் என்னை அழைக்கின்றன. மரத்தடியும் பர்ணசாலையும் 'வா வா' என்கின்றன. என்னை அரணியத்துக்கு அனுப்பி வைப்பீர்களா?'' என்று யாசித்தாள் தேவி.

தன்னை அவள் புரிந்து கொண்டு விட்டாள் என்பதைத் தாசரதியும் புரிந்துகொண்டான். உள்ளம் உருக, ''என் விருப்பத்தை உன் விருப்பாகக் கேட்டாய் தேவி. நிறைவேற்றாமல் இருப்பேனா?'' என்றான்.

ஜானகி அங்கிருந்து சென்றாள்.

சிந்தை வயப்படும் மன்னனுக்கு உற்சாக மூட்டுவதற்காக விகடம் செய்யும் விதூஷகர்கள் வந்தார்கள். அவர்களுக்கு எதையும் சொல்ல உரிமையுண்டு. ஆனால் அந்த உரிமையை அவர்கள் முற்றிலும் பயன்படுத்திக் கொள்ளாததாகவே ராமன் கருதினான்.

பத்ரன் என்ற விகட கவியைப் பார்த்து, ''பத்ரா! வெறும் விளையாட்டு மட்டும் செய்யாதே. உன் மனத்திலிருப்பதை எல்லாம், இந்த அயோத்தி மக்களின் மனத்திலிருப்பதை யெல்லாம் உன் விகடத்தின் மூலம் எனக்குத் தெரியப்படுத்து'' என்றான்.

பத்ரனுக்கு உடனே உற்சாகம் பிறந்து விட்டது. ''நீயிடம் பழகுவதுபோல் அரசர்களிடம் பழக வேண்டும் என்பார்கள். நான் எதையாவது சொல்லப் போக நீங்கள் எனக்குச் சீட்டுக் கிழித்து விட்டால் அப்புறம் வீட்டுக்காரி என்னை விடுவாளா? பத்தினியின் தருமத்தை அவளுக்கு நான் சொன்னால்தான் அவள் கேட்பாளா? 'இது ராம ராஜ்யம். அரசன் எவ்வழி குடிகள் அவ்வழிதான் நடக்க வேண்டும். பெண்டாட்டியின் குற்றத்தை இனிமேல் புருஷர்கள் சொல்லக் கூடாது. ராவணன் மனையில் பத்து மாதம் இருந்தவளைச் சேர்த்து வைத்துக் கொண்டிருப்பவராக்கும் நம் மன்னர்' என்று என் பாரியாள் என்னை மடக்கினால் நான் என்ன செய்ய முடியும்?'' என்று கூறினான்.

வேடிக்கை விபரீதமாயிற்று. ஆனால் பத்ரனுக்கல்ல.

ராமனின் விருப்பமும், தேவியின் விருப்பமும், பத்ரனின் பேச்சில் வெளிவந்த ஊரார் கருத்தும் ஒன்றையொன்று ஒட்டிப் போயிற்று.



ராமன் தன் நெஞ்சை இரும்பாக்கிக் கொண்டான்.

தம்பியரை அழைத்து வைத்துக் கொண்டு கண்ணீர் விட்டான் ராகவன். ''சீதை லங்காபுரியில் அக்கினிப் பிரவேசம் செய்ததும் மக்களுக்குச் சொப்பனமாகி விட்டது. இக்ஷ்வாகு வம்சத்தில் வந்த எனக்கும் ஜனகராஜனுடைய சற்குலத்தில் வளர்ந்த சீதைக்கும் மாளாத அபவாதம் ஏற்பட்டு விட்டது லக்ஷ்மணா! நாளைக் காலையே உன் மதனியைக் கங்கை கடந்து, தமஸா தீரத்தில் விட்டுவிட்டு வந்துவிடு. மறு பேச்சுப் பேசாதே. இது உன் தமையனின் விருப்பமல்ல; அயோத்திச் சக்கரவர்த்தியின் ஆக்ஞை'' என்றான்.

ஸௌமித்திரன் கனத்த நெஞ்சுடன் இணக்கம் தெரிவித்தான்.

ரதம் ஓடிக் கொண்டிருந்தது — கங்கை நோக்கி.

தன் இஷ்டப்படியே நாயகன் தன்னை வனத்துக்கு அனுப்பி வைப்பதில் எல்லையற்ற ஆனந்தம் அடைந்திருந்தாள் ரதத்தில் அமர்ந்திருந்த மைதிலி.

ஆயினும் தன் வலக்கண்ணும், வலத் தோளும் துடிப்பது ஏன் என்று அவளுக்குத் தெரியவில்லை.

''லக்ஷ்மணா! திடீரென்று என்னை ஏதோ அதைரியம் பற்றிக் கொள்ளுகிறது. இன்று காலையில் நீ அவசரப்படுத்தியதால் அண்ணாவைப் பாராமலே வந்தேன். அவர் சௌக்கியமாக இருக்கிறாரல்லவா?'' என்று வினவினாள்.

''அவருடைய சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்?'' என்று எரிச்சலுடன் பதிலளித்த ஸௌமித்திரனின் கண்களிலிருந்து நீர் வழிந்தது.

''ஏன் அழுகிறாய் அப்பனே! கங்கை யருகே வந்தோமே என்று பூரிக்க வேண்டிய சமயத்தில் அழுவதேன்? அண்ணனைப் பிரிந்திருக்க முடியவில்லையா? அக்கரை போனவுடன் முனிவர்களுக்கும் ரிஷி பத்தினிகளுக்கும் வஸ்திராபரணங்கள் தருவோம். ஓரே நாள் அவர்களோடு இருந்து விட்டு அயோத்தி திரும்பி விடுவாய்'' என்றாள் சீதை.

கங்கையைக் கடந்த பின்னும் இளைய பெருமானால் உண்மையை மறைக்க முடியவில்லை. சொல்லத் தகாததைச் சொல்லியே விட்டான். ''மங்களமானவளே! என்மீது கருணை செய். பாவியென்று இகழ்ந்து விடாதே'' என்று கதறினான்.

முகூர்த்த காலம் நினைவற்றிருந்தாள் தேவி. ''லக்ஷ்மணா! இந்தச்சரீரம் துக்கத்துக்கென்றே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக யார் வருந்தி என்ன பயன்? பூர்வ ஜன்மத்தில் எந்தத் தம்பதியைப் பிரித்து வைத்தேனோ? அந்தப் பாவத்தை அநுபவிக்கிறேன். ஸௌமித்ர, இந்தக் கங்கையில் விழுந்து சரீரத்தை விடக்கூட எனக்கு உரிமையில்லை. ஏனென்றால் உன் தமையனார் அயோத்தி ஸிம்மாதனத்துக்குச் செலுத்த வேண்டிய கடமைக்கு நான் குறுக்கே நிற்கலாகாது'' என்ற தேவியின் குரல் நடுநடுங்கிற்று. தன்னையே சமாளித்துக் கொண்டு கூறினாள்:

''லக்ஷ்மணா! லோக அபவாதத்துக்கு மீண்டும் ஆளாக என்னால் முடியாது. நான் கர்ப்பவதி என்பதை நீயே நன்றாகப் பார்த்துக் கொண்டு அயோத்திக்குச் சடுதியில் திரும்பு. சக்கரவர்த்திக்கும், ராஜமாதாக்களுக்கும் என் நமஸ்காரத்தைச் சொல்லு.''

பதறினான் இளவல். ''மதனி, வணங்கும் கால் உனது பாதத்தை மட்டுமே பார்த்துள்ள என்னிடம் நீ இப்படிப் பேசலாமா?'' என்று அலறிக் கொண்டே லக்ஷ்மணன் அகன்றான்.

சீதையை இழந்து செல்கிற ரதத்தில் மாவீரனான லக்ஷ்மணன் பிரலாபித்தவாறு சென்றான்.

தேரோட்டிச் சென்ற ஞானி சுமந்திரன் சுமித்திராபுத்திரனுக்கு ஆறுதல் சொன்னான்.

''இளவரசே! இது பூர்வஜன்மவினையோ என்று தேவி கூறினாளல்லவா? உண்மையாகவே இது அப்படித்தான். ஆனால், அவளுடைய வினையல்ல. உன் தமையனுடைய பூர்வ வினையே இது. இதுகாறும் யாரும் அறிந்திராத செய்தியைச் சொல்கிறேன், கேள்:

''ஸ்ரீராமனும், ராமாநுஜரான நீங்களும் பிறந்தபின் தசரத சக்கரவர்த்தி ஒரு முறை வஸிஷ்ட மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார். நான்தான் தேரோட்டிச் சென்றேன். வஸிஷ்டரைக் காண அதே சமயத்தில் மாமுனிவரான துர்வாஸரும் எழுந்தருளியிருந்தார். ஞானதிருஷ்டி வாய்ந்த இரு மகாத்மாக்களை ஒருங்கே கண்டவுடன் உன் தந்தைக்குத் தன் குமாரர்களின் எதிர்காலம் முழுவதையும் அறிய வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. தன் அன்புக்குரிய ராமனைப் பற்றி அனேகமும் வினவினார். ராகவனின் சரித்திரம் உலகத்துக்கே ஒரு சரித்திரமாக ஈடும் இணையுமற்று விளங்கும் என்று கூறிய துர்வாஸர், ''ஆனால்.....'' என்று இழுத்தார்.

தசரதன் பதறினான். ''அதென்ன 'ஆனால்'? அதையும் மறைக்காமல் கூறியருளுங்கள்'' எனப் பிரார்த்தித்தான்.

துர்வாஸரோ எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லாமல் நீண்ட நெடுங்காலத்துக்குமுன்பு நடந்த ஒரு சம்பவத்தைக் கூறலானார்:

''ஆதியில் தேவாசுரப் போர் நடந்தது. அசுரர்கள் கை ஓங்கியது. வைகுண்டத்துக்கு வந்து ஸ்ரீமந் நாராயணனையே துதித்தனர். துதிகளை கேட்டு அலுத்துப் போன பெருமான் புன்முறுவலுடன் இகழ்ச்சியைக் கேட்டுக் கொண்டிருந்தார். ஆயின் அவர் கரத்திலிருந்த சக்கரத்தாழ்வானுக்குச் சினம் மூண்டது. சக்கரம் உக்கிரமாயிற்று. அசுரர்களை நோக்கிப் பாய்ந்தது. அசுரர்கள் அதிவேகமாக ஓடினர். பிருகு மகரிஷியின் ஆசிரமம் தென்பட்டது. வாயிலில் பிருகு பத்தினி நின்று கொண்டிருந்தாள்.

''அம்மா, உயிர்ப் பிச்சை தருவாய்'' என்று அசுரர்கள் அவளிடம் அடைக்கலம் புகுந்தனர்.

கருணை கொண்ட ரிஷிபத்தினி முடிந்த மட்டில் அவர்களுக்குப் பர்ணசாலையில் இடம் தந்துவிட்டு, தானே வாயிற்காலில் குறுக்கே

கையை வைத்துக் கொண்டு நின்றான். பரம புருஷன் ஸ்திரீஹத்தி செய்ய மாட்டார் என்ற நம்பிக்கையுடன் அப்படி நின்றாள். ஆனால் முதலாளியின் அநுமதியின்றியே சம்ஹாரத் தொழில் தொடங்கியிருந்த சக்கரத்தாழ் வான் அவள் பெண்ணென்றும் பாராமல் அவளைச் சிரச்சேதம் செய்துவிட்டுக் குடி லுள் புகுந்து அசுரர்களையும் வதைத்தான்.

''தபதி நதியில் நீராடிவிட்டு ஆசிரமம் திரும்பிய பிருகு முனிவர் சிரம் துண்டிக்கப் பட்ட தமது பிரியபத்தினியின் கபளபரத் தைக் கண்டார். ஆறாத்துயரம் கொண் டார். துயரம் சீற்றமாயிற்று. சக்கரத்தாழ் வான் நடுக்கமுற்று அங்கேயே அந்தர்தான மாகி விஷ்ணுவின் கரத்தை அடைந்தான். வெகுண்ட முனிவர் வைகுண்டத்துக்கு வந்து சேர்ந்தார்.

''சேவகனின் குற்றம் நாயகனைத்தான் சேரும். லக்ஷ்மியை ஒரு போதும் பிரியாமல் தாங்கும் ஸ்ரீநிவாஸா, தள்ளாத வயதில் எனக்குச் சுகருணை செய்யப் பத்தினியில் லாமல் செய்து விட்டாய். உனக்கு இது தருமா?'' என்று கனல் கக்க வினவினார்.

''ஸ்வாமி, அபவாதம் செய்து விட்டேன். என்ன தண்டனையாயினும் தாருங்கள். அநுக்கிரகமாக ஏற்றுக் கொள்கிறேன்'' என்று பணிவுடன் கூறினார் பெருமான்.

மங்கை நல்லாளின் மறைவினால் மனக் கலக்கமுற்றிருந்த முனிவர் இளக்கம் அடை யாமல் இறைவனையே சபித்தார். ''நான் பத்தினியை இழக்குமாறு செய்த நீயும் அபத்தினிகளுக் கடவாய். ஆண்டவனுகிய உனக்கு சுக — துக்க உணர்ச்சியில்லை. எனவே மனிதனாகப் பிறந்து இந்த மாளாத் துயரத்தை அநுபவிப்பாய். ஆடவனுகிய சக்கரத்தாழ்வான் தீண்டியதால் கற்பரசி யான என் பத்தினிக்கு அபவாதம் உண்டா யிற்று. உன் பத்தினிக்கும் அவ்வாறே அபவாதம் உண்டாகட்டும்'' என்று கர்ஜித்து அகன்றார் பிருகு.

''இந்தக் கதையையெல்லாம் உன் தந்தை தசரத மகாராஜனுக்குத் துர்வாஸர் கூறினார். முடிவாக, 'நாராயணனும் எத்தனையோ அவதாரம் எடுத்து விட்டார். என்றாலும் மானுடனாக சுக — துக்கம் முழுவதும் அநுப விக்க சத்திய அவதாரமாக இப்போதுதான் சப்தம அவதாரம் கொண்டிருக்கிறார். அந்த அவதாரமே உன் மைந்தன் ராமன். இது ரகசியம்' என்றார்.

''இளவரசே, அந்த ரகசியத்தை இன்று உன்னிடம் உடைத்துவிட்டேன். இது அவ்வள வையும் உன்னுக்குள் அறிந்திருந்தே வெளிச் சொல்லாது குமைந்து வந்தார் உன் அண் ணல். அவரது ஆக்ஞைக்கும் தேவியின் தீராத் துயரத்துக்கும் காரணம் புரிந்ததா?'' என்றான் சுமந்திரன்.

காட்டு வழிகளில் ஓடிக் கொண்டிருந்தது ரதம். தருமத்தின் விசித்திரமான வழிகளை எண்ணியவாறு மௌனமாய் அமர்ந்திருந் தான் ராமாநுஜன்.

---

## இந்த மகாகவியே அவர்!

நோபல் பரிசு பெற்ற வங்கக் கவிஞர் ரவீந்திரநாத் டாகுர் இளம் வயதில் காட்சியளிக்கும் படமே அது. ரவீந்திரர் 1861ம் வருஷம் மே மாதம் 7ந் தேதி கல்கத்தாவில் பிறந்தார். ஜெஸூரிலிருந்து கல்கத்தாவில் உள்ள கோவிந்தபூருக்கு ஏகிய டாகுர் குடும்பத்தினருக்கு டாகுர் என்பது கௌரவப் பட்டமாகும். கிழக் கிந்தியக் கம்பெனியுடன் தொடர்பு கொண்ட ஜெயராம் டாகுர் அளவற்ற செல் வத்தை ஈட்டினார். அவரது கொள்ளுப் பேரர் துவாரகாநாத் மக்களின் அபிமானத்தைப் பெற்ற வர்; சீர்திருத்த நோக்கம் கொண்டவர். அவர் இங்கிலாந்து சென்று ராஜா போன்று வாழ்ந்து மரித்தார். அவரது மூத்த புதல்வர் தேவேந்திர நாத் (மகரிஷி என்று செல்லமாக அழைக்கப்படு கிறவர்)தின் பதினான்காவது குழந்தையே ரவீந் திரர். உபநிஷத சாரங்களைத் தந்தையிடமிருந்து பெற்றார் ரவீந்திரர். 1863ல் தேவேந்திரநாத் விலைக்கு வாங்கிய சாந்திநிகேதன் இன்று கலைகளுக் கும் கல்விக்கும் சிறந்த சர்வகலாசாலையாக விளங்குகிறது. ரவீந்திரர் கல்கத்தாவில் உள்ள புனித ஸேவியர் பள்ளியில் பயின்றார். வங்காளத் தில் சுதேசி இயக்கம் மூண்டபோது, பதினான்கு வயது இளைஞர் ரவீந்திரர் பல தேசிய பாடல்களை இயற்றினார். 1912 மே மாதத்தில் இங்கிலாந்துக் குச் சென்ற சமயம் அவரது வங்கக் கவிதைகளைப் பிரயாணத்தின்போது ஆங்கிலப்படுத்தினார். 'கீதாஞ்சலி' நூல் வெளிவந்தது.



இளம் ரவீந்திரருக்கு லண்டன் வாழ்க்கை பிடிக்கவில்லை. ஒன்றரை வருஷம் லண்டனில் தங்கியிருந்து, எந்தவித உத்தியோகப் பயிற்சியோ, படிப்போ பெறாமல் இந்தியா திரும்பினார்.

இன்று உலக மகாகவி ரவீந்திரரின் இலக்கியங்கள் எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு ரவீந்திரரின் பெருமையைப் பறைசாற்றுகின்றன.

---

# கல்லுக்குள் ஈரம்



## வெள்ளி விழா இரண்டாவது பரிசு நாவல்

ர.சு. நல்லபெருமாள்

### முன் கதைச் சுருக்கம்

சென்னையிலிருந்து இரண்டு நாட்களுக்கு முன் புறப்பட்ட அந்த ரயில் வண்டி பயங்கரவாதிகளின் சதிச் செயல்களுக்கு அஞ்சி நடுங்கிப் பல ஸ்டேஷன்களில் நின்று ஒருவாறு மதுரைக்கு வந்து சேர்ந்தது. வண்டியில் அளவுக்கு மீறிய கூட்டம். பிரயாணிகள் முகங்களெல்லாம் பயத்தினால் வெளுத்திருந்தன. எந்த நேரத்தில் எந்தப் பாலம் வெடிக்குமோ, ரயில் விழுமோ என்ற பயத்துடனேயே பிரயாணம் செய்து வந்திருக்கிறார்கள்! ஆனால் வாலிபன் ரங்கமணி மாத்திரம் உற்சாகமாக மற்றப் பிரயாணிகளின் பரபரப்பையும், பீதியையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்காகக் கூட்டத்தில் இடிபட்டுப் பலகாரமும், காப்பியும் வாங்கி வந்து அவன் பக்கத்தில் அமர்ந்த சங்கரராமதீக்ஷிதர் காந்தியவாதி. தீவிரவாதியான ரங்கமணிக்கும் ஒரு சக பிரயாணிக்கும் தகராறு ஏற்பட்டது. சகபிரயாணி புரட்சிக்காரர்களைத் திட்டி வெள்ளையர் ஆட்சியைப் புகழ்ந்து பேசினார். வாக்குவாதம் முற்றியது. தீக்ஷிதர் குறுக்கிட்டுச் சமாதானப்படுத்தினார்.

அப்பொழுது பிளாட்பாரத்தில் ஏதோ பரபரப்பு ஏற்பட்டது. "வந்தே மாதரம்" என்ற கோஷம் கேட்டது. ரங்கமணியும் தீக்ஷிதரும் கீழே இறங்கிக் கோஷம் வந்த எஞ்ஜின் பக்கம் போய்ப் பார்த்தனர். எஞ்ஜின் மீது ஏறி ஒரு பெண்மணி மூவர்ணக் கொடியை அதன் முன் பக்கத்தில் கட்டிவிட்டுக் கீழே குதித்தாள். போலீஸ் அதிகாரி அதைப் பிடுங்கி எறிய உத்தரவிட்டார். கொடி கீழே விழுந்தது. உடனே அந்தப் பெண் அதைக் கையில் எடுத்துக் கொண்டு மற்றுமுள்ள தொண்டர்களுடன் ரயில் தண்டவாளத்தில் உட்கார்ந்து ரயிலைப் போகவொட்டாமல் மறியல் செய்தாள். போலீஸ் அதிகாரி அவர்களை வலுக்கட்டாயமாக அப்புறப்படுத்த முயன்ற போது ரங்கமணி அவரை எதிர்த்தான். ஜனக்கூட்டம் அவன் பக்கம் சேர்ந்தது. போலீஸைத் தாக்கும் சூழ்நிலை உருவாவது கண்டு அதிகாரி இசைந்தார். திரிவேணி என்ற அப்பெண்ணும் ரங்கமணியுமாகச் சேர்ந்து கொடியைக் கட்டினார்கள். ரங்கமணிக்கு நன்றி தெரிவித்த போதுதான் அவள் எத்தகைய தீவிரவாதி என்பது அவனுக்குப் புரிந்தது. வண்டியும் நகர்ந்தது.

திருநெல்வேலி ஜங்ஷனில் இறங்கி ரங்கமணி தன் தாத்தாவின் வீட்டுக்குச் சென்றான். அவர் அவனது தந்தையைப் பெற்ற பாட்டனார். ரங்கமணியின் தந்தை சாமிநாதன், புரட்சி வீரர்களும் தேசபக்தர்களுமான சுப்பிரமணிய பாரதி, வ.உ.சி. ஆகியவர்களிடம் ஈடுபாடு கொண்டு வெள்ளையருக்கு எதிரான சதித் திட்டங்களில் ஈடுபட்டுப் போலீஸ் குண்டில் இறந்துவிடவே, அவன் தந்தை நெல்லையப்பபிள்ளை தம் பேரன் ஒழுங்காகப் படித்து முன்னுக்கு வந்து மணந்து கொண்டு சுகமாக வாழ வேண்டும் என்று மிகவும் ஆசைப்பட்டார். ஆனால் ரங்கமணியினால் அவர் சொன்னபடி நடக்க முடியவில்லை. அவன் தந்தை சாமிநாதனின் பழைய கைத்துப்பாக்கியுடன் வெளியேறித் தன் தந்தையைக் கொன்ற வெள்ளையர் ஆட்சியைப் பழி வாங்கத் திட்டமிட்டான். சென்னையில் தீக்ஷிதரோடுதான் தங்கியிருந்தான். அவர் அவனை அஹிம்சாவாதியாக்க முயன்று வந்ததனால் அவருக்குத் தெரியாமல் வீட்டை விட்டுப் புறப்பட்டு யாரும் அறியாமல் கோட்டையில் வெடிகுண்டை வீசிவிட்டுக் காவலர்களிடம் பிடிபடாமல் தப்பிக் கடையிலில் சர்தார் சொக்கலிங்கம் என்ற தீவிரப் புரட்சிவாதியிடம் சிக்கினான். அவர்தான் மதுரையில் சத்தியாக்கிரகம் செய்த திரிவேணியின் தந்தை என்றறிந்தான் ரங்கமணி.

சர்தார் சொக்கலிங்கம்பிள்ளையின் ரகசியமான புரட்சித் திட்டங்களையும் திரிவேணியின் அஹிம்சாவாதத்தையும் தெரிந்து கொண்டான். அவருடைய புரட்சி அச்சகத்தில் தங்கினான். திரிவேணியும் அவனும் கொள்கையில் வேறுபட்டிருந்தாலும் உள்ளத்தால் ஒன்றுபட்டு வருவது அவனுக்குத் தெரிந்தது.

## அத்தியாயம் பதினைந்து

# இரும்பும் காந்தமும்

“சங்கரராமா, ஏன் இந்தக் கூட்டம்? எல்லாரையும் போகச் சொல்லு. திரிவேணி கொஞ்ச நேரம் இளைப்பாறட்டும்'' என்று தீக்ஷிதரைப் பார்த்துச் சொன்னார் சர்தார். கொஞ்ச நேரத்தில் அந்த அறைக்குள்ளிருந்த கூட்டம் கலைந்துவிட்டது. தெருவில் மட்டும் சிலர் கூடி நின்றார்கள். முக்கியமான சில தொண்டர்கள் திரிவேணியிடம் விடை பெற்றுச் செல்ல வந்தார்கள். அவர்களைக் கண்டதும் திரிவேணி எழுந்திருக்க முயன்றாள்.

''நீங்கள் படுத்திருங்கள். அலட்டிக் கொள்ள வேண்டாம்'' என்றார்கள் தொண்டர்கள்.

''நானே எப்படியும் பொதுக்கூட்டத்தை நடத்தி விடுங்கள். முடித்தால் நான் வந்து விடுகிறேன்'' என்றாள் திரிவேணி.

''நீங்கள் அலட்டிக் கொள்ளக் கூடாது. கூட்டத்தை வேண்டுமானாலும் இன்னொரு நாள் நடத்தலாமே!'' என்றார் ஒரு தொண்டர்.

''ஊஹூம், கூடாது. நானே மாலையே கட்டாயம் நடத்திவிட வேண்டும். எனக்காகக் காத்திருக்க வேண்டாம். தீக்ஷிதர் உங்களுக்கு வேண்டிய உதவியைச் செய்வார்'' என்றாள். தொண்டர்கள் விடை பெற்றுக் கொண்டு சென்று விட்டார்கள்.

''நான் போய் வரட்டுமா?'' என்று கூறி விட்டு வெங்குவும் போகப் புறப்பட்டான்.

''நீதானப்பா, எங்கள் வேணியைக் காப்பாற்றினாய்'' என்றார் சர்தார் நன்றியுடன்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை, சார்!'' — என்று நாணத்துடன் கூறிவிட்டுத்] திரிவேணியைப் பார்த்தான் வெங்கு.

''இந்த மாதிரியெல்லாம் நீ எங்களுக்கு உதவி செய்வதை சூப்பிரின்டென்டென்ட் பார்த்தால் உனக்குத்தான் ஆபத்து!'' என்றாள் திரிவேணி.

''என்ன ஆபத்து? உயிரை வாங்கிவிடுவார்களோ? அதற்கெல்லாம் நான் பயந்தவனில்லே'' என்றான் வெங்கு, இடுப்பில் கையை வைத்துக் கொண்டு. அவன் பேசிய விதமும் நின்ற விதமும் பார்க்க வேடிக்கையாக இருந்தது.

''இந்தா வெங்கு, இதை வைத்துக் கொள்!'' என்று நூறு ரூபாயை எடுத்து வெங்குவிடம் நீட்டினார் சர்தார்.

''சேச்சே, இதெல்லாம் என்ன ஸார்?'' என்றான் குழப்பத்துடன் வெங்கு. பிறகு திரிவேணியிடம் திரும்பி, ''பார், திரிவேணி, உங்கப்பா பணம் கொடுக்கிறார்கள்; இப்படியெல்லாம் செய்தால் அப்புறம் நான் இங்கு வரமாட்டேன்.....'' என்று கூறிவிட்டு வெளியேறினான்.

''இது ஓர் அதிசயப் பிறவி! நூறு ரூபாயெல்லாம் அவனுக்கு லட்சியமில்லை. பொடி வாங்க அரையணா போதும் அவனுக்கு'' என்றாள் திரிவேணி.

''ஏதோ அசட்டுப் பிசட்டென்று பேசுகிறானே தவிர, தங்கமான மனசு. இன்று எவ்வளவு துணிச்சலோடு திரிவேணியைக் காப்பாற்றினான்!'' என்று வியந்தாள் அத்தை.

கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த பெஞ்சியில் சர்தார் உட்கார்ந்து கொண்டார். பக்கத்தில் தீக்ஷிதரும் அமர்ந்தார்.

''பார்த்தீர்களா, ஹிம்சையின் கொடுமையை?'' என்று கூறிச் சிரித்தாள் திரிவேணி.

''ஹிம்சையின் கொடுமையா? அஹிம்சையைக் கையாண்டிருந்தால் உன்னை உயிரோடு பார்த்திருக்க முடியாது!'' என்றான் மீனாட்சிநாதன்.

''ஏன்?''

''காசிலிங்கம் மட்டும் அந்தப் போலீஸ்காரனின் மண்டையை உடைத்திருக்காவிட்டா



டால், நீ தப்பியிருக்க முடியுமா ?'' என்றான் மீனாட்சிநாதன்.

''என்ன......?'' என்று அலறிக்கொண்டு எழுந்தாள் திரிவேணி.

தீக்ஷிதர் பாய்ந்து அவளைப் படுக்க வைக்க முயன்றார். ஆனால் திரிவேணி திமிறிக் கொண்டு எழுந்து படுக்கையில் உட்கார்ந்து விட்டாள்.

''போலீஸ்காரர்களைத் தாக்கினீர்களா? எங்களுக்கு ஏன் இப்படிக் கெட்டபெயரை உண்டாக்குகிறீர்கள். நாங்கள் உங்களுக்கு என்ன கெடுதிசெய்தோம்?'' என்றுகத்தினாள்.

''வேணி, அமைதியாயிரம்மா!'' என்றாள் அத்தை பதற்றத்துடன்.

''ஊரில் என்ன சொல்லுவார்கள்? சத்தியாக்கிரகிகள் போலீஸ்காரர்களை அடித்தார்கள் என்றுதானே பேசுவார்கள்? எங்கள் கூட்டத்தோடு இப்படி இடையில் நுழைந்து ஏதாவது செய்து மகாத்மாவுக்குக் கெட்ட பெயர் வாங்கிக் கொடுத்து விடுகிறீர்கள். உங்களை யார் கூப்பிட்டது? உங்களால் எங்களுடைய புனிதமான இயக்கத்துக்கே கெட்ட பெயர். நீங்கள் செய்த பழியெல்லாம் கடைசியில் எங்கள் தலையில் தான்'' என்று வெறி கொண்டவளைப்போலக் கத்தினாள். காசிலிங்கம் ஒன்றும் பேசாமல் தலை குனிந்து நின்றான். அறையில் மௌனம் நிலவியது.

''நாங்கள் எக்கேடும் கெட்டுப் போகிறோம், உங்களுக்கென்ன? எங்களைக் காப்பாற்றிக் கொள்ள எங்களுக்குத் தெரியும். நீங்கள் வரவேண்டியதில்லை. போலீஸ்காரனை அடிக்க உங்களுக்கு உரிமையும் கிடையாது!'' என்று மனம் குமுறிக் கத்தினாள் திரிவேணி.

''நான் செத்துப் போகிறேன்....அத்தனை பேருமே செத்துப் போகிறோம். காந்தியப் பாதை சவக் குழியில்தான் இருக்குமென்றால் நாங்கள் போகத் தயார். உங்களை யார் எங்கள் வழியில் குறுக்கிடச் சொன்னது.....?'' — கோபாவேசத்தில் ரங்கமணியைப் பார்த்து இரைந்து கத்தினாள் திரிவேணி. அவளுடைய ஆவேசத்தைக் கண்டு திகைத்துப் பின்வாங்கினான் ரங்கமணி. திரிவேணிக்குக் கோபத்தால் உடல் நடுங்கியது. ஆயாசம் ஏற்பட்டு மயங்கி விழுந்தாள். சர்தார், அவளைத் தாங்கிப் படுக்க வைத்தார். எல்லாரும் பரபரப்படைந்தார்கள். அத்தை ஓடிச் சென்று தண்ணீர் எடுத்து வந்து சர்தாரிடம் கொடுத்தாள். திரிவேணியின் முகத்தில் தண்ணீர் தெளித்தார் சர்தார்.

குளிர்ந்த நீர் முகத்தில் பட்டதும் கண்களைத் திறந்தாள் திரிவேணி. பரக்கப் பரக்க விழித்தாள். பிறகு மீண்டும் கண்களை மூடிக்கொண்டாள். களைப்பால் முகம் வாடிவிட்டது.

''கொஞ்ச நேரம் தூங்கட்டும்'' என்று கூறிவிட்டு வெளியே வந்தார் சர்தார்.



அவரைத் தொடர்ந்து எல்லாரும் அந்த அறையை விட்டு வெளியே வந்தார்கள். அத்தை மட்டும் அவள் பக்கத்தில் துணைக்கு உட்கார்ந்திருந்தாள்.

அன்று இரவு ரங்கமணி வீட்டிலேயே தங்கி விட்டான். ஒன்பது மணி வரை அத்தைதான் திரிவேணியின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்.

தூக்கமில்லாமல் புரண்டு கொண்டிருந்த ரங்கமணி, எழுந்து வராந்தாவுக்கு வந்த போது, அறைக்குள் கட்டிலுக்குப் பக்கத்தில் அத்தை அமர்ந்திருப்பதைப் பார்த்ததும் அறைக்குள் நுழைந்தான்.

''இரவு முழுவதும் இப்படியேதான் உட்கார்ந்திருக்கப் போகிறீர்களா?'' என்றான்.

''இப்போது தூங்குகிறாள். விழித்ததும் சூடாக ஏதாவது கொடுக்க வேண்டும். அதற்காகத்தான் இருக்கிறேன்'' என்றாள் அத்தை.

''நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள், களைப்பாயிருப்பீர்கள். நான் இருக்கிறேன்'' என்றான்.

''வேண்டாம், தம்பி, நீ படுத்துக் கொள்'' என்றாள் அத்தை.

''பரவாயில்லை. நீங்கள்தான் களைப்பாயிருக்கிறீர்கள்'' என்றான் ரங்கமணி.

''சரி, திரிவேணி விழித்ததும் எழுப்பு'' என்று கூறிவிட்டுக் கட்டிலுக்குப் பக்கத்தில் ஒரு ஜமுக்காளத்தை விரித்து அத்தை மறு பக்கமாகத் திரும்பிப் படுத்துக் கொண்டாள். திரிவேணியின் தலைமாட்டிலிருந்த நாற்காலியில் ரங்கமணி அமர்ந்து கொண்டான்.

சிறிது நேரத்தில் அத்தை தூங்கிவிட்டாள். பக்கத்து அறையில் நீலகிரியின் குறட்டை தெளிவாகக் கேட்டது. வராந்தாவில் குமார், தூக்கத்தில் புரண்டு கொண்டிருந்தான். ஜிம்மி கொஞ்ச நேரத்துக்கு ஒரு முறை எதையாவது பார்த்து விட்டு உறுமிக் கொண்டிருந்தது. அந்த அமைதியான இரவில் அப்படி விழித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது ரங்கமணிக்குப் புது அநுபவமாயிருந்தது.

முன்பு ஒரு முறை அவன் கடுமையான காய்ச்சலில் விழுந்து கிடந்த போது அவனுடைய ராணி, இப்படித்தான் ஓர் இரவு முழுவதும் அவன் தலைக்குப் பனிக் கட்டியை வைத்துக் கொண்டிருந்தாள். காலையில்தான் அவனுக்குத் தெரிந்தது அவள் இரவு முழுவதும் விழித்திருந்தாள் என்பது. இப்போது திரிவேணிக்காக அவன் விழித்திருக்கிறான்!

ரங்கமணிக்குப் பழைய நினைவுகள் இனித்தன. ஆனால், அதே சமயம் நெஞ்சில் வேதனையும் படர்ந்தது. தேன்கூட்டில் கையை விட்டுத் தேனை நக்கும் போது, தேனீக்கள் கொட்டுவது போல் பழைய நினைவின் இனிமையிலும் வேதனை இருந்தது. நினைவில் வந்து ஒட்டிய பழைய சம்பவத்தைத் துடைக்க முயன்றான். தான் டில்லி போக இருப்பதை நினைத்துக் கொண்ட போது மனத்தில் தெம்பு ஏற்பட்டது. எப்போதுமே பிரயாணம் என்றால் அவனுக்கு உற்சாகந்தான். அதுவும் டில்லிவரை போகிறான். பெரிய தலைவர்களைச் சந்திக்கப் போகிறான். அது மட்டுமா? திருபர் என்ற முறையில் அவர்களோடு பேசும் வாய்ப்பும் கிடைக்கப் போகிறது. இந்த நினைவினால் மனத்தில் உற்சாகம் பொங்கியது.

'திருபர் வேலையெல்லாம் வேஷந்தானே, சர்தார் வேறு ஏதோ ஒரு முக்கியமான விஷயமாக அனுப்புகிறார். அந்தப் பொறுப்பை வெற்றியுடன் முடித்துக் கொண்டு திரும்ப வேண்டும்' என்று அவன் மனம் எச்சரித்தது.

இந்தச் சமயத்தில் திரிவேணி, தூக்கத்தில் புரண்டாள். அவன் முகத்தையே கூர்ந்து பார்த்தான்.

இவ்வளவு அமைதியான வதனத்தில், அப்போது எப்படி ஆவேசம் வந்தது! கொடி மாதிரி துவண்டு கிடக்கும் இந்த மெல்லிய உடலுக்குள் எத்தனை விசித்திரமான குணங்கள் மறைந்து கிடக்கின்றன! ஒரு குழந்தையைப் போல் இப்படிச் சுருண்டு கிடக்கும் இவளா, ஒரு பெரிய ஊர்வலத்துக்குத் தலைமை தாங்கி, போலீஸுக்கும் பயப்படாமல் துணிந்து மறியல் செய்தாள்?

அவளையே வியப்போடு கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். மூடியிருந்த அவள் கண்கள் திறந்தன. திறந்த கண்கள் திரும்ப மூடாமல் அவன் கண்களையே நோக்கின. சிறிது நேரம் இருவர் பார்வையும் ஒன்றை ஒன்று எதிர்த்துக்கொண்டிருந்தன.

திரிவேணி மெதுவாகச் சிரித்தாள்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? என் முகத்தில் ஏதாவது அதிசயத்தைக் கண்டீர்களா?'' என்றாள் திரிவேணி. அவள் பேசியதும்தான் ரங்கமணி திடுக்கிட்டுச் சுய உணர்வை அடைந்தான். அதுவரை தன்னை மறந்து, அவள் முகத்தையே வெறிக்கப் பார்த்திருக்கிறோம் என்ற நினைவால் நாணினான். ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்து விட்டு ''வலி எப்படி இருக்கிறது?'' என்றான்.

''பரவாயில்லை... நீங்கள் இன்னுமா தூங்கவில்லை?'' என்ற திரிவேணி, சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தாள். மணி பதினொன்று.

''நீ விழித்ததும் உனக்குக் குடிக்கச் சூடாக ஏதாவது கொடுக்க வேண்டுமாம். அத்தையை எழுப்புகிறேன்'' என்று எழுந்தான் ரங்கமணி.

''உஸ்...'' என்றாள் திரிவேணி. அவனைத் திரும்பிப் பார்த்தான். எழுப்ப வேண்டாம் என்பதற்கு அடையாளமாகத் திரிவேணி விரலை உதட்டில் வைத்தாள்.

''அத்தை தூங்கட்டும். எழுப்ப வேண்டாம். எனக்குப் பசியில்லை. நீங்கள் உட்காருங்கள்'' என்று திரிவேணி மெதுவாகச் சொன்னாள். எழுந்திருந்த ரங்கமணி, சுற்று முற்றும் பார்த்தான். மேஜை மீது பிளாஸ்க் இருந்தது. அதைத் திறந்து பார்த்தான். பால் சூடாக இருந்தது. அதை ஒரு தம்ளரில் ஊற்றி எடுத்துக்கொண்டு கட்டிலருகில் வந்தான். அவனையே பார்த்துக்கொண்டிருந்த திரிவேணி, ''நீங்கள் ஏன் சிரமப்படுகிறீர்கள்?'' என்று கூறிக் கொண்டே எழுந்திருக்க முயன்றாள். வலியினால் முகத்தைச் சுளித்தாள். ரங்கமணி முதுகைத் தாங்கித் தூக்கி விட்டான்.

படுக்கையில் உட்கார்ந்து கொண்டாள். ரங்கமணியின் கையிலிருந்த தம்ளரை வாங்கிக்கொண்டாள். ரங்கமணி நாற்காலியில் உட்கார்ந்தான். பாலைக் குடிக்காமல் கையில் வைத்துக் கொண்டே பேசினாள் திரிவேணி.

''நீங்களும் மறியல் நடந்த இடத்துக்கு வந்தீர்களா?''

''இல்லை....வலி அதிகமாக இருக்கிறதா?''

''தாங்க முடியாத அளவு இல்லை...உங்கள் மீது அநாவசியமாகக் கோபப்பட்டுவிட்டேன்....'' என்றாள் திரிவேணி. அவளுடைய பார்வை அவனிடமிருந்து மன்னிப்பை எதிர்பார்ப்பது போலிருந்தது.

''உனக்கு வந்த கோபத்தில் மயக்கம்கூட வந்துவிட்டதே!'' என்றான் ரங்கமணி.

''எனக்கென்னவோ இன்று இப்படிக் கோபம் வந்து விட்டது; அதுவும் உங்கள் மீது....'' என்று கூறியபோது, அவள் மனம் தவித்து விட்டது. ரங்கமணி சிரித்துக் கொண்டான்.

''என்மீது உங்களுக்கு வருத்தம்தான் இல்லையா?'' — அவன் கேட்டான்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. மனத்தை அலட்டிக் கொள்ளாதே. கொஞ்ச நேரம் தூங்கேன்.''

''ஊஹூம், இனி தூக்கம் வராது. இவ்வளவு நேரம் தூங்கிவிட்டேனே...நீங்கள் வேண்டுமானால் தூங்குங்கள்.''

''எனக்குத் தூக்கம் வரவில்லை. பாலைக் குடிக்காமல் வைத்திருக்கிறாயே, ஆறிவிடப் போகிறது'' என்றான் ரங்கமணி.

கட்டிலுக்குப் பக்கத்தில் சத்தம் கேட்கவே ரங்கமணி திரும்பிப் பார்த்தான். அத்தை தூக்கத்தில் புரண்டு படுத்தாள். திரிவேணி பாலைக் குடித்துவிட்டுத் தம்ளரைப் பக்கத்திலிருந்த பெஞ்சின் மீது வைத்தாள்.

''நாளைக்கு ஊருக்குப் போகிறேன்'' என்றான் ரங்கமணி. இதைக் கேட்டுத் திகைத்துப்போய் அவனையே உற்றுப் பார்த்தாள் திரிவேணி.

''எந்த ஊருக்கு?''

''டில்லிக்கு.''

''டில்லிக்கா... அங்கென்ன?''

''கிரிப்ஸ் வருகிறார் இல்லையா; சுயேச்சைப் பத்திரிகையின் நிருபராக அங்கு போகிறேன்.''

திரிவேணி சிரித்தாள்.

''என்ன சிரிக்கிறாய்? நிருபர் வேலைக்கு நான் லாயக்கில்லை என்கிறாயா?''

''அதற்கில்லை; கிரிப்ஸ் வருவதற்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? டில்லியில் வேறு ஏதோ வேலை. தீவிரவாதி டில்லிவரை போகிறார் என்றால், அதற்குச் சைவ உணவு சாப்பிடும் கிரிப்ஸ் காரணமாக இருக்க முடியுமா?'' என்று கூறிவிட்டுப் புன்னகையைச் சிந்தினாள்.

''எப்படியும் வைத்துக்கொள். நாளைக்குப் புறப்படுகிறேன்.''

''எப்போது திரும்புவீர்கள்?''

''கிரிப்ஸ் லண்டன் திரும்பும்போது'' என்று ரங்கமணி கூறியபோது அவனுக்கே சிரிப்பு வந்து விட்டது.

''அவர் லண்டன் திரும்பினாலும் திரும்பாவிட்டாலும் நீங்கள் சீக்கிரம் திரும்பி விடுங்கள்'' என்ற திரிவேணி பிறகு கேட்டாள்: ''எனக்காக டில்லியில் ஒரு காரியம் செய்வீர்களா?''

''என்ன?'' — ஆவலோடு ரங்கமணி கேட்டான்.

''வீண் ஆசைதான்; இருந்தாலும் ஆசை யாரை விட்டது....''

''சொல்லேன்...''

''ஒரே ஒரு முறை மகாத்மாவைச் சந்தித்து விட்டு வாருங்களேன்.''

''அவர் டில்லியில் இல்லையே.''

''கிரிப்ஸைச் சந்திக்க டில்லிக்கு வந்தாலும் வருவார்.''

''கிரிப்ஸ் பெரிய மனிதர். காந்தியும் அவரும் சந்தித்தால் நாட்டுக்கு ஏதாவது நன்மை கிடைக்கும். இந்த ரங்கமணி சந்தித்து ஆகப் போவதென்ன?'' என்றான் ரங்கமணி அலட்சியமாக.

''காந்தியை கிரிப்ஸ் சந்திப்பதை விட, இந்த ரங்கமணியின் பேட்டியில்தான் எனக்கு அக்கறை இருக்கிறது, போதுமா?'' என்று கூறிவிட்டு ஆவலோடு அவன் முகத்தைப் பார்த்தாள். ரங்கமணி பதில் ஒன்றும் சொல்லாமல் மெதுவாகச் சிரித்து மழுப்பிவிடப் பார்த்தான்.

''என்ன? எனக்காக... எனக்காக ஒரு முறை அவரைச் சந்தியுங்கள். உங்களைச் சந்திக்க வேண்டும் என்று மகாத்மாவே விரும்புகிறார். 'என்றாவது ஒருநாள் என்னைச் சந்திக்க வருவான்' என்று மகாத்மா எழுதியிருந்ததை நீங்களே பார்த்தீர்களே. இந்த முறை நீங்கள் அவரைக் கட்டாயம் சந்திக்க வேண்டும்'' என்றாள் திரிவேணி.

''என்னால் முடியாத ஒரு காரியத்தை நான் எப்படிச் செய்வது, திரிவேணி?'' என்று கேட்டான் ரங்கமணி.

''ஏன் முடியாது?''

''தீயும் தண்ணீரும் சேருமா?''

''அழிவை உண்டாக்கும் தீயை அந்தத் தண்ணீர் அழித்து விடுவதாயிருந்தால், அப்படியே செய்யட்டுமே.''

''நீ நினைப்பது போல் இந்தத் தீ, அழிக்கும் தீயல்ல. இது கைவிளக்கில் எரியும் சுடர். இதுதான் விடுதலைக்கு வழி காட்ட வேண்டும்.''

''அப்படி நினைத்துக் கொண்டுதான் இந்த விளக்கு கூரையில் பட்டுக் கொண்டிருக்கிறது. கூரை எரிந்து விழுவதற்குள் தண்ணீரோடு ஐக்கியமாகட்டுமே'' என்றாள் திரிவேணி.

ரங்கமணி பதில் சொல்லாமல் தரையைக் காலால் கீறிக்கொண்டே உட்கார்ந்திருந்தான்.

''திலகருக்கு எழுதியிருந்த கடிதத்தில் மகாத்மா என்ன எழுதியிருந்தார் தெரியுமா? 'அவன் மனம் சஞ்சலத்தில் குழம்பும் போதெல்லாம் அவனிடம் இருக்கும் இயோக நாதரின் பொம்மை அவனுக்குச் சாந்தி கொடுக்கும். என்னைவிட இயோகநாதருக்குச் சக்தி அதிகம்' என்று எழுதியிருந்தார். அந்த இயோககூட உங்களிடம் தோற்றுவிட்டார்'' என்றாள் திரிவேணி. ரங்கமணி பதில் பேசவில்லை.

''அஹிம்சையும், சாத்வீகமும் ஒன்றுக்குமே பயன்படாது என்று முடிவு கட்டி விட்டீர்களா?''—திரிவேணி கேட்டாள்.

உடல் அளவுமீறியமாகப் பருமனாக இருப்பதால் உங்கள் இதயம் எத்தனை கஷ்டப்படுகிறது தெரியுமா?



அளவுமீறியமாக உங்கள் உடலில் இருக்கும் ஒவ்வொரு பவுண்ட் சதைக்கும் உங்கள் இதயம் மூன்று மைல் நீள முள்ள இரத்தக் குழாய்களுக்கு ரத்தத்தைப் பாய்ச்ச வேண்டி இருக்கிறது. இதனால்தானோ என்னவோ பருமனாக உள்ளவர்களுக்கு அதிகமாக இதய நோய் வருகிறது.

ஆதாரம்: ''அமெரிக்கன்'' 'பாலி'

---

''இப்போது தேவைப்படாத தத்துவம் இது.''

''அப்படியானால் மகாத்மாவின் இயக்கம், இதுவரை அவர் சாதித்தவை, அவரை நம்பிக் கோடிக் கணக்கானவர்கள் அவரைப் பின்பற்றியிருப்பது, அவரை உலகம் அக்கறையோடு கவனிப்பது எல்லாமே வீண் என்கிறீர்களா?''

''திரிவேணி, என் மனத்தைக் குழப்பாதே. மகாத்மா மகாத்மாவாகவே இருந்துவிட்டுப் போகட்டும். நான் சாதாரண ரங்கமணியாக இருந்துவிட்டுப் போகிறேன்'' என்றான் ரங்கமணி, தலையைக் குனிந்துகொண்டு. திரிவேணி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

''என்றாவது ஒரு நாள் நீங்கள் என் பக்கம் வருவீர்கள் என்ற நம்பிக்கையை நான் ஒரு நாளும் இழந்து விடமாட்டேன். 'என்றாவது ஒரு நாள் என்னைச் சந்திக்க வருவான்' என்று மகாத்மா சொன்னதும் பலிக்காமல் போகாது'' என்றாள் திரிவேணி.

''நல்ல பிள்ளைகள்... இப்படியா தூங்காமல் விழித்துக் கொண்டு அரட்டையடிப்பீர்கள்'' என்ற குரலைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டனர். கட்டிலின் பக்கத்தில் அத்தை நின்று கொண்டிருந்தாள்.

''திரிவேணி அப்போதே விழித்துவிட்டாளா? என்னை எழுப்பக் கூடாது?'' என்றாள் அத்தை, ரங்கமணியைப் பார்த்து.

''தூங்கும்போது எழுப்புவானேன்? நானே பிளாஸ்கிலிருந்த பாலை எடுத்துக் கொடுத்து விட்டேன்'' என்றான் ரங்கமணி.

''மணி பன்னிரண்டுக்கு மேலாகிவிட்டது. தூங்குங்கள். உங்கள் தர்க்கங்களை யெல்லாம் காலையில் வைத்துக் கொள்ளலாம்'' என்றாள் அத்தை.

ரங்கமணி எழுந்து தன் அறைக்குச் சென்றான். இருட்டில் கட்டிலில் படுத்துக் கொண்டே, குழம்பிய மனத்தை இன்னும் குழப்பிக் கொண்டிருந்தான். திரிவேணி கூறியது அவன் மனத்தில் புரண்டுகொண்டிருந்தது.

'....மகாத்மாவின் இயக்கம்; இதுவரை அவர் சாதித்தவை, அவரை நம்பிக் கோடிக் கணக்கானவர்கள் அவரைப் பின்பற்றியிருப்பது; அவரை உலகம் அக்கறையோடு கவனிப்பது; எல்லாமே வீண் என்கிறீர்களா....?'

உண்மையிலேயே இவை அனைத்தும் வீண்தானா? இவ்வளவு பெரிய இயக்கமும், அதற்காகச் செலவழிந்த சக்தியும், காலமும் விரயம்தானா...? மகாத்மாவிடம் உண்மை இல்லையென்றால் உலகம் அவரை இப்படி அக்கறையோடு பார்க்குமா?

அஹிம்சைக்கு உண்மையில் சக்தி இல்லையென்று சொல்லிவிட முடியுமா? சக்தி இல்லை என்றால் அவர் மகாத்மா ஆனது எப்படி? அவரை அடுத்துக் கோடிக்கணக்கான தொண்டர்கள் உயிரையும் தியாகம் செய்யத் துணிந்து நிற்பது எப்படி? வெள்ளைக்காரன் கூட அக்கறை கொண்டு, இன்று, கிரிப்ஸைத் தூது அனுப்பியதுதான் எப்படி....? எப்படி....? அஹிம்சைக்கும் சாத்விகத்துக்கும் சக்தி இல்லாமலா இதெல்லாம் நடந்திருக்கின்றன....?

ரங்கமணியின் மனம் குழம்பித் தவித்தது. வெகு நேரத்துக்குப் பிறகு தன்னை மறந்து தூங்கி விட்டான். காலையில் எழுந்தபோதும் அவன் மனத்தில் அமைதி இல்லை.

ஃ ஃ ஃ

அன்று அச்சுக் கூடத்தில் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளையிடம் தனிமையில் பேசிய பிறகுதான் அவன் தவிப்புத் தணிந்தது. அவரிடமும் காந்தியின் சாத்விகப் போராட்டத்தின் சக்தியைப் பற்றி விவாதித்தான். அவன் தோள் மீது அன்போடு ஒரு கையைப் போட்டுக் கொண்டு சர்தார் சொன்னார்:

''இரவு திரிவேணியோடு நீ பேசிக்கொண்டிருந்ததை நானும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். கள் குடிப்பவனிடம் போய்ப் போதையைப் பற்றிக் கேட்டால், அவன் அதைச் சொர்க்கம் என்றுதான் வாதாடுவான். காந்தி அஹிம்சையால் எதைச் சாதித்து விட்டார்? இந்தியாவுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்து விட்டாரா? ஓர் அங்குல நிலத்தையாவது வெள்ளைக்காரன் நமக்கு விட்டுக் கொடுத்து விட்டானா? காந்தியைப் பின்பற்றிக் கோடிக் கணக்கில் தொண்டர்கள் இருக்கிறார்களே, இவர்கள் எதைச் சாதித்தார்கள்? வீணாக அடிபட்டுச் சாகிறார்களே தவிர, சுதந்திரம் வாங்கி விட்டார்களா? யாராவது ஒருவரைப் பிடித்து வைத்துக் கொண்டு கும்பிடுவது தான் நம்மவர்களின் பழக்கம். இப்போது காந்தி கிடைத்திருக்கிறார். கும்பிடுகிறார்கள். இவர் போய் விட்டால் வேறு யாராவது கிடைப்பார்கள். இது இரத்தத்தில் யுகம் யுகமாக ஊறிவிட்ட பழக்கம். இப்படிக் கும்பிட்டுக் கும்பிட்டுத்தான் சீரழிந்துவிட்டோம். சாத்விகப் போராட்டத்தினால் காந்தி ஒன்றையுமே சாதித்து விடவில்லை. மகாத்மா என்ற பட்டம்தான் மிஞ்சியிருக்கிறது. இந்த உண்மையைப் புரிந்து கொண்டுதானே சுபாஷ் சந்திர போஸ், இந்தியாவை விட்டே வெளியேறி, இந்திய விடுதலைக்காகப் பாடுபடுகிறார். போஸின் சாதனையில் ஆயிரத்தில் ஒரு பங்காவது காந்தியின் அஹிம்சையால் செய்ய முடிந்ததா? ரங்கமணி, உன்னுடைய மனம் குழம்பும்போதெல்லாம் சுபாஷ் போஸின் வீரத்தை நினைத்துக் கொள். கடிக்க வரும் பாம்பை அடிக்கத்தான் வேண்டுமே தவிர, அஹிம்சைக்காகக் கையைக் கொடுத்துச் சாக முடியுமா? பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் சென்னையில் வெள்ளைக்கார

சார்ஜண்ட் நடத்திய தடியடியை நினைத்துக் கொண்டால், இந்த சத்தியாக்கிரகம், அஹிம்சை யெல்லாம் உன் நினைவிலிருந்து பஞ்சாகப் பறந்துவிடுமே.''

சர்தார் பேசியதை உன்னிப் பாகக் கேட்டான். இளகிக் கிடந்த மனம், மீண்டும் இறுகிக் கல்லாகி விட்டது. தன்னுடைய குழப்பத்தை எண்ணித் தனக்குள் ளேயே சிரித்துக் கொண்டான்.

''நீ, திரிவேணியோடு பழகும் போது சர்வ ஜாக்கிரதையாகப் பழக வேண்டும். அவளைப் பேச் சில் வெல்ல முடியாது. ஒரு நொடியில் எதிராளியை மடக்கித் திக்குமுக்காட வைத்து விடு வாள். அவளிடம் நீ அரசியல் பற்றிய பேச்சையே இனி பேசாமலிருப்பதுதான் நல்லது'' என்றார் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளை.

உண்மைதானே, ஒரே கேள்வி யில் நேற்று இரவு அவனை எப்படி மடக்கி விட்டாள், திரிவேணி!

''திரிவேணியின் செல்வாக்கில் உன் கொள்கை, நீ வந்த பாதை எல்லாவற்றையும் இழந்துவிடு வாயோ என்று நம் சங்கத்தில் உள்ளவர்கள் சந்தேகிக்கி றார்கள்'' என்றார் சர்தார். இதைக் கேட்டுத் திடுக்கிட்டான் ரங்கமணி.

''அப்படி என் கொள்கையை நான் ஒருபோதும் மறக்க மாட் டேன்'' என்றான் ரங்கமணி, நாத் தழுதழுக்க.

''எனக்கு உன் மீது நம்பிக்கை உண்டு. ரங்கமணி, நம்பிக்கை உண்டு. இருந்தாலும் நீ ஜாக் கிரதையாகவே இருந்து கொள்ள வேண்டும். காந்தத்தை நெருங் கும் இரும்பும் காந்தமடைவது மாதிரி ஆகிவிடக் கூடாது'' என்றார் சர்தார்.

பிறகு, டில்லியில் ரங்கமணி என்னென்ன செய்ய வேண்டும், யார் யாரைச் சந்திக்க வேண்டும் என்ற விஷயங்களைச் சர்தார் விளக்கியபோது, ரங்கமணி வியப் பில் ஆழ்ந்து விட்டான். தன் பயணம் அத்தனை முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை உணர்ந்த போது அவனுக்குள்ளேயே பயம் கூடத் தோன்றியது. இவ்வளவு பெரிய பொறுப்பை வெற்றி யுடன் முடித்துக் கொண்டு வர வேண்டுமே என்ற திகைப்புத் தோன்றியது. அதே சமயத்தில் ஒரு பெரிய காரியத்தைச் சாதிக் கப் போகிறோம் என்ற உணர் வால் உற்சாகம் அடைந்தான்.

(தொடரும்)



## பட்டணத்தில் பூதம்

அலாவுத்தீன் காலத்து அற்புத விளக்கின் அதிசய பூதம் இன்றைய உலகில் உலவ வந்தால் என்ன நிகழும் என்பது ''பிராஸ் பாட்டில்'' என்ற ஓர் ஆங்கிலப் படத் தின் மையக் கருத்து. இக்கருத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு பட்டணத்தில் பூதம் தயாரிப்பாளர்களும் ஜாடிக்குள் அடைபட்டிருந்ததொரு பூதத்தை அவிழ்த்து விட்டிருக்கிறார்கள்! பூதம் புகுந்தபின் கதை எதற்கு? நடக்காததெல்லாம் நடக்கும், காணாததை — காணத் தகாததை — யெல்லாம் காணலாம். தறிகெட்டு ஓடுகிறது கற்பனைக் குதிரை. நெறிகெட்டு ஆடுகிறார்கள் பெண்கள்— நாட்டியம் என்ற பெயரில். இடம் காலம் இவைகளுக்கு அப்பாற்பட்டவன் நான் என்கிறது ஜீம்பூம்பா — அது தான் பூதம்! அதன்படி நாட்டிய உடைகளுக்கும் ஆடவேண்டிய சூழ்நிலைகளுக்கும் அர்த்தமே இல்லை. முத்தமிழ் மன்றத்தார் நடத்தும் கவிதைப் போட்டியை யும் அதில் கலந்து கொண்டு புதிய முறையில் பாடிய — இல்லை — கூத்தாடிய மூன்று நபர்களையும் பார்த்து இனிப் பல மன்றத்தார் இது போன்ற போட்டிகளுக்கு ஏற்பாடு செய்யலாம்! தமிழுக்குச் சாவு மணி அடிக்க வேறொன்றும் தேவை யில்லை!

'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா?' என்றொரு பாட்டு உண்டு. அதுதான் நினைவுக்கு வருகிறது. பூதத்தைப் பார்த்ததும். 'இத்தனை ஆங்கிலப் படங்களை இந்நாட்டுக்குள் ஏன் வர விட்டாய் இறைவா? அத்தனையி லிருந்தும் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பிடுங்கிப் போட்டுத் தமிழ்ப் படங்களை ஆங்கிலப் பட அவியலாக எடுக்கிறார்களே ஆண்டவா!' என்றுதான் வேதனைப்பட வேண்டியிருக்கிறது! வி. எஸ். ராகவனும், வி. கே. ராம சாமியும் வராவிட்டால் ஏதோ ஒரு தமிழ் பேசும் ஆங்கிலப் படத்தைக் காணும் உணர்வைத்தான் ஏற்படுத்தும் பட்டணத்தில் பூதம்.

ஒலிப்பதிவும் வண்ணக் கலைவும் சிறப்பாக இருக் கின்றன. 'ஜீம்பூம்பா'வாக நடிக்கும் ஜாவர் சீதாராமன் பாத்திரப் படைப்புக்கு ஏற்ப நடித்திருக்கிறார். அடிதடி உதை குத்து அமிட்டங்களில் ஜெய்சங்கரும், மனோகரும் —உடையும் கண்ணாடிகளைப்போல மேஜை நாற்காலிகளை நொறுக்கிப் பிச்சு வாங்கியிருக்கிறார்கள்! 'கும்கும்' குத்து அபிமானிகளுக்கு இந்தப் படம் பாதாம் அல்வா!

எப்படியும் படத்தை 'ஜீம்பூம்பா' ஓட்டி விடும் என்ற நம்பிக்கையில் தயாரிப்பாளர்கள் கற்பனையையும் கவர்ச்சி யையும் கொட்டி விளையாடியிருக்கிறார்கள். விளையாட்டு வீண் போகாதென்றே நினைக்கிறோம். ஜீம்...பூம்..பா...!







1. மாண்ட்ரியலில் இந்திய கண்காட்சிப் பிரிவில் இந்தியப் பண்பாட்டைச் சித்திரிக்கும் கலைப் பொருள்களோடு இந்திய கிராமப்புறத்தைச் சித்திரிக்கும் காட்சிகளும் இடம் பெறப் போகின்றன. அவற்றில் ஒன்று. 2. வனவிலங்கு புகைப்படக் கண்காட்சியை மாக்ஸ்முல்லர் பவனில் திறந்து வைத்தார் ஸ்ரீமதி ருக்மிணிதேவி. இந்தப் புகைப்படங்களை எடுத்தவர் திரு மா. கிருஷ்ணன். 3. திரு அ. முனுஸ்வாமி அய்யர் தலைமையில் சிறப்பாகச் சென்ற இருபது ஆண்டுகளாக நடந்து வரும் மங்களாம்பாள் ஆரம்பப் பள்ளியின் ஆண்டு விழாவின் சேர்ந்த புதிதாகக் கட்டப்பட்ட காஞ்சி ஜகத்குரு ஆசாரியாள் கூடத்தைச் சென்னை வழக் போது ஸ்ரீ டி.வி. விசுவநாதய்யர் திறந்து வைத்தார். 4. இந்திய விமானப் படையின் முப்பத்தி ஐந்தாவது வருஷக் கொண்டாட்ட வைபவத்தை யொட்டி இந்திய விமானப் படையைச் நான்கு எம்.ஐ.ஜி. ஸூபர்ஸானிக் விமானங்கள் புதுதில்லி இந்திய வாசலின் மீது பறக்கின்றன.





# வெண்ணிலவுப் பெண்ணரசி

**முன் கதைச் சுருக்கம்**

சேரலாதன் என்னும் சேர மன்னன் தன்னுடைய தானைத் தலைவனான வேலவன் கோதையைத் தனியாக அழைத்து வெள்ளைத் தீவிலுள்ள கடம்பர்கள் என்ற கொள்ளைக்காரர்கள், துளுநாட்டு மன்னர்களாகிய நன்னர்களின் உதவியோடு யவன மரக்கலங்களைக் கொள்ளையடிக்கிறார்கள் என்றும், இவர்களை ஒழித்தால் அல்லாமல் யவனர்கள் சேர நாட்டோடு செய்து வரும் வாணிபம் வளராது என்றும் சொல்லி இதற்காக வெள்ளைத் தீவுக்குப் போய் உளவு கண்டு வரும்படி வேலவனை அனுப்புகிறான்.

கடலில் ஒரு மிதவையிலே இரகசியமாகச் செல்லும் வேலவன் புயலுக்கு உள்ளாகி, மிதவையை இழந்து, நீந்திக் கரையேறும்போது வெள்ளைத் தீவு மணலிலே மயக்கம் உற்று விழுகிறான். இதை நிலா முற்றத்திலிருந்து பார்த்த இளவரசி நீலவல்லி, கரைக்கு வந்து வேலவனை மயக்கம் தெளிவிக்கிறாள். அப்போது கடல் மீது சென்றிருந்த கொள்ளைக் கூட்டத் தலைவனான கடம்ப வேந்தன் தீவுக்குத் திரும்புகிற எக்காள ஒலி கேட்டு, வேலவன் கோதையை ஒரு சமணக் குகையிலே மறைந்து கொள்ளும்படி சொல்லி விட்டு அவள் அரண்மனைக்குள்ளே ஓடிவிடுகிறாள்.

சோமு



சமணக் குகையின் மறைந்திருந்த வேலவன் அந்தக் குகைக்குப் பின்னும் இருந்த பௌத்தப் பள்ளியில் சில ஜோதிட ஏடுகளைக் கண்டு அவற்றை ஆராய்கிறான். கடற்கொள்ளைக் காரர்களுக்கு உடந்தையாக இருக்கும் துறை நாட்டு மன்னன் ஒரு பெண் கொலை புரிந்திருப்பதாகக் கூறிச் சோதிட ஏடுகள் கொலை நிகழ்ச்சியை எடுத்துச் சொல்கின்றன.

வில் வீரர்களான கோசர்களுடைய தலைவனின் மகள் நேரிழை, ஓடையிலே குளித்துக் கொண்டிருந்த போது ஒரு மாம்பழம் தண்ணீரில் மிதந்து வரவே, அதை எடுத்துச் சாப்பிட்டு விடுகிறாள். அந்தப் பழம் மன்னனுடைய காவல் மரத்தின் பழம்! அதாவது யாருமே அதைத் தொடக் கூடாது என்று சட்டம்! இதை அறிந்து மன்னன் வெறிச் சீற்றம் கொண்டு நேரிழைக்கு மரண தண்டனை விதிக்கிறான் என்பதும், அந்தப் பெண் பழி ஒரு பெண்ணினாலேயே தீரப் போகிறது என்பதும் அந்த வரலாறு.

அடுத்த முழு நிலா இரவில் வெள்ளைத் தீவுக் கொள்ளை மன்னன் கடல் மீது கொள்ளைக்காகச் சென்றதும், நீலவல்லி வேலவன் கோதையைப் பார்க்கச் சமணக் குகைக்கு வருகிறாள். தான் வெள்ளைத் தீவு மன்னனாகிய கடம்பனின் வளர்ப்பு மகளே என்றும், அவனுடைய பெற்ற மகள் இல்லை என்றும் சொல்லிக் கடம்பனின் கதையைக் கூறுகிறாள்.

வெள்ளைத் தீவு ஒரு காலத்தில் பௌத்தத் துறவிகள் வாழ்ந்த புண்ணிய நிலமாக இருந்தது. ஒரு நாள் மீகாமன் என்ற மரக்கலத் தலைவனின் யோசனைப்படி அவனுடைய கப்பலிலேயே வெள்ளைத் தீவிலிருந்த துறவிகளை யெல்லாம் தீவிலிருந்து வெளியேற்றி விட்டு நிம்மதியாகத் தூங்குகிறான், வான மண்டலக் கடம்பன் என்ற அந்த மன்னன் ! இந்த நிகழ்ச்சி நீலவல்லியை வேதனைப் படுத்தியது. கடம்ப வேந்தன் செய்துள்ள பழி பாவங்களைத் தான் வெறுப்பதாகவும் இந்தச் சூழ்நிலையிலிருந்து தனக்கு விடிவு காலம் எப்போது வரும் என்று ஏங்குவதாகவும் சொல்லி, நீலவல்லி தான் பிறந்த வரலாற்றை வேலவன் கோதைக்குக் கூறுகிறாள்.

எகிப்துக்கும் தமிழ் நாட்டுக்கும் நெருங்கிய வாணிபம் நடந்து வந்த காலம் அது. சேரநாட்டுக்கு வடகிழக்கில் இருந்த புன்னாட்டு' நீலக்கல் சுரங்கத்திலிருந்து அரிய பல நீல வைரக் கற்கள் அலெக்சாந்திரியா என்ற எகிப்து நாட்டுத் துறைமுகப்பட்டினத்துக்குச் சென்று ஏராளமாக விற்பனையாகி வந்தன. இந்த விற்பனையில் முக்கியமாக ஈடுபட்டவன் க்ளாடியஸ் என்ற யவன வியாபாரி. ஒரு முறை தமிழ் நாட்டுக்கு வரும்போது க்ளாடியஸ் தனது மகள் டயானாவையும் அழைத்து வருகிறான்.

டயானாவுக்கும் புன்னாட்டு இளவரசன் புனல்வேணியனுக்கும் காதல் உண்டாகிப் பல எதிர்ப்புக்களுக்கிடையே திருமணமும் நடக்கிறது. க்ளாடியஸ் மனம் உடைந்து அலெக்சாந்திரியாவுக்குத் திரும்புகிறான். டயானாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. தந்தையின் மறைவுக்குப் பிறகு புன்னாட்டின் அரசனாகப் பட்டம் சூடிய புனல் வேணியன் தந்தையின் விருப்பத்துக்கு இணங்க, தமிழகத்து இளவரசி ஒருத்தியை மணந்து கொண்ட போதிலும், டயானாவுக்கு ஓர் அரசியின் நிலையும் செல்வாக்கும் தருகிறான்.

டயானா தன் தந்தையின் மரணச் செய்தியை யவன வணிகர் மூலம் கேள்விப்படுகிறாள். அலெக்ஸாந்திரியாவில் நடக்கும் நிலவு அம்மன் திருவிழாவுக்குச் சென்று வர வேண்டும் என்று ஆசைப்பட்டு, அரசனின் அனுமதியோடு பெண் குழந்தையும் தானும் ஒரு தாதியுமாக அலெக்ஸாந்திரியா செல்கிறாள் டயானா.

அலெக்ஸாந்திரியா போன இடத்தில் தந்தையின் கல்லறையில் மயக்கம் போட்டு விழுகிறாள் டயானா. உடம்பு பலவீனம் அடைந்து சில நாட்களில் அங்கேயே மடிகிறாள் டயானா. அவளுடைய விருப்பத்தின்படி பெண் குழந்தையைத் தாதியிடம் ஒப்படைத்து அவர்களைத் தமிழ் நாட்டுக்கு அனுப்புகிறான் டயானாவின் சகோதரன்.

அலெக்சாந்திரியாவிலிருந்து திரும்புகிற வழியில் மரக்கலத்தில் கடம்பனுடைய தாக்குதலுக்கு உள்ளாகி, வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வரப்பட்டு அங்கே கடம்பனின் மகளாக வளர்கிறாள் நீலவல்லி என்ற அந்தப் பெண் குழந்தை.

இவ்வாறு தன் வரலாற்றை வேலவனிடம் நீலவல்லி சொல்லி இருவரும் தப்பிச் செல்லத் திட்டமிடுகிறார்கள். வேலவன் புன்னாடு சென்று இரகசியமாக ஓர் அரச மரக்கலம் கொண்டு வருகிறான். அதில் இவர்கள் தப்பிச் செல்லுகையில் இரவு நேரத்தில் நடுக்கடலில் கடம்பன் வந்து தாக்கிப் பிடித்துக் கொள்கிறான். நீலவல்லியின் வற்புறுத்தல் காரணமாக வேலவன் கடலிலே குதித்து நீந்தித் தப்பித்துப் பெருந்துருத்தித் தீவுக்குச் சென்று செல்வந்தி அடிகளிடம் சேர்கிறான். நீலவல்லியை மறுபடியும் கன்னி மாடத்திலே அமர்த்துகிற கடம்பன் ஏதோ காரணத்தால் மறுபடியும் அவளை மிகுந்த அன்புடனேயே நடத்துகிறான் !

இந்நிலையில் பெண் கொலை புரிந்த நன்னனிடம் பழி வாங்கத் துடித்துக் கொண்டிருந்த கோசர் பரம்பரையிலே சூலபாணி என்ற தலைவன் தனது முல்லை மூதூரிலே தன் மகள் பொன்மணிக்கு ஒரு திருமணப் போட்டி நடத்துகிறான். அதன்படி அழலாடி என்ற இளைஞன் காளை மாட்டை அடக்கி வென்று, பொன்மணியை மணக்கிறான். ஆனால் திருமணத்தன்று இரவிலே பொன்மணி தன் கணவனிடம் ஒரு நிபந்தனை சொல்கிறாள். நன்னன் செய்த பெண் கொலைக்குப் பழி வாங்க வேண்டிய கடமை அழலாடியைச் சார்ந்தது என்றும் அந்தக் கடமையைச் செய்த பிறகே தனது கையைப் பற்றலாம் என்றும் உறுதிமொழி கூறுகிறாள் !

அழலாடி தன் ஆசிரியர் ஆதனாரின் உதவியோடு நள்ளிரவில் நன்னனுடைய தங்கல் அரண்மனையின் பள்ளியறைக்குள் குதித்து, மயக்கப் புகையை உபயோகித்து அரசனின் உடம்பு என எண்ணி இருட்டிலே இளவரசியை வெளியே தூக்கி வந்து விடுகிறான். இந்த ஆள் மாறாட்டம் அவனுக்குத் திகைப்பைத் தந்த போதிலும், ஆதனாரின் யோசனைப்

படி இளவரசியைக் கொங்கு வஞ்சி அரண் மனையிலே கொண்டு வந்து மயக்கம் தெளிவிக்கிறார்கள்.

முல்லைமூதூரிலே பொன்மணி கானகத் துக்குச் சென்று கோசர் குலத்துத் தலைவனின் நடு கல்லில் வழிபாடு செய்து கொண்டிருக்கும் போது, இங்கே இளவரசி காணாமற் போன தால் வெகுண்ட துளுநாட்டுத் தானைத் தலைவன் முல்லைமூதூரைத் தீயிட்டுக் கொளுத் திச் சூலபாணிக் கிழவரைச் சிறைப் பிடித்துக் கொண்டு செல்கிறான். காட்டிலிருந்து திரும் பிய பொன்மணி தனது தந்தையின் கதியை எண்ணியும் கணவன் துளு நாட்டு இளவரசி யைக் கடத்திச் சென்றான் என்று கேட்டும் மனம் ஒடிந்து, புத்தப் பள்ளியிலே தஞ்சம் புகுந்து அந்தத் துறவிகளோடு சேர்ந்து பெருந்துருத்தித் தீவுக்கு வருகிறாள்.

முல்லை மூதூர்த் தீயிலே மனைவி பொன் மணி வெந்து சாம்பலானாள் என்று கேட்டு மனம் அதிர்ச்சியடைகிறான் அழுலாடி. அவ னுடைய துயரத்தைக் கண்டு அநுதாபம் கொள்கிறாள் கொங்கு அரண்மனையிலே வாழ் கிற துளுநாட்டு இளவரசி இளநங்கை! நாளாக நாளாக இந்த அநுதாபம் மட்டற்ற அன்பாக வளர்ந்து காதலாகவே மலர்கிறது.

நன்னர்கள் மீது படையெடுப்பதற்காகச் சேரலாதனின் உறவினனாகிய கொங்கு மன்னன் தனது ஆனைப் படையை வலிமைப் படுத்துகிறான். ஆனை பிடிக்கும் திருவிழாவில் அழுலாடி முக்கிய பங்கு கொள்கிறான். அதே சமயம் இளவரசன் செங்குட்டுவனின் தலைமை யில் ஒரு பெரிய கடற் படையை அனுப்பி வெள்ளைத் தீவைத் தாக்கும்படி கட்டளை இடு கிறான் சேரலாதன். இந்தக் கடற்படை பெருந்துருத்தித் தீவுக்குச் சென்று செல் வந்தி அடிகளிடம் வாழ்த்துப் பெற்றுப் பிறகு வெள்ளைத் தீவு நோக்கிச் செல்ல வேண்டும் என்று ஏற்பாடு.

பெருந்துருத்தித் தீவிலே செல்வந்திஅடிகள் பொன்மணிக்கும் துறவிகள் அனைவருக்கும் புகல் தந்து பாதுகாப்பதோடு, இப்போது வேலவன் கோதையும் தானுமாக நின்று செங்குட்டுவனுடைய படையை எதிர்நோக்கு கிறார். இனி மேலேப் படியுங்கள்.

## அத்தியாயம் 2

# கோட்டையைப் பிடித்தார்கள்!

செல்வந்தி அடிகள் உள்ளம் பொங் கிய களிப்போடு செங்குட்டுவனை வர வேற்றார். இளவரசன் கரையிலே இறங் கியதும் உடல் பணிந்து இரண்டு கைகளையும் தாழ்த்தி வளைத்து மிகுந்த ஆர்வத்துடன் அடிகளின் பாதங்களைத் தொட்டுக் கண்களிலே ஒற்றிக் கொண் டான்! மறுவினாடி வேலவன்கோதைக்கு அருகிலே வந்து எல்லையற்ற அன்போடு அந்தத் தானைத் தலைவனை உடம்போடு சேர்த்துத் தழுவிக் கொண்டான். சேர வீரர்கள் அனைவரும் அந்தச் சந்திப்பிலே பொங்கிய அன்பைக் கண்டு உளம் நெகிழ்ந்து நின்றார்கள். செல்வந்தி அடிகள் செங்குட்டுவனை நோக்கிப் பேசலானார்:

''தெய்வங்களுக்குக் கல்லாலும் சொல் லாலும் கோவில் கட்டி நிறுத்தப் போகிற பெரிய பரம்பரை உங்கள் சேர பரம் பரை! அந்தப் பரம்பரையின் எதிர்கால சாதனைகளுக்குரிய அத்தனை அறிகுறியும் உன்னுடைய அரசத் திருமுகத்திலே கண்டு என் உள்ளம் களிக்கிறது அரச குமாரா!'' என்று சொல்லிக்கொண்டே, செங்குட்டுவனுடைய முகத்தைத் தொட் டுத் தமது தெய்வக் கரங்கள் இரண்டி னாலும் இரண்டு கன்னங்களையும் வருடி னார் செல்வந்தி அடிகள்.

''அடிகளே. தங்களுடைய வாழ்த்து தெய்வத்தின் வாழ்த்து. தங்களுடைய சொற்கள் கடவுளின் பேச்சு! என் தந்தையார் தங்களிடம் கட்டளைபெற்று மேற்கொண்டு செய்ய வேண்டிய பணி களையெல்லாம் தங்களுடைய ஆணைப்படி நிறைவேற்றும்படி எனக்குப் பணித் திருக்கிறார். தங்கள் திருவுளக் கருத்தின் படியே எல்லாம் நடக்கும். என் செயல் இதில் ஏதொன்றும் இல்லை!'' என்றான் இளவரசன் செங்குட்டுவன்.

''அரசகுமாரா! சேரலாத மன்ன னின் இதயத்தில் இது வரை வேதனை தந்து வந்த துன்பங்கள் எல்லாம்ஒன்றன் பின் ஒன்றாக விலகக் கூடிய காலம் வந்து விட்டது. நீயும் உனது படை யினரும் இத்தனை ஆயமாக இவ்வாறு இங்கே வந்தது குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் உங் களையெல்லாம் இந்தத் தீவிலே அழைத்து உங்களுக்கு அரச வரவேற்பு நல்கக்கூடிய தருணம் இது இல்லையே என்பதையும் நான் நன்கு அறிவேன்! பகைவர்கள் கடல் மீது வட்டம் சுற்றிக் கொண்டே இருக்கிறார்கள். வானமண் டலக் கடம்பனுடைய ஒற்றர்கள் வெள் ளைத் தீவின் கோட்டை மதில்களுக்கு மேல் இரவும் பகலும் கண் இமை மூடாமல் காவல் புரிந்து வருகிறார்கள். எனவே, நீங்கள் உங்களுடைய கோட் டையை நெருங்கிய பிறகுதான் போர் தொடங்கப் போகிறது என்று எண்ணி மெத்தனமாகச் செல்லக் கூடாது. கடல் மீது எந்த வினாடியும் கடுமையான போர் தொடங்குவதற்கு ஆயத்தமாகவே — நீங்கள் அணி அணியாக உங்கள் மரக்

இந்த ப்ரிஸில் முனைகளை
பூதக் கண்ணாடியின் கீழ்
ஒப்பிட்டுப் பாருங்கள்



# பினாகா

## டூத் பிரஷ்

'வட்டவடிவுள்ள நுனிகளை' உடையதால்
REG. PAT. NO.
ஈறுகளைக் கிழிக்காது

சுத்தமாக பல் துலக்குங்கள்
அபாயமின்றி பல் துலக்குங்கள்
பினாகா கொண்டு பல் துலக்குங்கள்

கணைகளைச் செலுத்திக் கொண்டு முன்னேற வேண்டும். கோட்டையின் மதில் மீதிருந்து அம்புகளும் ஈட்டிகளும் வேலாயுதங்களும் பாய்ந்து வரும். அவற்றை யெல்லாம் முன்னதாகவே மனக் கண்ணால் பார்த்து ஆயப்படுத்திக் கொண்டு, உங்களுடைய வீரம் மிகுந்த கடற்படை வெள்ளைத் தீவைத் தாக்கிப் பிடிக்க வேண்டும். அறப் போர் மீது செல்லும் படைகளுக்கு வாழ்த்துக் கூறி வழியனுப்ப வேண்டிய கடமையொன்றைத் தமிழ் நாட்டுப் புலவர்களுக்கும் துறவிகளுக்கும் வழங்கியிருக்கிறது நம்முடைய வரலாறு! அதன்படி உங்களுக்கு என் முழு மனத்தோடு கூடிய வெற்றி வாழ்த்தை இதோ ஆன்ம ஒருமைப் பாட்டுடன் தருகிறேன். அந்த வாழ்த்தோடு கூடவே இதோ வேலவன் கோதையையும் உங்களோடு இணைக்கிறேன். உங்களுடைய குலதெய்வமான கொற்றவை வானத்து முகில்களிலே ஏறி நின்று உங்கள்மீது வெற்றி மலர்களைச் சொரிவாள். வீரத்தோடு போர் புரிந்து வெற்றியோடு தமிழ் மன்னர்களின் மெய்யான புகழை இந்தப் புண்ணியத் தமிழ் நிலத்திலே நிலைநாட்டிச் சேரலாத மன்னனின் முதிர்ந்த இதயத்திலே அமுதத்தைப் பொழிவீர்களாக!''

இரண்டு கைகளையும் உயர்த்தி வாழ்த்தினார் செவ்வந்தி அடிகள். பிறகு வேலவன் கோதையைப் பார்த்துச் சொல்லுவார் :

''வேலவா! வெள்ளைத் தீவின் ஒளிவு மறைவுகள் அனைத்தும் நீ நன்கு அறிவாய். உங்களோடு எதிர்த்துப் போர் செய்யப் போகிற பகைவர்கள் போரின் அறமுறைகளை யெல்லாம் அறிந்த வீர அரசர்கள் அல்லர்! கொள்ளைக் கூட்டத்தார்கள் அவர்கள் என்பது உங்களுடைய நினைவில் இருக்கட்டும். ஏதோ பெரிய பகை அரசர்களைத் தாக்கச் செல்கிறோம் என்பது போன்ற எண்ணமே வேண்டாம். ஒரு வகையில் பார்த்தால் இத்தகைய திருடர்களை வெல்வது எளிது என்றுகூடச் சொல்வேன். தண்ணீரில் கிடக்கும் வரைதான் முதலைக்கு வலிமையுண்டு. எந்த விநாடி அது தண்ணீரில் இருந்து வெளியே வருகிறதோ அந்த விநாடியே அது வலிமையை இழந்து விடுகிறது. உங்கள் பகைவர்களும் அப்படித்தான்! திருட்டு வஞ்சகம் நிரம்பிய கோட்டைக்குள்ளே இருக்கும் வரைதான் அவர்களுக்கு வலிமை! கோட்டைக்கு வெளியே வந்து விட்டால் இயந்திரப் பொறிகளின் பலம் கிடையாது அவர்களுக்கு! கள்ளத்தனமான பொறி வேலைகளை எல்லாம் கடல் மீது செய்ய முடியாதல்லவா! அத்தனைக்கு அத்தனை அவர்களுடைய வலிமையும் குறைவு! நேருக்கு நேராக அவர்கள் எதிர்த்துப் போராட வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டால் வஞ்சகமாக மறைந்திருந்து சூழ்ச்சிப் படைகளை ஏவ முடியாது! ஆகையால் உங்கள் படையும் கடம்பர்களின் படையும் எடுத்த எடுப்பிலேயே நேருக்கு நேர் நின்று போரிடக்கூடிய வாய்ப்பு உங்களுக்கு ஏற்பட வேண்டும் என்பதே நான் உங்களுக்குத் தருகிற வாழ்த்து! உங்கள் படைக்கு முன்னே நிற்கக்கூடிய ஆற்றலுள்ள கடற்படை இந்தக் கடல் சூழ்ந்த தமிழகத்திலே வேறு எங்கும் கிடையாது என்பதை நான் அறிவேன். கடம்பனுடைய கடற்படை என்பது வணிக மரக்கலங்களைத் தாக்குவதிலே திறமை காட்டலாம். ஆனால் விற்கொடி தாங்கிய சேர நாட்டு வீர மரக்கலங்களை எதிர்ப்பது என்பது அப்படியா! இல்லவே இல்லை!''

இவ்வாறு சொல்லிச் சிரித்தார் செவ்வந்தி அடிகள். சிரித்துக் கொண்டே வானத்தை நோக்கினார். முகில்களின் போக்கையும் காற்றின் திசையையும் நிதானித்தார். மனத்துக்குள்ளேயே ஏதோ கணக்குப் போட்டார். உடனே சொன்னார் :

''செங்குட்டுவக் களிறே! வெற்றியோடு மீண்டு தந்தையின் உள்ளத்தைக் குளிர்விப்பாயாக!''



''இன்று உங்களுக்கும், நடிகை பளபளா தேவிக்கும் திருமண ஷூட்டிங் இருக்கு! சீக்கிரம் ஜம்மென்று மாப்பிள்ளையாட்டம் மேக்கப் போட்டுக்கிட்டு வாங்க!''

''பேசின ரேட்டுக்கும் மேலே ரூ 10,000 வரதட்சிணை கொடுத்தால் தான் அவள் கழுத்திலே நான் தாலியைக் கட்டுவேன்!''

இப்படிச் சொல்லி இளவரசனை வாழ்த்தி விட்டு, அரச மரக்கலங்களுக்கு நல்விடை தந்தார் செல்வந்தி அடிகள். விற்கொடி தாங்கிய பெரிய அரச மரக்கலம் புறப்பட்டது. அதைத் தொடர்ந்து துணைக் கலங்கள் புறப்பட்டன. அவற்றின் அசைவை நோக்கி நகர்ந்தன தொலைவிலே நின்ற மற்ற மரக்கலங்கள்!

ஃ ஃ ஃ



இருநூறு இருநூறாக, அணி அணியாகச் சென்ற மரக்கலங்களுக்கு முன்னால், நூறு, ஐம்பது, இருபத்தைந்து, பன்னிரண்டு, ஆறு, மூன்று, ஒன்று என்ற கணக்கிலே கூர்மைப் படுத்திச் சென்று கொண்டிருந்த முன்னோடி மரக்கலம், இடையே நின்றது. வல்லி மரம் என்ற தலைப் பாய்மரத்திலே கட்டப்பட்டிருந்த கொடி ஒரு முறை ஏறி இறங்கியது. இதன் குறிப்பை உணர்ந்ததும் மறு விநாடி எல்லா மரக்கலங்களின் விற்கொடிகளும் ஒரு முறை ஏறி இறங்கி மறுபடியும் ஏறின! அப்படியே மளமள என்று எக்காளங்கள் ஒலித்தன. இது வரை எண்ணிக்கைகளின் வரிசை ஒழுங்கிலே அணிவகுத்துச் சென்ற மரக்கலங்கள், இப்போது ஒரு வட்ட வடிவமான வளையிலே அணிவகுத்தன. கடல் அலைகள் ஓங்கிப் புரளும் கருநீலக் கடலினுடைய மேனியின் மீது அந்த மரக்கலங்கள் அவ்வாறு அணிவகுத்துச் சுழன்று நின்ற காட்சி ஒரு மாய எழிற் காட்சியாக இருந்தது.

இதோ, செங்குட்டுவனுடைய அரச மரக்கலம் அந்த வட்ட வடிவமான ஆழி அணியை இரண்டு கூறுகப் பிளந்து கொண்டு, 'சரேல்' என்று வில்லிலிருந்து புறப்பட்ட அம்பைப் போலக் கடலைக் கீறிக் கொண்டு பாய்ந்து, மரக்கல அணியின் முன்முகப்புக்கு வந்தது. வல்லி மரத்தின் இணைக்கட்டிலே தொங்கிய நூல் ஏணியிலே இப்போது வீர வேகத்தோடு ஏறி மேலே சென்று மரக்கட்டின் மண்டல 'வட்டத்திலே வந்து நின்றார்கள் இளவரசன் செங்குட்டுவனும், தானைத் தலைவன் வேலவன் கோதையும்.

எக்காளம் ஒலித்தது. போர் முரசம் கடல் அலைகளையும் உட்கொண்டு கிளம்பி ஒலித்தது. மரக்கலங்கள் எல்லாம் நூறு நூறு நூறு என்று பல நூறு அணிகளாக வட்டம் சுற்றி நின்று, அடுத்த விநாடி கடல் மீது முன்னேறிப் பாய்ந்தன!

ஆம்; செல்வந்தி அடிகள் கொடுத்த வாழ்த்து அப்படி இயங்கியது போலும். என்ன வியப்பு! எந்தப் பகைவர்களைக் கோட்டை மீது தாக்க வேண்டும் என்று எண்ணிப் படர்ந்தார்களோ அதே பகைவர்கள் இதோ கடல்மீதிலேயே எதிர்ப்பட்டு விட்டார்கள்!

எதிர்பாராத நிகழ்ச்சிதான் அது! கோட்டை மீது நின்றவாறே சேரப் படையைப் பார்த்து விட்டுத் தாக்குகிறார்களா? அல்லது வழக்கம் போல் கொள்ளை வேட்டைக்குச் செல்கிற படை இப்போது இப்படி வந்து மாட்டிக் கொண்டதா?

எப்படி ஆனால் என்ன? தாக்குங்கள்' என்பதற்கு அறிகுறியாக இதோ போர் முழக்கம் எழுகிறது! மரக்கலங்களின் வல்லி மண்டிலத்திலே ஆயிரம் கொம்புகள் ஒலிக்கின்றன!

வேல்கள் பாய்ந்தன! ஈட்டிகள் அடர்ந்தன! வில்லில் இருந்து ஆயிரம் ஆயிரம் அம்புகள் புறப்பட்டன! தீப் பந்தங்களோடு நெருப்பைக் கக்கிக் கொண்டு எதிரிகளின் பாய்மரங்களிலே போய் விழுந்தன நூறு நூறு கொடுங்கொள்ளிவாளிகள்!

'ஐயோ' என்று அலறல். 'விடாதே' என்று கூக்குரல். 'ஓடாதே!' என்று ஓசை. துன்பக் கூக்குரல். வீர முழக்கம். படார் படார் என்ற ஒலி! கருநீலக் கடல் கருமை குன்றிச் செம்மை ஏறிச் செங்குருதித் திரைகளை அலை வீசிக் கொந்தளித்தது!

என்ன! தீர்ந்ததா போர்? இல்லை. இதோ மேலும் முன்னேறுகிறது நீலை நோக்கிச் சேரர் படை! அதோ மேலும் எதிர்த்து வருகின்றன கடம்பர்களின் மரக்கலங்கள்! மேலும் அம்புகள், ஈட்டிகள் வேலாயுதங்கள், சூலங்கள், இரிலேறிகள், ஊசிக் குந்தங்கள், சக்கரக் கொம்புகள், துடிகள், தீ வாளிகள்! கொள்ளிவேற் குந்தங்கள், வீசுச் சுழலிகள்! பொறிக் கணைகள்! மளமள என்று பாய்ந்து குமுறின!

"இளவரசே! நம்முடைய மரக்கலங்களைப் போலப் போர் முறைகளிலே பயின்றறியாத வெறும் கொள்ளைக் கூட்டத்தார்கள்தானே இவர்கள்! இவர்களுடைய போர் முறை இதுதான் போலும்!" என்றான் வேலவன்.

"இல்லை! ஏதோ குழப்பம் தெரிகிறது! அதோ பாரும் வீரரே! ஒரு பெரிய மரக்கலம் வருகிறது!"

வேலவன் பார்வையைக் கூர்மையாகச் செலுத்தித் தென் திசையிலே பார்த்தான்! வானமண்டலக் கடம்பனுகத்தான் இருக்க வேண்டும் அது! வீரப் பெருமிதத்தோடு, அடங்காத

சீற்றம் பொங்கச் சீறி வருகிறது ஒரு பெரிய மரக்கலம்!

விசைப் புட்டிலே எடுத்து வில்லிலே சுழல்வாளி ஒன்றைப் பூட்டி நாண் ஏற்றிச் சுண்டினன் வேலவன் கோதை. 'கிர்' என்று சுழன்று சென்று ஒரே நேராகச் சென்று தாக்கிக் குடைந்து ஊடுருவிச்சென்றது அது! என்ன வியப்பு! வானமண்டலக் கடம்பனே ஒழிந்தானு?

மலை யானைகள் பயம்பிலே விழுவதைப் பார்த்திருக்கிறன் வேலவன் கோதை. அப்படி ஒரு 'பிளிறல்' கேட்டது! அவ்வளவுதான். அந்த மரக்கலத்துக்குப் பின்னல் வந்த மரக்கலங்கள் சிதறுண்டு நிலைகலங்கிச் சிதறிச் சுழன்றன. நூறு நூறு குடைவாளிகளை ஏவி அந்த அரச மரக்கலத்தின் மேனிக் கண்ணைத் துளைத்தார்கள் சேர வீரர்கள்! பகைவனின் அரச மரக்கலம் அப்படியே வேலவன்கோதையின் கண் முன்னே கடலுக்குள் ஆழ்ந்தது! சுழல் அம்பிலே மாண்ட கடம்பனோடு சேர்ந்து மரக்கலமே அலைகளுக்குள்ளே முங்கி ஒழிகிறது !

ஃ ஃ ஃ



"நானைத் தலைவரே! இது என்ன உங்களுடைய புகழ்பெற்ற வெள்ளைத் நிலைக் கோட்டை மதில் இப்படி உறங்குகிறது!" என்று வியப்போடு கேட்டான் இளவரசன் செங்குட்டுவன்.

"ஆம். எனக்கே வியப்பாகத்தான் இருக்கிறது. ஒரு வேளை — "

"என்ன உங்கள் சந்தேகம்?"

"கடம்பன் ஒழிந்ததில் இந்தக் கோட்டைக்குள்ளே இருப்பவர்களுக்கும் உள்ளத்துக்குள்ளே நிம்மதிதான் போலும். எதற்கும் நாம் மிகுந்த முன் காப்போடுதான் மேலே அடி எடுத்து வைக்க வேண்டும்!"

முன்னொரு நாள் எந்தக் கோட்டையின் வெளியே எந்தத் திட்டிவாசலுக்கு முன்னல் மயங்கி விழுந்து பிறகு மயக்கம் தெளிந்து பார்த்தானே, அதே வாசல்! அது இப்போது ஒரே வெறுமையாகக் கிடந்தது!

சேரப் படை 'மடமட' 'தட தட' என்று வில்லும் வேலும் ஈட்டியும் தாங்கி உள்ளே படர்ந்தது. வேலவனும் செங்குட்டுவனும் கோட்டை வாசலில் நுழைகிறார்கள்!

சேரரின் படை அங்கும் இங்கும் சுற்றுகிறது. அறை அறையாக,மாடம் மாடமாக இருக்கை இருக்கையாகப் புகுந்து பார்க்கிறது.

வேலவனும் இளவரசனும் இதோ அரச மனைக்குள்ளே நுழைகிறார்கள். நூறு நூறு வீரர்கள் முன்னும் பின்னும் செல்கிறார்கள் பாதுகாவலாக.

அரச மனை, திருமன்றம், வான மண்டலக் கடம்பனின் ஆலோசனைக் கூடம் - எல்லாம் எங்கும் எதிர்ப்போ, பகைப்போ ஏதும் இல்லை. உரியவர்களை உரிய இடத்துக்கு வரவேற்பது போல் வெள்ளைத் தீவு வீரர்கள் வெள்ளைக் கொடி பிடித்து நின்றார்கள்.

இதெல்லாம் என்ன? இவர்கள் கடம்பனின் வீழ்ச்சியைத் தெரிந்து அதை விரும்பிச் சேரரின் வரவுக்காகக் காத்திருக்கிறார்களா? வானமண்டலக் கடம்பன் அழிந்தான் என்று இவர்கள் மன அமைதிகொள்கிறார்களா? அல்லது இதிலும் ஏதோசூழ்ச்சி இருக்கிறதோ ?

கடம்பனுடைய உடம்பிலே வேலவன் பாய்ச்சிய அம்பு பாய்ந்து அவன் வீழ்ந்ததற்கும், அந்த மரக்கலம் அப்படியே கடலுள் ஆழ்ந்து ஒழிந்ததற்கும் சரியாக இருந்ததே. ஒரு வேளை கடம்பனுடைய மரக்கலத்தில் வந்தவர்களுமே உட்பகையோடு கடம்பனின் அழிவுக்கு வழி செய்துவிட்டார்களோ? இல்லையென்றால் கோட்டைக்குள்ளிருந்து போரிட்டிருக்கவேண்டிய கடம்பர் படை எதற்காகக் கடல் மீது வந்து தங்களை எதிர்த்தது?

வேலவன் கோதை ஏதேதோ எண்ணிக் குழம்பியவாறு ஒரே மௌனமாக மேலே நடந்தான்.

'நிலா முற்றத்து மாடத்துக்குச் சென்று நீலவல்லியைச் சந்தித்தால் எல்லாம் புரிகிறது. நாம் ஏன் குழம்பிக் கொள்ள வேண்டும்.'

இவ்வாறு எண்ணி மேலே நடந்து வலது புறம் திரும்பி இதோ இளவரசியின் கன்னி மாடத்துக்கு வருகிறார்கள், செங்குட்டுவனும் வேலவன் கோதையும். வேலவனுடைய உள்ளத்தில் இருந்த ஆவலுக்கு அளவு ஏது? கரை காணுக் கடல் அல்லவா அது!

ஆனல் என்ன வியப்பு. கன்னி மாடத்திலே ஒரே வெறுமை. மனித நடமாட்டமே இல்லை. கதவுகள் திறந்து கிடக்கின்றன. உள்ளே நுழைந்தால் அங்கே நீலவல்லியையும் காணேம், மணிமாலையையும் காணேம்.

"இளவரசி எங்கே இருக்கிறர்?" என்று உரத்த குரலில் கேட்டான் வேலவன் கோதை. அந்தக் கன்னி மாடத்தின் சுவர்கள் எல்லாம் அந்தக் கேள்வியை எதிரொலித்தன. ஆனல் இளவரசியை அங்கே காணேம் நீலவல்லி அங்கே இல்லை! (தொடரும்)

# டி. வி. எஸ். பஸ் பாடிகளின் புதிய கவர்ச்சியான முன்னேற்றம்

டி.வி.எஸ். தேவைக்கு உகந்த பஸ் பாடிகளை எந்தவித சேஸிஸ் மீதும்—அசோக் லேலண்டு கோமெட், பெட்போர்டு, டாட்ஜ், பார்கோ டாடா மெர்சிடீஸ் பென்ஸ், வில்லிஸ் ஜீப், ஸ்டாண்டர்டு 20—தயாரிக்கிறார்கள். அவை மிகவும் உறுதியானவை—ஆனால் லேசானவை; எடை குறைவுள்ளவை. அதனால் எண்ணெய் செலவும், டயர் தேய்வும் குறைவு; சிக்கனமானது; கரடு முரடான சாலைகளைச் சமாளிக்கும். பிரயாணிகளுக்கு மிக்க வசதி

ஒவ்வொரு நாளும் சராசரி மூன்று பஸ் பாடிகள் கட்டுகிறோம். தேவைக்கு உகந்த கம்போசிட் முழு ஸ்டீல் பாடி, சிறிய பஸ், உல்லாஸ பஸ், எக்ஸ்பிரஸ் வான், டெலிவரி வான், பிக்-அப் வான் அம்புலன்ஸ், மூடிய அல்லது திறந்த லாரி, ஸ்டீல் டிரைவர் காபின், டிப்பர் பாடி முதலியன தயாரிக்கிறோம்.




மற்ற விபரங்களுக்கு:

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்**
**பிரைவேட் லிமிடெட், மதுரை**
(டி.வி.எஸ். ஸ்தாபனம்)



ஏப்ரல் முதல் தேதியை 'ஏப்ரல் ஃபூல் நாள்' என்கிறோம். இந்நாட்களில் நடந்த பல கலையான சம்பவங்கள்:

1946ம் ஆண்டு இத்தாலியப் பத்திரிகை ஒன்றில் நகராட்சி மிருக ஆஸ்பத்திரி ஒன்றின் விளம்பரம் வெளியாயிற்று. அவ்விளம்பரத்தில் நகரில் நாய்களுக்கு 'டைபஸ்' ஜுரம் பரவ ஆரம்பித்துள்ளதாகவும் அதனால் நகரின் நாய்ச் சொந்தக்காரர்கள் அனைவரும் தங்களுடைய நாய்களுக்கு ஊசி போட நாயுடன் ஏப்ரல் முதல் தேதி ஆஜராக வேண்டும் என்றும் குறிப்பிட்டிருந்தது. குறிப்பிட்ட தேதியில் குறிப்பிட்ட இடத்தில் இருநூறுக்கும் மேற்பட்டவர்கள் நாய்களுடன் காத்திருந்து விட்டு, பிறகு தாங்கள் 'முட்டாள்கள்' ஆனதை நினைத்துக் கொண்டு வீடு திரும்பினர்.

கி 1947ம் ஆண்டு நியூயார்க் பத்திரிகை ஒன்றில் இப்படி ஒரு விளம்பரம் வெளியாயிற்று:

''தேசப் பற்று மிக்க பூனைச் சொந்தக்காரர்களே!

ஜெர்மானியச் சிறையில் வாடி வரும் நமது நாட்டு வீரர்கள் சிறையில் உள்ள எலிகளால் மிகவும் தொந்தரவுக்குள்ளாகின்றனர். அந்த எலிகளை ஒழித்து நமது ஜவான்களுக்கு நிம்மதியைத் தர இங்கிருந்து ஜெர்மனிக்குப் பூனைகளை ஏற்றுமதி செய்ய முடிவு செய்துள்ளது அரசாங்கம். பூனைகளுக்குக் கீழ்க்கண்டபடி விலை கொடுக்கப்படும்: ஆண்



ஆதாரம்: ''ராம்போ''

## ஏப்ரல் முட்டாள்கள்

பூனை: 2 டாலர்; பெண் பூனை: 1 டாலர்; குட்டிப் பூனை: 50 செண்ட். பூனைகளுடன் ஏப்ரல் முதல் தேதி தலைமைத் தபாலாபீஸில் ஆஜராகவும்.'' இந்த விளம்பரத்தைப் பார்த்த நான்காயிரம் அமெரிக்கத் தேசாபிமானிகள் பூனைகளுடன் காலை 9 மணிக்கே தலைமைத் தபாலாபீசுக்குச் சென்று காத்திருந்தனர். பாவம், தபால் அதிகாரியின் பாடு திண்டாட்டமாகி விட்டது. நிலைமையைச் சமாளிக்கப் போலீஸைக் கூப்பிட்டார். முடிவு: சொந்தக்காரர்கள் பூனையை (ஒன்றல்ல, இரண்டல்ல; நாலாயிரம்) தபாலாபீஸ் உள்ளேயே விட்டு விட்டுப் போய் விட்டனர். பூனைகளைச் சமாளிப்பது, மனிதர்களைச் சமாளிப்பதை விடக் கஷ்டமாகி விட்டது!

நியூயார்க் நகரைச் சேர்ந்த 'பிராங்க்ஸ்' மிருகக் காட்சி சாலைக்கு ஏப்ரல் முதல் தேதியன்று வரும்படி பல விநோதமான டெலிபோன் கால்கள் வரும். பலபேர் திருவாளர் சிங்கத்தோடும், திருவாளர் கரடியோடும் அல்லது திருமதி மயிலோடும் பேச வேண்டும் என்று கேட்பார்கள். இதைத் தவிர்க்க மிருகக் காட்சிச் சாலையில் ஏப்ரல் முதல் தேதிக்கு மட்டும் ஒரு பிரத்தியேக ஆப்பரேட்டர் நியமித்துள்ளனர். இவர் வரும் எல்லா 'கால்'களையும் கேட்டு, அதில் உண்மையாகவே மனிதர்களுக்கு வரும் 'கால்'களை மட்டும் எடுத்துக் கொள்கிறார்.

''பாபா ப்ளாக் ஷீப்'' என்ற பாட்டை அறியாத பள்ளிச்சிறுவர்கள் அநேகமாக இருக்க முடியாது: ஆனால் குழந்தைகளுக்கான இந்தப் பாட்டு ஆரம்பத்தில் குழந்தைகளுக்காக எழுதப்பட்டதே அல்ல. 'பா பா ப்ளாக் ஷீப்' என்று தொடங்கும் பாட்டு 1275ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. இங்கிலாந்து நாட்டில் கம்பளத் தொழில் மீது வரி விதித்தார்கள். வியாபாரிகளுக்கு மிகவும் கஷ்டமாகி விட்டது. அரசாங்கத்தின் இந்தக் கொள்கையைக் கிண்டல் செய்வதற்காக யாரோ எழுதிய கவிதை இது.

தகவல்: ''பானி''
ஆதாரம்: டிரெண்ட்



## பாலுக்கும் காவல்



பெண்களுக்கு ஓர் அறிவுரை: முடிந்த வரையில் சீக்கிரம் திருமணம் செய்துகொள்ளுங்கள்!

ஆண்களுக்கும் அறிவுரை: முடிந்தவரையில் திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வாருங்கள்!

பெர்னார்ட் ஷா
அனுப்பியவர்: ''துளசி''



பெரும் தீ விபத்திலிருந்து ஒருவரைக் காப்பாற்றியதாக ஒரு வாலிபனைச் சூழ்ந்து கொண்டது ஒரு கூட்டம். அதில் ஒருவர் கேட்டார்: "உங்கள் உயிரையும் மதிக்காமல் அவரைக் காப்பாற்றுவதற்கு உங்களுக்கு எப்படி அத்தனை தைரியம் வந்தது?"

வாலிபன் பதில் சொன்னான்: "இல்லாவிட்டால் அவருக்குக் கடனாகக் கொடுத்திருக்கும் நூறு ரூபாயை எப்படித் திரும்பிப் பெறுவது?" — எம். காந்தா

□ □ □ □ □ □ □ □ □

ஒரு தீக்குச்சியில் மூவர் சிகரெட் கொளுத்தக்கூடாது என்ற பழக்கம் இன்னும் உலகில் பலரிடையே இருந்து வருகிறது. மூன்றுவதாகச் சிகரெட் பற்றவைத்துக் கொள்பவரின் உயிருக்கு ஆபத்து விளையும் என்ற மூட நம்பிக்கைதான் அதற்குக் காரணம்!

முதல் உலகப் போர் நடந்து கொண்டிருந்த சமயம் அது! இரவில் போர் முனையில் இருக்கும் வீரர்களில் ஒருவன், தீக்குச்சியைக் கொளுத்திச் சிகரெட் பற்றவைத்துக்கொள்ளும்போது, அருகில் மறைந்துள்ள எதிரி, இவர்கள் இருக்கும் திசையைக் கண்டு கொள்கிறான். அதே தீக்குச்சியில் இரண்டாமவன் சிகரெட் பற்றவைத்துக் கொள்ளும் போது, எதிரி தன்னுடைய துப்பாக்கியைச் சரிசெய்து கொண்டு குறி பார்க்க அதனைத் தோளுக்கு உயர்த்துகிறான். நெருப்புக் குச்சி அணையாமல் மூன்றுமவன் அதில் தன் சிகரெட்டைப் பற்றவைக்கும்போது அவன் சுடப்படுகிறான். எதிரி இரவில் குறி பார்ப்பது தீக்குச்சியின் ஒளியைத்தானே? இதன் காரணமாகத்தான் அப்போது போர் முனையில் ஒரே தீக்குச்சியில் மூவர் சிகரெட் பற்ற வைத்துக் கொள்வதில்லை. இரண்டாமவன் பற்ற வைத்த பின் அக்குச்சியை அணைத்து விடுவான். சற்று நேரம் பொறுத்து மூன்றுமவன் பற்ற வைத்துக் கொள்வதுதான் வழக்கம்.

முதல் உலகப் போர் முடிந்த பின்பும், அதே வழக்கம் விடாப்பிடியாய் இன்று வரை தொடர்ந்து வந்திருக்கிறது.

—'என். ஆர். லக்ஷ்மி'



ஒன்றில் மூன்று!



"என்ன ஸார், ஏ. கே. சி. ஜோரினெட் கேட்டீர்களா?"

"கேட்டேன். அவர் தரமாட்டேன் என்கிறார்." —ஜெ. பாலசுந்தரம்

□ □ □ □ □ □ □ □ □

## எல்லாம் நன்மைக்கே

ஓர் அமெரிக்க நீதிபதி அறுபது ஆண்டுகள் ஒண்டிக் கட்டையாக வாழ்ந்து விட்டு, தம் அறுபதாவது வயதில் திருமணம் புரிந்து கொண்டார்.

"இவ்வளவு நாட்கள் கடத்தி விட்டு இப்போது போய்த் திருமணம் செய்துகொண்டீர்களே ஏன்?" என்று அவருடைய நண்பர் ஒருவர் கேட்டார்.

"நன்கு யோசித்தே இந்த முடிவுக்கு வந்தேன். என் மனைவி எனக்குப் பிடித்தவளாக இருந்து விட்டாள் இம்மாதிரி மனைவி கிடைக்க இத்தனை ஆண்டுகள் காத்திருந்தது வீண் போகவில்லை என மகிழ்ச்சி கொள்ளலாம். ஒருவேளை எனக்குப் பிடிக்காதவளாக அமைந்து விட்டாள் இன்னும் கொஞ்ச காலம்தானே இவளோடு வாழப் போகிறேம் என்று எண்ணிச் சமாதானப்பட்டுக் கொள்ளலாம். இரண்டு விதங்களிலும் சௌகரியமாகப் போயிற்றல்லவா?" என்றார் அந்த நீதிபதி.

— இ.கு.ரா.

□ □ □ □ □ □ □ □ □

கணவன் கேட்டான்: "இந்தக் கேக்கை எப்படி நீ தயாரித்தாய்?"

"இதோ, இதைப் பார்த்துத்தான்" என்று கத்தரித்த துண்டுக் காகிதம் ஒன்றைக் கணவனிடம் கொடுத்தாள் மனைவி.

அதை இரண்டு பக்கமும் திருப்பிப் பார்த்த கணவன், "எந்தப் பக்கம் பார்த்துத் தயாரித்தாய்? இந்தப் பக்கம் செங்கல் எப்படித் தயாரிப்பது என்று கூறியிருக்கிறதே!" என்றான்— ஏ.கே. கந்தசாமி




LIFEBUOY
for health

# உயிருக்கு உயிர்!

அன்னம்



கேசவனுக்கு உயிர் இரண்டு.

முதலாவது அவன் தங்கை ரத்னம்; இரண்டாவது அவனுடைய உடற்கூட்டில் துடித்துக் கொண்டிருக்கும் மூச்சுக் காற்று.

முதலாவதற்காக இரண்டாவதை அவன் எப்பொழுதும் துறக்கத் தயார் அப்படிப் பட்ட ஒரு பாசமும் அன்பும் அவன் அந்தத் தங்கையின் மேல் வைத்திருந்தான்.

அவன் ஆறு மாதக் குழந்தையாக இருக்கும்போது அவன் தாயார் மறைந்துபோனாள். குடித்துவிட்டுத் திரும்பிய தகப்பன் தன்னை மறந்து மனைவியைப் போட்டு மொத்த, அவள் பொட்டில் அடிபட்டு மாண்டு போனாள்.

தவழக்கூடத் தெரியாத அந்தப் பருவத்தில் அந்தக் குழந்தை நீந்தி வந்து கேசவனின் கால்களைக் கட்டிக் கொண்டது. அப்போது அதனிடம் தன்னையே பறி கொடுத்து விட்டான் கேசவன்.

அன்று முதல் இன்றுவரை ரத்னம் என்ற ஜீவன்தான் அவன் வாழ்க்கையில் ஒரு பற்றுக்கோல். இவ்வளவாவது அவன் நல்லவனாக இருப்பதற்கு அவள்தான் காரணம்.

சமூகத்தின் கண்களுக்குக் கேசவன் கண்ணியமானவன் அல்ல. தங்கையினிடம் அவனுக்குச் சுரந்த அன்பு மட்டுமே அவனுக்குத் தாம் அளித்த சொத்து. மற்றவை அத்தனையும் தகப்பனைப் போலவே.

அவனைப் போல் முரட்டுத்தனமாக வளர்ந்த தலைமுடி, அடர்த்தியான மீசை பயந்தவர்களைக் கதிகலங்கச் செய்தன. விம்மிப் புடைக்கும் கையில் எப்போது அறுந்து விழுந்து விடுமோ என்று நினைக்கும் அளவுக்கு இறுக்கிக் கட்டப்பட்டுள்ள தாயத்து. தூக்கிக் கட்டிய கைலி. எப்போதும் புகைந்து கொண்டிருக்கும் சுருட்டு. அதன் நுனியில் எரிந்த நெருப்புத் துண்டம் போல் ஜ்வலித்தன அவன் கண்கள்.

கேசவன் குரலைக் கண்டு அஞ்சி வாய் மூடியவர்கள் எத்தனையோ பேர். ஆனால் அவனைப் பார்த்துத் துளியும் பயப்படாமல் எதிர் நிற்பவள் ரத்னம் ஒருத்திதான். மற்றவர்கள் அவன் புறத் தோற்றத்தைக் கொண்டுதான் அவனை மதித்தார்கள். அவன் செய்திருந்த காரியங்களின் அடிப்படையில் அவனை எடை போட்டார்கள். அவள் ஒருத்தி மட்டுமே அந்த முரட்டு மனத்தின் அடியிலிருந்த அன்பைப் புரிந்து கொண்டிருந்தாள்.

சின்னஞ் சிறு மொட்டாக அவன் கையில் ஒப்படைக்கப்பட்ட அவள் மலர்வதைப் பார்த்தான் கேசவன். ரத்னம் வளர்ந்தாள். பெண்மைக்குரிய சிறப்பெல்லாம் அவள் மேனியில் தவழத் தொடங்கின. ஆண்ட

வன் வனப்பைக் கொடுக்க ஏழை என்றோ, பணக்காரன் என்றோ தாரதம்மியம் பார்ப்பது கிடையாது. உலகத்தில் தலைசிறந்த "கம்யூனிஸ்ட்" அவன்தானே? ரத்னம் வளர வளரக் கேசவன் மனத்தில் ஓர் ஏக்கம் விழுந்தது.

''இந்தப் பெண்ணை ஒரு நாள் கணவன் வீட்டுக்கு அனுப்ப வேண்டுமே?''

''என்னைத் தனியாக விட்டுவிட்டு ஒரு நாள் இவள் போய் விடுவாளே!''

சில இரவுகள் அவன் வீட்டில் படுத்திருக்கும்போது அந்த நினைவுகளால் அவன் அலைக்கழிக்கப்பட்டு உறங்குவதில்லை. சில இரவுகள்தான்! மற்ற இரவுகள்தான் அவன் வீட்டில் தங்குவதில்லையே!

அவனுக்கு அத்தனை வேலை. போக வேண்டிய இடங்கள் எத்தனையோ? அவனுக்குத் தன் கல்யாணத்தைப் பற்றி எண்ணவே நேரமில்லை. சாராயம் காய்ச்சும் தோப்பின் பக்கம் போகும் பழக்கம் உண்டு.

பெயருக்கு அவனுக்கும் ஒரு வேலை இருக்கத்தான் செய்தது. செட்டியார் மளிகைக் கடையில் தனக்கு வேலை என்று அவன் சொல்லிக் கொண்டான். என்ன வேலை என்று செட்டியாரைக் கேட்டால் கூட அவரால் சரியாகச் சொல்ல முடியாது. அவர்தான் அவனுக்குச் சம்பளமே கொடுப்பதில்லையே! தேவையானபோது வீட்டுக்கு வேண்டிய மளிகைச் சாமான்களை அவனாகவே எடுத்துப் போவான். ரத்னம் கடைக்கு வந்தால் அவள் கேட்டதைக் கொடுத்து அனுப்பச் செட்டியார் உத்தரவிட்டிருந்தார்.

செட்டியாருக்கு நிலுவைப் பாக்கி என்று ஒரு பைசா இருப்பதில்லை. முதலிரண்டு தேதிகளில் அவன் கணக்குப்பிள்ளையுடன் ஒரு சுற்றுப் போய் வந்தால் போதும். கேசவனின் ஒரு பார்வைக்கே பயந்துபோய்ப் பணத்தைக் கொடுத்து விடுவார்கள்.

உள்ளூர் ஜவுளிக் கடையிலும் அப்படியே! சம்பளம் ஏதும் கிடையாது. தீபாவளி, பொங்கலுக்கு அவனுக்கும் அவன் தங்கைக்கும் துணி மணிகள் உண்டு. பாக்கி வசூலுக்குச் சொல்லி அனுப்பினால் போய் வரவேண்டும். அவ்வளவே!

தியேட்டரில் புதுப் படமா? 'க்யூ'வில் நிற்காமல் முரண்டு பிடிக்கிறார்களா? 'டேய் கேசவனைக் கூப்பிடுடா' என்பார் மானேஜர். அத்தனை ஜனங்களும் ஒழுங்காக நிற்பார்கள். அவன் வந்தால் எல்லோரையும் பந்தாடி விடுவானே!

உள்ளூர் போலீசுக்கு அவன் மேல் ஒரு மதிப்பு உண்டு. ஹிந்தி எதிர்ப்புப் போராட்டம் தீவிரமாக நடந்த சமயம். போராட்டத்தின் முன்னணியில் நின்றவன் கேசவன் தான். சரக்கும் உள்ளே நன்றாக இறங்கியிருந்தது. போலீஸ் இன்ஸ்பெக்டர் வசமாகக் கூட்டத்தில் சிக்கிக் கொண்டார். ஆக்ரோஷத்துடன் அவர் மேல் பாய்ந்தது மக்கள் வெறி. அவர் மேல் விழ இருந்த அடிகளைத் தாங்கிக் கொண்டது கேசவன் தான். தன் கைத்தடியைச் சுழற்றி ஓர் அதட்டல் போட்டான். அத்தனை பேரும் மௌனமாகத் திரும்பினார்கள்.

''என்ன அண்ணே!... கிடைச்ச ஆளைப் போய் விட்டுட்டியே!'' என்று கேட்டான் ஒரு சகா.

''போயிட்டுப் போறான் போ! அவனுக்கும் தங்கச்சி ஒண்ணு இருக்குது. பாவம், அதுவும் தாயில்லாப் பொண்ணு!'' என்றான் கேசவன் தலையில் ஒருபுறம் வழிந்த ரத்தத்தைப் பொருட்படுத்தாமலேயே.

''அண்ணு! நம்ம வீட்டுக்கு அண்ணி என்னிக்கு வரும்?'' என்று கேட்டாள் ரத்னம் ஒரு நாள்.

''அண்ணியா?... எதற்கு?''

''என்ன அண்ணே இப்படிக் கேக்கறே! எல்லோர் வீட்டிலேயும் ஒரு விசேஷம் நடக்க வேணுமா?''

''உம்... நடக்கும் நடக்கும். சீக்கிரம் நடக்கும். அதான் உன்னுடைய கல்யாணம்...'' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான் அவன்.

ரத்னத்துக்கு ஒரு வரன்: நல்லவனாக, நாணயமுள்ளவனாக இருக்க வேண்டும். அவளுக்கு எந்தக் குறையும் வரக் கூடாது. ஆனால் கேசவனுக்குத் திருப்தியளிக்கும்படி ஒரு பையனும் அமையவில்லையே!

கேசவன் தோப்பிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தான். தன் நிலையை அவன் இன்னும் இழக்கவில்லையானாலும் கூட, அந்தச் சமயம் வெகு தூரத்தில் இல்லை.

அவனுக்கு நெருக்கமான ஆள் ஒருவன் ஓடி வந்தான்.

''அண்ணே! தப்பா நெனைக்காட்டி நான் ஒண்ணு சொல்றேன்!'' என்றான் அவன்.

''என்ன சொல்லப் போறே நீ!'' என்று அவன் முதுகில் ஓங்கிக் குத்தினான் கேசவன். அன்புடன்தான். ஆனால் மற்றவனுக்குப் பொறி கலங்கிப் போயிற்று.

''அந்த ஸப் – இன்ஸ்பெக்டர்...அவன் தான் அந்தத் தாணுக்காரன்... உன் வீட்டு வாசல்லே நின்னுக்கிட்டிருக்கான்...''

''நின்னாட்டுப் போகட்டுமேடா. நான் என்ன திருடினேனா, கொலை செஞ்சேனா?'' என்று அட்டகாசமாகச் சிரித்தான் கேசவன்.

''இல்லே அண்ணே – உங்க தங்கச்சி வயசு வந்த பொண்ணு இல்லையா? அவளோட சிரிச்சுக்கிட்டு, இளிச்சுக்கிட்டு...''

அவனை முடிக்க விடவில்லை கேசவன். ''டேய்...ராஸ்கல்...என்னடா சொன்னே!'' என்று சீறியவன் அவனை அப்படியே அலக்காகத் தூக்கி விட்டான்.

''என்னை விட்டுவிடு அண்ணே! நான் பார்த்ததைத்தான் சொன்னேன். அவ்வளவுதான்'' என்று அலறினான் அவன்.

அவனைக் கீழே போட்டுவிட்டு நகர்ந்தான் கேசவன். ''சரக்கு உள்ளே போயிருப்பது தெரியாமல், சமயம் அறியாமல் விளையாடி விட்டேனே!'' என்று தன்னை நொந்து கொண்டே மற்றவன் முக்கி முனகிக் கொண்டு போனான். அவனுக்குப் பூட்டுக்குப் பூட்டு வலித்தது.

அதே சமயத்தில் ஆத்திரத்துடனும் வெறியுடனும் தன் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான் கேசவன். அவன் தெரு திரும்பும் சமயம் மற்றொரு மூலையில் ஸப்-

இன்ஸ்பெக்டர் சைக்கிளில் ஏறிப் போவது தெரிந்தது.

ரத்னம் கதவைத் திறந்தாள். அவனிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் கயிற்றுக் கட்டிலில்போய் அமர்ந்தான் கேசவன்.

''சுடு தண்ணி போட்டிருக்கேன். குளிக்கிறியா அண்ணே?'' என்று கேட்டாள் ரத்னம்.

அவளை என்ன கேட்பது, எப்படிக் கேட்பது, அவள் ஸப் - இன்ஸ்பெக்டருடன் என்ன பேசினள், ஏன் பேசினள் என்பது அவனுக்குத் தெரியாதே!

''தங்கச்சி...'' என்று அழைத்தான் கேசவன் மெதுவாக.

''என்ன அண்ணே?'' என்று மெதுவாக, ஆனல் இதமாக வந்தது பதில்.

''என்னைத் தேடிக்கிட்டு யாராவும் வந்தாங்களா?'' எனக் கேட்டான் கேசவன்.

'இல்லே என்று மறுக்கிருளா பார்ப்போம்' என்று நினைத்துத்தான் அந்தக் கேள்வியைக் கேட்டான் அவன்.

அவள் மறுக்கவில்லே. ''உன்னைத் தேடிக்கிட்டு யாரும் வரவில்லே... என்னைப் பார்க்கத்தான் வந்தாங்க'' என்ருள்.

''உன்னைத் தேடிக்கிட்டா? யார் அது?''

''நம்ம மாமன் மாணிக்கம்னு ஒருத்தர் சிங்கப்பூரிலே இருக்கார்னு சொல்லுவியே!''

''அவன் வந்தானு?'' என்று ஏகத்தாளமாகக் கேட்டான் கேசவன். அந்த மாணிக்கம் இறந்து போனது அவனுக்கு எப்போதோ தெரியும்.

''அவருக்குத் தெரிஞ்சவங்களாம். உன்னேயும் என்னேயும் பத்தி விசாரிச்சாங்க. நான்தான் நீ வர நேரமாகுமுன்னு சொல்லி அனுப்பிச்சேன்.''

''மறுபடியும் வருவாங்களா?'' என்று விசாரித்தான் கேசவன்.

''வருவார். இங்கேதானே போலீஸ் ஸ்டேஷனில்...''

''சொல்லு, சொல்லு!'' என்று தூண்டினுன் கேசவன்.

''ஸப் — இன்ஸ்பெக்டரா இருக்காங்க'' என்று முடித்தாள் ரத்தினம்.

''இப்பத்தான் முதல் தடவையா வீட்டுக்கு வராரா?'' என்று கேட்டான் கேசவன்.

ரத்னம் பயந்தாள். அவன் குரலில் என்றும் இல்லாத ஒரு கோபம் தெரிந்தது.

''இல்லிங்க அண்ணே!'' என்ருள் அவள்.

''எத்தனை நாளா இந்தப் பழக்கம், பேச்சு எல்லாம்...?'' — கேசவன் எழுந்து விட்டான். அவன் கைப்பக்கத்தில் அரிவாள் இருந்தது. எட்டும் தூரத்தில் இரும்புப் பூண் போட்ட தடி.

''தப்புத்தான் அண்ணே, தப்புத்தான். ஆனல் அவரோடே பேசாமல் என்னுல் இருக்க முடியலியே!'' — ரத்னம் விம்ம ஆரம்பித்தாள்.

''அடச்சீ! அழாதே! உன் அண்ணன் கிட்டேயிருந்து இதெல்லாம் மறைக்க எங்கே கத்துக்கிட்டே?''

''மறைக்கணும்னு இல்லே அண்ணே... பயமா...''

''பயமா? உனக்கா?... உம்? நான் நம்ப மாட்டேன். என்னை விட உனக்கு அந்தப் பயல் பெரிசாப் போயிட்டான் இல்லே!''

ரத்னம் தலையைக் குனிந்து கொண்டாள்.

''பேச மாட்டாயா? இதற்கு மேல் இதை விட்டு வைக்கக் கூடாது. ஒரு முடிவு கட்ட வேண்டியதுதான்!'' என்று சொல்லிய கேசவன் அரிவாளைத் தன் கையில் எடுத்து விட்டான்.

''அண்ணே!'' என்று பதறிப் போய் அவன் கையைப் பிடித்தாள் ரத்னம் ஓடி வந்தபடியே.

''சீ! விடும்மா கையை. மருமகப்பிள்ளையா வரவன் வீட்டுக்குப் போறப்போ வெறும் கையுடனு போவாங்க.... வாழைத் தார் ஒன்று வெட்டி எடுத்துக்கிட்டுப் போகலாம்னு....!''

சிரித்தபடி கேசவன் போக, மகிழ்ச்சியுடன் துள்ளினுள் ரத்னம்.

ஸப் - இன்ஸ்பெக்டர் வீட்டில்தான் இருந்தார். முன்னறையில் அவரும் அவர் தங்கையும் பேசுவது உள்ளே நுழைந்த கேசவன் காதில் விழுந்தது. தன் பெயர் அவர்கள் சம்பாஷணையில் அடிபடுவதைக் கேட்டதும்

## வாலிபர் சேஷ்டை



அமெரிக்காவில் ஒரு கிழவருக்கு எண்பது வயது; நல்ல பணக்காரர். தமக்கு எப்பொழுதும் ஆலோசனை சொல்லி வரும் வாலிப வக்கீலை அழைத்து ஓர் உயில் எழுதச் சொன்னுர்.

''நான் இறந்த பின்பு என் மனைவி மறுமணம் செய்து கொள்ளாத வரையில் என் சொத்து முழுவதும் அவளையே சேர வேண்டும். அவள் மறுமணம் செய்துகொண்டால், அது என் மக்களுக்குச் சேர வேண்டும். இப்படி எழுதிவிடுங்கள்'' என்ருர்.

''கிழவரின் மனைவிக்கு வயது எழுபத்தைந்து. ஆகவே இந்த நிபந்தனை விதிக்க வேண்டிய அவசியமே இல்லே'' என்று கூறினுர் வக்கீல்.

''இல்லே, இல்லே! இந்த நிபந்தனை ரொம்ப ரொம்ப முக்கியமானது. கட்டாயம் உயிலில் இது இருக்க வேண்டும், இல்லாவிட்டால், நீங்கள் இருக்கிறீர்களே, வாலிபப் பையன்கள் — பணத்துக்காக என்னத்தை வேண்டுமானுலும் செய்து விடுவீர்கள்'' என்ருர் கிழவர்.

ஆதாரம்: பரேட் — தகவல்: விஜயம்



"எப்படியோ கஷ்டப்பட்டு உங்க பிள்ளைக்கு ஒரு இங்கிலீஷ் வார்த்தையைச் சொல்லிக் கொடுத்து விட்டேன்!"

"அப்படியா! எங்கே சொல்லுடா கண்ணு கேட்போம்!"

"நான்சென்ஸ்!"

---

சற்றுத் தயங்கி நின்றான் கேசவன். அந்தப் பெண்ணும் ரத்னத்தைப் போல் அண்ணன் ஆதரவில் வளரும் தங்கைதான்.

"அண்ணா!... எனக்கு ரத்னத்தைப் பிடிச்சிருக்கு. ஆனா அவள் அண்ணன் அந்த முரட்டுத் தடியனை நினைச்சாத்தான் பயமாயிருக்கு..." என்றாள் தங்கை.

"நம்ம வீட்டுக்கு வரப்போறது அவள் தானே? அவன் இல்லையே?"

"அது சரிதான் அண்ணா! ஆனால் நாளைக்கே அவன் ஏதாவது தகராறிலே சிக்கிக்கிட்டான்னா நீ என்ன பண்ணுவே? மச்சான்னு விட்டுக் கொடுப்பியா, இல்லே, இன்ஸ்பெக்டராப் பிடிக்க உன்னை தள்ளுவியா?"

"அதெல்லாம் எப்படீ? நம்ம கடமையைத்தான் செய்யணும்."

"அப்படிச் செய்யற இன்ஸ்பெக்டர் சினிமாவிலேயும், நாடகத்திலேயும்தான் பார்க்கலாம். எல்லாத்துக்கும் மேலே பாசம்னு ஒண்ணு இருக்கு. அண்ணா! அண்ணி கண் கலங்கினா நீ பார்த்துக்கிட்டு இருக்க முடியுமா?"

"ஏதோ பின்னாலே நடக்கப்போறதுன்னு பயந்து இந்தச் சம்பந்தத்தை உதறச் சொல்றியா தங்கம்? ரத்னம் என் மேலே உசிரையே இல்லே வச்சிருக்கு?"

கேசவன் தன் விழிக்கடைகளில் துளித்த நீரைத் துடைத்து விட்டுக் கொண்டான். தன் தங்கையின் ஆசை நிறைவேறாமல் போய்விடுமோ? இன்ஸ்பெக்டர் காலில் விழ நேர்ந்தாலும் சரி.... ரத்னத்துக்காக அவன் எதையும் செய்யத் தயார்.

"அது மட்டுமில்லே அண்ணே! அந்த முரட்டுப் பயல் வளர்த்த பெண் ரத்னம். இப்போ என்னமோ அடக்கமாகத்தான் கண்ணுக்குத் தெரியறா. நாளைக்கு இவள் மாதிரியே அவளும் ஆகமாட்டான்னு என்ன நிச்சயம்?"

ஸப் இன்ஸ்பெக்டர் பதில் சொல்லவில்லை.

"என்ன அண்ணே பதில் சொல்லாமே இருக்கே? நான் சொல்றது சரின்னு உனக்கு இப்போ படுது இல்லையா?" என்று கேட்டாள் தங்கம்.

இன்ஸ்பெக்டருக்கு மட்டுமில்லை. வெளியே காத்திருந்த கேசவனுக்கும் அவள் பேச்சில் நியாயம் இருப்பது தெரிந்தது. செயலற்றுப் போய் நின்றான் அவன்.

சில விநாடிகள் கழித்து இன்ஸ்பெக்டர் வெளியே வந்தார். தன்னைச் சமாளித்துக் கொண்ட கேசவன், "வீட்டுக்கு வந்திருந்திங்களாம். தங்கச்சி சொல்லிச்ச....." என்று இழுத்தான்.

"ஒன்றுமில்லை. இப்படிச் சும்மாதான் வந்தேன்... உள்ளே வாருங்களேன்!" என்று அழைத்தார் இன்ஸ்பெக்டர்.

கால் மணி நேரம் இருவரும் தங்கள் குடும்பத்தைப் பற்றிப் பேசினார்கள். பழைய கதைகள் எல்லாம் பரிமாறிக்கொண்டனர். ஆனால் ரத்னத்தின் திருமணம் பற்றிப் பேசவில்லை.

வீடு திரும்பிய கேசவன் மனச் சோர்வுடன் கயிற்றுக் கட்டிலில் சாய்ந்தான். இன்ஸ்பெக்டர் வீட்டில் நடந்ததை அவன் ரத்னத்திடம் மறைக்கவில்லை. யாரிடமாவது சொல்ல வேண்டும் போல் இருந்தது அவனுக்கு. அவன் தன்னை நொந்து கொண்டான். அவள் விருப்பம் கைகூடாமல் போனதற்குத் தானே காரணம் என்று மனத்தை வருத்திக் கொண்டான்.

அவள் கண் கலங்குவாள் என்று எதிர் பார்த்தான் கேசவன். ஆனால் அவள் எரிமலையாகச் சீறினாள்.

"அவர்கள் பேசினதிலே என்ன தப்பு? ஊரே பயப்படுகிற மாதிரிதானே நான் இருக்கேன்..."

"நீங்கள் என் தெய்வம் அண்ணே... உங்களை மதிக்காத வீட்டுச் சம்பந்தம் எனக்கு வேண்டாம்" என்றாள் ரத்னம் மிகுந்த ரோஷத்துடன்.

"அந்த இடம் உனக்குத் தகுந்தது. அந்த இன்ஸ்பெக்டர் தங்கமான பிள்ளை" என்றான் கேசவன்.

"ஆனால் என் அண்ணனைக் கேவலமாகப் பேசிய வீட்டில் என்ன வாழ்வு எனக்கு வேண்டியிருக்கு, அண்ணே!... நீங்கள் இதை மறந்து விடுங்கள்" என்று வேண்டிக்கொண்டாள் ரத்னம்.

ஆனால் கேசவனால் மறக்க முடியவில்லை. அவன் மனத்தை அது அரித்துக்கொண்டிருந்தது.

ஆறு மாதங்கள் உருண்டன. கேசவன் வீட்டில் இப்போது சோம்பேறிகள் கூடுவதில்லை. தோப்பு வியாபாரிக்கு ஒரு கிராக்கி குறைந்து விட்டிருந்தது. கருட்டுக் கடைக்காரனுக்கும் நஷ்டம்தான்!

தெருவில் போகிறவர்கள் எல்லாம் கேசவனை நிமிர்ந்து பார்த்து, "சௌக்



# வயிற்றுக் கோளாறுகளினால் எங்களுக்கு தொல்லை இல்லை

ஏனெனில் நாங்கள் இப்பொழுது பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை உபயோகித்துக் கொண்டு இருக்கிறோம்.

அதிகமான புளிப்புகளினால் ஏற்படும் வயிற்று கோளாறுகள் சிறந்த முறையில் மில்க் ஆப் மக்னீஷியா நிவாரணம் அளிக்கிறது.

பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நவீன விஞ்ஞான முறைக்குத் தெரிந்த ஒரு புளிப்பு நிவாரணி — துரிதமாக பலனளிக்கும். நிச்சயமாகவும் இதமான முறையிலும் பூரண குணம் கிடைக்கும்.

அநேகமாக ஒவ்வொருவரும் சிற்சில சமயங்களில் அஜீரணம், வாயுப் பொருமல், நெஞ்செரிச்சல், அல்லது பித்தம் முதலியவைகளால் அவதிப்படுகிறார்கள்.

ஒருபொழுதும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உங்கள் வசம் இல்லாமல் இருக்க வேண்டாம். அபாயம் அற்றதும் நம்பிக்கையானதுமான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா குடும்பத்தில் எல்லோருக்கும் தேவைப்படும்.

மலச்சிக்கலை பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா இதமான முறையில் நீக்கி உங்களுடைய ஜீரண உறுப்புகளை எப்பொழுதும் போல் இயங்கச் செய்கிறது.

# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா




மான்யுபாக்சரர்: ரிஜிஸ்டர்ட் யூஸர்
டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்)
பிரைவேட் லிமிடெட்,
52, பென்டல் ரோட், கல்கத்தா-19

# ரண சிகிச்சையின்றிப் புதுமுறையில் வலிமையான மூலத்தைச் சுருக்குகிறது, நமைச்சலை நிறுத்துகிறது, வலிதணிக்கிறது

**நியூயார்க்— தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சை என்பதே தேவையில்லாமல் மூலத்தைத் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதுவித மருந்துப் பொருளை முதன்முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டர்களின் கண்காணிப்பில் நிகழ்த்தப்பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி— வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப்பட்டன. இதமுடன் மெல்ல வலியாற்றிய அதேசமயம் உள்ளபடி சுருக்கமே ஏற்பட்டது.

அனைத்திலும் ஆச்சரியம் என்னவெனில், பத்து இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன்* என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம். இப் புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப்படுகிறது. மூலத்தைச் சுருங்க வைப்பதோடன்றி, மலப் பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30கி. மற்றும் 50கி. டியூப்களாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய் பற்றி விளக்கும் சிறு நூலை (ஆங்கிலம் அல்லது தமிழ்) இலவசமாகப் பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட் 38, ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட், போஸ்ட் பாக்ஸ் 976, பம்பாய் 1 பி.ஆர்.

*டிரேட் மார்க்

CHPHS TAM

---

## பருக்கள் மறைந்து விடுகின்றன

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள், செந்நிறத் தழும்புகள், மேனாகப்ரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞானமுறையில் தயாரிக்கப்[illegible]. உங்கள் சருமத்தின் மெல்லிய [illegible]களில் இருக்கும் [illegible], [illegible]களையும் அழித்து[illegible]. உங்கள் [illegible] உபாதைகள் [illegible]. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

---




# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும் பலத்திற்கும்



யோமா?" என்று கேட்கும் அளவுக்குப் பயம் தெளிந்திருந்தது. அவனும் தலையைக் குனிந்து வணக்கம் சொல்லக் கற்றுக் கொண்டிருந்தான்.

அவன் உள்ளத்தின் அடியில் அரித்த ஒரு வேதனை அவனைத் திருத்தி யிருந்தது. தன் நடத்தையால் தங்கையின் வாழ்வு பாதிக்கப்படுவது அவனால் பொறுக்கக் கூடியதா யில்லை. "நல்லபடி இரு" என்று ரத்னம் பலமுறை கெஞ்சி யிருந்தாலும் இந்த மாற்றம் ஏற்பட்டிருக்காது. ஒரு முறை 'உள்ளே' போய் வந்தாலும் அவன் திருந்தி யிருக்கப் போவதில்லை.

இப்போதும் அவன் ஜவுளிக் கடை நிலுவை வசூலிக்கப் போகிறான். அப்போதெல்லாம் பயமுறுத்திச் சாதித்ததை, மரியாதை கொடுத்து முடித்து வந்தான். தியேட்டர் வாசலில் அவன் வருவதைப் பார்த்தாலே ஒழுங்காக நிற்கத் தொடங்கினார்கள்.

கல்யாணங்களுக்குப் பந்தல் போடும், "கன்டிராக்டு" எடுத்துத் தனக்கு ஒரு நிரந்தரமான உத்தியோகத்தைச் சம்பாதித்துக் கொண்டான். மின்சார வேலைகள் செய்யவும் கற்றுக் கொண்டான்.

ஏதோ வேலையாகக் கேசவன் வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்த சமயம் வெற்றிலை பாக்கு, பழத்துடன் ஊர்ப் பெரியவர்களில் சிலர் உள்ளே நுழைந்தார்கள். காரணம் புரியாமல் திகைத்தான் கேசவன்.

"தம்பி.... நம் ஊர் ஸப்–இன்ஸ்பெக்டர் வீட்டிலே உன் தங்கையைக் கேக்கறாங்க" என்று கூறினார் பெரியவர் ஒருவர்.

"என் தங்கையையா?" என்று கேட்டான் கேசவன் தன் செவிகளை நம்ப முடியாமல்.

"நீ ஏன் தம்பி, மலைக்கிறே....? உன் சம்பந்தம் கிடைக்க அவுங்க இல்லே கொடுத்து வச்சிருக்கணும்?" என்றார் அவர்.

"அது மட்டும் இல்லே, தம்பி! அவர் தங்கச்சியைக் கட்டிக்க உனக்குச் சம்மதமான்னும் தெரிஞ்சுக்கிட்டு வரச் சொன்னாங்க!" என்றார் மற்றொருவர்.

கேசவன் உள்ளே போனான். ரத்னம் ஒப்புக் கொள்கிறாளோ, இல்லையோ? அன்று அத்தனை கோபமாக இருந்தாளே....

கேசவன் ஏதும் கேட்க முற்படுமுன் அவன் கால்களில் ரத்னம் விழுந்தாள். "என்னை மன்னிச்சுடுங்க, அண்ணே! இது எல்லாமே நான், அவர், தங்கம் எல்லாரும் சேர்ந்து ஆடின நாடகம்தான் அண்ணே. 'உன் அண்ணன் நல்லவன். அனுவசியமா முரடன்னு பேர் வாங்கிக்கிட்டிருக்கான். அவனைத் திருத்தறது நம்ம கடமை'ன்னு அவரே சொன்னாரு."

"அதுதான் திருத்திட்டீங்களே!" என்றான் கேசவன், கம்மிய குரலில்; தன்னை அவர்கள் ஏமாற்றியதில் * வருத்தம் என்று சொல்ல முடியாவிட்டாலும் ஓர் ஏக்கம் இருந்தது.

அப்போது அவன் தோளில் கைவைத்தது இன்ஸ்பெக்டர்தான்.

"மன்னிச்சுடுங்க கேசவன்! டாக்டருங்க கூடக் கத்தியை வச்சுக்கிட்டுத்தான் ஆபரேஷன் செய்யறாங்க. உங்க மனசிலே தைக்கிற மாதிரி நாங்க அன்னிக்குப் பேசினது அது போலத்தான். அதுக்குப் பிராயச்சித்தமாகத்தான் என் உயிருக்கும் மேலான என் தங்கத்தை நான் உங்களுக்குக் கொடுக்கத் தீர்மானிச்சது......"

"ரத்னம் மட்டும் என்னவாம்? அவள் என் உயிருக்கு உயிராக்கும்?" என்றான் கேசவன் பெருமிதத்துடன், தலை நிமிர்ந்தபடி.

---

ஒரு பிடி வைக்கோல் பல செய்திகளைச் சொல்லுகிறது. எப்படி என்கிறீர்களா?

வட அயர்லாந்தில் ஒரு பிடி வைக்கோலை வீட்டு வாசலில் செருகி வைத்திருப்பார்களாம். அது அந்த வீட்டில் நாய் இருக்கிறது, ஜாக்கிரதை என்று எச்சரிப்பதற்காகவாம்.

இங்கிலாந்தில் குடியானவன் தன் தொப்பியில் வைக்கோலைச் செருகி இருந்தால் அவன் வேலையின்றி இருக்கிறானென்றும் வேலை கிடைத்தால் செய்யத் தயாராக இருக்கிறான் என்றும் அறிந்து கொள்ளலாம். அந்த நாட்டில் ஏதேனும் ஒரு பொருளின் மேல் பிடி வைக்கோலை வைத்து நான்கு பேர் பார்வையில் படும்படி வைத்திருந்தால் அப்பொருள் விற்பனைக்காக வைக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்.



## வைக்கோல் சொல்லும் சேதி

ஸ்காட்லாந்து நாட்டில் ஒருவரது வீட்டுக் கதவின் இடுக்கில் வைக்கோல் செருகப்பட்டிருப்பின் வீட்டுத் தலைவன் மனைவியை அடிக்கும் துர்க்குணம் உடையவன் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

—இ.கு.ரா.

காய்கறிப்
பயிர்களுக்குப்
புரட்சிகரமான புதிய
பாதுகாப்பு!



# ரோகோர்®

பாரதத்தில் தயாராகும்
பயிர் ஜீவாணுவில்

## ஊடுருவிப்பாயும் முதல் பூச்சிமருந்து

ரோகோர் பலவகைப் பயிர்களுக்குப் புரட்சிகரமான விதத்தில் பாதுகாப்பு அளிக்கும் ஒரு புதிய முறையாகும். இலைகளாலும், வேர்களாலும் அது உறிஞ்சப்பட்டு, தாவரத்தின் உயிர்ச்சாறுடன் கலந்து, தாவரத்தின் எல்லாப் பாகங்களிலும் இரண்டு வாரங்களுக்குப் பரவுகிறது. அச் சமயத்தில் பயிரின் உயிர்ச் சாற்றைக் குடிக்கும் எந்தப் பூச்சியும் இறந்து விடுகிறது. ரோகோர் பத்திரமான பூச்சி மருந்தாகும்-மனித இனத்துக்கு ஆபத்தற்றது.

இந்திய விவசாயிகளுக்குப் பலவகை சக்தி மிகுந்த பூச்சி மருந்துகளை விநியோகித்து விவசாயிகளின் நன் மதிப்பைப் பெற்ற டாடா பைஸன் இண்டஸ்ட்ரீஸ் ஸ்தாபனம் பாரதத்திலேயே ரோகோர் தயாரிப்பதற்காக ஒரு புதிய தொழிற்சாலையை ஏற்படுத்தியுள்ளார்கள்.

உங்கள் காய்கறிப் பயிரின் மேல பாரதத்தில் தயாராகும் பயிர் ஜீவாணுவில் ஊடுருவிப் பாயும் முதல் பூச்சி மருந்தான ரோகோர் உபயோகியுங்கள். அமோகமான, உயர்ந்த விளைச்சலை உறுதி செய்யுங்கள்.



ROGOR®

*இத்தாலி, மிலானிலுள்ள மான்டிகேடினி நிறுவனத்தார்*
*ரிஜிஸ்தர் செய்யப் பட்ட ட்ரேட் மார்க்® ரோகோர்.*



டாடா பைஸன்
தயாரிப்பு

TATA FISON RALLIS

டாடா பைஸன் ராலிஸ்

# சிவனருட் செல்வர்

## 50. பூம்பாவை

திருவொற்றியூருக்குத் தெற்கே திருமயிலாப்பூர் என்ற திருத்தலம் விளக்கமாக இருந்தது. அங்கு வணிகர் குலத்தில் தோன்றியவர் சிவநேசர். அவர் பல மரக்கலங்களைக் கடல் மீது அனுப்பிப் பெருவணிகம் புரிந்து வந்தார். அளவற்ற நிதிகளுக்குத் தலைவரான அவர் அளகேசனைப் போல் பெருமையுடன் இருந்தார். அவர் பொய்ம்மை யகற்றி மெய்ம்மை யறிந்து சிவபதமே நினைக்கும் திருவுடையார். அடியார்களுடன் கூடி உள்ளம் உருகி உவகையுறுவார்.

திருஞான சம்பந்தப் பிள்ளையார் சீகாழியிலே உமா தேவியார் அருளிய சிவ



திருமுருக கிருபானந்தவாரியார்

ஞானப் பாலை உண்டதையும், சமணம், பௌத்தம் முதலிய புறச் சமயங்களைக் களைந்து, சிவசமயத்தை நிலை நாட்டுவதையும் கேட்டுக் கழிபேருவகையுற்றார். இரவும் பகலும் திருஞான சம்பந்தருடைய திருவடியை அயராது தியானித்து வந்தார்.

சிவநேசருக்கு எல்லாப் பேறுகளும் பொருந்தியிருந்தும் மகப்பேறு இல்லாதிருந்தது. அவர் பல தான தருமங்களும் தவமும் புரிந்தார். பல்லாயிரம் சிவனடியார்களுக்கு உணவு, உடை வழங்கி வழிபாடு புரிந்தார்.

சிவநேசர் செய்த தவப் பயனால் அவருடைய மனைவியார் கருவுற்று, திருமகளைப் போன்ற ஒரு பெண் மகவைப் பெற்றெடுத்தாள். சிவநேசர் எல்லையில்லாத நிதிகளை வாரி வாரி வறியவர்க்கு வழங்கினார். மறை விதி வழுவாமல் சடங்குகள் யாவும் செய்து, பூவில் வாழும் பொன் போல் விளங்கும் அக்குழவிக்குப் பூம்பாவை என்று பெயர் சூட்டினார்.

மின்னற் கொழுந்து போன்ற அத் திருமகள் அழகின் சிகரமாக விளங்கி இனிது வளர்ந்தாள். ஏழு ஆண்டுகள் நிரம்பிய பேதை மகளிருடன் கூடி அம்மானை, பந்து, கழங்கு முதலிய ஆடல்கள் புரிந்தும், திருவீதியில் சிறு வீடு கட்டியும், ஊசலாடியும், பாவைகளுக்குப் பாலூட்டியும் விளையாடுவாளாயினாள். மகளது அருங்குணங்களைக் கண்டுகளித்த தந்தையார், "இவளை மணந்து கொள்பவன் எனது முடிவில்லாத செல்வம் முழுவதற்கும் உரியவனாவான்" என்று கூறினார்.

திருஞான சம்பந்தர் பாண்டிநாடு சென்று சைவத்தை நிலைநிறுத்திய வெற்றியைக் கேள்வியுற்றுச் சிவநேசர் அளவிலா மகிழ்ச்சியுற்றார். "காழி வேந்தராம் கவுணியர் பெருமானுக்கு அடியேன் எனது மகளையும் செல்வத்தையும் என்னையும் தந்தேன்" என்று மக்களறியக் கூறினார்.

சுற்றம் நீடிய கிளையெலாஞ் சூழ்ந்துடன் கேட்பக்
கற்ற மாந்தர்வாழ் காழிநாடுடையவர்க் கடியேன்
பெற்றெடுத்த பூம்பாவையும் பிறங்கிய நிதியும்
முற்றும் என்னையும் கொடுத்தனன் யான் என்று
மொழிந்தார்.

சிவநேசரின் திருமகள் பூம்பாவை ஒரு நாள் கன்னிமாடத்தின் அருகில் உள்ள நந்தவனத்தில் சேடியருடன் சென்று மலர் கொய்தாள். சிவநேசர் ஆர்வம் மிகுதியால் அளித்தாரேயன்றி, ஞானமுண்ட பிள்ளையாருக்கு இது பொருந்தாதென்ற நியதி ஒரு பாம்புருக் கொண்டு சென்றது போல், கொடிய நாகம் ஒன்று மாதவிப் பந்தரில் மறைந்து வந்து, மலர் கொய்து கொண்டிருந்த பூம்பாவையின் விரலில் நான்கு பற்களும் பதியத் தீண்டி விடம் உருத்துப் படம் விரித்து ஆடி அகன்றது. தீயில் விழுந்த மலர் மாலை போல் மங்கை மயங்கி விழுந்தாள். அம்மாதரசைப் பாங்கிமார்கள் தாங்கி வந்து மலர்ப் பள்ளிமேற் சாய்த்தார்கள்.

சிவநேசர் ஆராத் துயரமுற்றார். விடத்தையகற்றவல்ல வித்தகர் பலர் வந்தனர். மந்திரம், மருந்து, தியானம், பாவகம் முதலியவைகளைத் தனித் தனியே செய்தார்கள். அவ்விடம் ஒன்றும் அகலாது ஏழாம் வேகத்தை எய்தியது. 'இது விதியின் செயல்' என்று அவர்கள் கூறி உள்ளம் நொந்தார்கள். சிந்தை நொந்து அயர்ந்த சிவநேசர் செய்வது வேறு யாது என்று அறியாமல், "இத்திருமகளின் விடத்தை விலக்குவோருக்கு அளவற்ற நிதி தருவேன்" என்று பறையறைவித்தார். அரசர்களிடம் உள்ள மருத்துவர்களும், முதிர்ந்த அநுபவசாலிகளும் வந்து மூன்று நாட்கள் வரை முயற்சி செய்தும் விடம் தீரப் பெறாது அதிர்ச்சியுற்று அகன்றார்கள்.

இவள் திருஞான சம்பந்தருக்கு உரியவள் என்று செப்பியதனால் இவளைப் பற்றி வருந்துவதற்கில்லை என்று மனம் தேறினார் சிவநேசர். பூம்பாவையின் உயிர் துறந்த உடலைச் சுட்டு, எலும்பையும் சாம்பலையும் ஒரு குடத்தில் நிரப்பினார். அதனைக் கன்னி மாடத்தில் ஒரு பீடத்தில் வைத்து, பொன்னும் அணிகளும் புனைவித்தார், பட்டுடைகள் சாத்தி, திருஞான சம்பந்தரையே தியானித்துக் கொண்டிருந்தார். நாடோறும் மாலை, சந்தனம் முதலியவைகளைத் தவறாமல் அதற்குப் புனைந்து வந்தார்.

திருஞான சம்பந்தர் திருவொற்றியூரில் வந்து தங்கியிருப்பதைச் சிலர் சிவநேசரிடம் கூறினார்கள். அவ்வாறு கூறியவர்களுக்கெல்லாம் செம்பொன் வழங்கி மகிழ்ச்சியுற்ற சிவநேசர், திருமயிலாப்பூரிலிருந்து திருவொற்றியூர் வரை நடைப்பந்தர் இடுவித்தார். அப்பந்தரில் தூய உடை விதானித்தார். மகர தோரணம் கட்டி, வாழை கமுகு நாட்டினார். பூமாலைகளைத் தொங்க விட்டு, ஆங்காங்கு வெண் கொடி பறக்கவிட்டு எங்கும் அலங்காரம் செய்தார். வீதிகள் யாவும் சந்தனத்தால் மெழுகிக் களப கஸ்தூரி சிந்தி, மலர் புனை சூழ்ந்து வரச் சிவநேசர் திருவொற்றியூர் நோக்கிச்

சென்றார். திருமயிலையை வணங்கும் பொருட்டுத் திருஞானசம்பந்தரும், திருத்தொண்டர் கூட்டத்துடன் புறப்பட்டு வருகின்றார் அதனை அறிந்த சிவநேசர் பெரிதும் உவந்து ஓடிச் சம்பந்தப் பெருமான் அடிமலர் மீது வீழ்ந்து எழுந்தார். அருகிலுள்ளோர் சிவநேசரின் பெருமையைச் சொல்லக் கேட்டு மகிழ்ந்த சம்பந்தர் திருமயிலாப்பூரை அடைந்தார்.

முன் நிகழ்ந்தவற்றை யெல்லாம் திருவுள்ளத்தில் சிந்தித்த திருஞான சம்பந்தர் திருக்கோயிலுட் சென்றார். அக்கோயிலை வலம் வந்து தொழுது, கபாலீச்சுரரையும் கற்பகவல்லியையும் பன்முறை பணிந்து, கோயிலின், திருமதிற்புறம் வந்தருளினார்.

''உலகம் அறிய உமது புதல்வியின் எலும்பு நிறைந்த குடத்தினைக் கொணர்க'' என்று சிவநேசரை நோக்கி அருளிச் செய்தார், ஆளுடைப் பிள்ளைகள். சிவநேசர் தமது திருமாளிகை சென்று, கன்னி மாடத்தில் வைத்துள்ள அக்குடத்தினை முத்துக்கள் பதித்த மூடு பல்லக்கில் வைத்து, இளஞ்சேடியர் சூழ்ந்து வரக் கொண்டு வந்து, திருஞான சம்பந்தர் திருமுன் வைத்து வணங்கினார். எல்லோரும் நெருங்கி வந்து சூழ்ந்தார்கள். சம்பந்தர் ''பூம்பாவாய்!'' என்று விளித்து

''மண்ணினில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர்நல்விழாப் பொலிவுகண்டார்தல்
உண்மையாமெனில் உலகர்முன் வருகெ''ன
வுரைப்பார்

''ஆன்ம கோடிகள் உலகில் பிறந்த தன் பயன், அரனடியவர்க்கு அமுது செய்வித்தலும், நல்விழாக் காண்டலுமே உண்மையாம் என்றால் நீ உலகவர் முன் வருக'' என்று கூறினார்.

''மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்''

முதற் பாடல் பாடியதும் பூம்பாவை உருவம் பெற்றாள். பின்னர் எட்டுப் பாடல்கள் பாடியதும் பன்னிரண்டு ஆண்டு வளர்ந்த அளவினை எய்தினாள். பத்தாவது பாடலைப் பாடியதும் பூம்பாவை குடத்தினின்றும், தாமரைக் கோயிலில் திருமகள் தோன்றியதுபோல், அழகுடன் தோன்றினாள்.

அனைவரும் அதிசயமடைந்தார்கள். அடியார்கள், ''அரகர'' என்று ஆரவாரம் செய்தார்கள். தேவரும் முனிவரும் திருவருளின் திறத்தை நோக்கிப் பூமழை பொழிந்தார்கள். எல்லாரும் எம்பிரான் கருணையை நினைந்து மண்மிசை வீழ்ந்து வணங்கினார்கள்.

எண்ணில்லாத வயதுடைய பிரம்மதேவர் தான் படைத்த திலோத்தமையின் அழகை நான்கு முகங்களினாலே கண்டார். அத்திலோத்தமையினும், பன்மடங்கு அழகுடையவளாகத் தாம் படைத்த பூம்பாவையிடம் சிவபிரானின் கருணை வெள்ளத்தைப் பதினாறு வயதுடைய திருஞானசம்பந்தர் ஆயிரமுகங்களினாற் கண்டருளினார்.

வனப்புமிக்க மகளைக் கண்ட சிவநேசர் சம்பந்தப் பெருமான் பாதமலர் மீது வீழ்ந்தார். பூம்பாவை கபாலீச்சுரரைத் தொழுது, புகலிவேந்தர் பொன்னடியைத் தொழுதாள். பின்னையார் சிவநேசரை நோக்கி, ''உமது புதல்வியை அழைத்துக் கொண்டு இல்லம் செல்லுக'' என்று வேண்டினார்.

''எந்தையே! அடியேன் அருமையுடன் பெற்ற இந்தப் பெண்மணியைத் தேவரீர் திருமணஞ் செய்து கொண்டருள வேண்டும்'' என்று சிவநேசர் பிள்ளையாரைத் தொழுது வேண்டினார்.

''சிவநேசரே! நீர் பெற்ற பெண் அரவினால் மாய்ந்தனள். இவள் சிவபெருமான் கருணையால் தோற்றுவிக்கப்பட்டவள். ஆதலின் உமது சொல் தகாதது'' என்று திருஞானசம்பந்தர் அருளிச் செய்தார். வணிகர் பெருமானும் சுற்றத்தாரும் மீண்டும் தங்கள் கோரிக்கையை வலியுறுத்தினர். திருஞான சம்பந்தர் தருமநூல் முறையினை இனிது எடுத்து உரைத்தருளினார். மீண்டும் பூம்பாவை தோன்றக் காரணமாகிய தாம் அவளது தந்தைக்குச் சமானம் என்று உணர்த்தினார். சிவநேசர் தமது திருமகளை வேறு ஒருவருக்கு மணம் செய்துகொடுக்க இசையேன் என்று மகளைக் கன்னிமாடத்துள் வைத்தனர். பூம்பாவை தவத்தைச் செய்து சிவத்தைச் சார்ந்தனள்.

## 51. சிவஜோதி

திருஞான சம்பந்தர் திருமயிலையில் சில நாட்கள் எழுந்தருளியிருந்தபின் பிற தலங்களை வணங்கும் பொருட்டுப் புறப்பட்டார்.

இனிய தண்டமிழ் மாலை சாத்தி உள்ளங் குளிர்ந்து திருத்தில்லையைச் சார்ந்தார் திருஞான சம்பந்தர். அடியவர்கள் அவரை எதிர்கொண்டு உப

சரித்தார்கள். தில்லையின் எல்லையை வணங்கி, தனியாக் காதலுடன் மணி மன்றத்துள் தனி நடம் புரியும் கனியமுதைக் கண்டு நனிமகிழ் கொண்டு போற்றினர். காலந்தோறும் கனக சபாபதியை வணங்கிக் கொண்டு அங்கு தங்கியிருந்தார்.

பின்னர் தோணியப்பரை வணங்கும் விருப்புடன், சீகாழியடைந்தார்.

தமது திருமகனுருக்குப் பதினறு ஆண்டுகள் நிரம்பியதனல் திருமணப் பருவம் எய்தியது என்று எண்ணினர் சிவபாத இருதயர்.

பாசத் தொடர்பு நீங்கிய பாலறு வாயர் அதற்குத் திருவுள்ளம் இசையாது, ''அது கூடாது'' என்று மொழிந்தருளினர்.

சுற்றத்தார்கள் அவரைத் தொழுது, ''திருவருட் கொழுந்தே! வேதவிதி உலகில் நிலைபெறச் செய்ய வந்தீர். ஆதலின் அறு தொழிலில் ஒன்ருகிய திருமணம் செய்து உலகுக்கு உயர் நெறியைக் காட்டியருள வேண்டும்'' என்று விண்ணப்பித்தார்கள்.

முத்தமிழ் விரகர், மறை வாழவும், மறைநெறியின் துறை வாழவும் சுற்றத்தார்க்கு அருளி உடன்பட்டருளினர். தந்தையாராகிய சிவபாத இருதயரும் ஏனைய சுற்றத்தார்களும் எல்லையிலாத இன்புற்றூர்கள். திருப்பெருமணநல்லூரில் வாழுகின்ற நம்பாண்டார் நம்பி என்பாருடைய புதல்வியை மணம் பேச எண்ணினர்கள். திருத்தொண்டர்களும், வேதியரும் புடைசூழச் சிவபாத இருதயர் நல்லூர்ப் பெருமணத்தையடைந்தார்.

நம்பாண்டார் நம்பி அவர்களை எதிர் கொண்டு மிகப் பெரிதும் மகிழ்ந்து உபசரித்தார். சிவபாத இருதயர் நம்பாண்டார் நம்பியை நோக்கி, ''முத்தமிழ்விரகராம் உத்தமருக்கு உமது புதல்வியை மணம் புரிந்தளிக்க வேண்டும்'' என்றூர்.

''உங்கள் பெருந்தவத்தினுல் வந்து அவதரித்து அகிலாண்டநாயகியின் சிவஞானத் தீம்பாலையுண்டவர்க்கு எமது குலக் கொழுந்தை நாங்கள் உய்வு பெறும் பொருட்டுத் தருகின்றேம். வாருங்கள்'' என்று கூறி இசைந்தார் நம்பாண்டார் நம்பி.

சிவபாத இருதயர் சீகாழிக்கு வந்து பிள்ளையாரிடம் அச்செய்தியை உரைத்துத் திருமணத்துக்குரிய செயல்களைச் செய்யலானர். திருமண வேலை பெற்ற நம்பாண்டார் நம்பி திருநல்லூரில் முத்துப் பந்தரிட்டு, தோரணங்கள் நாட்டி, பூமாலைகள் தொங்கவிட்டு அலங்கரித்தார்.

எட்டுத் திசைகளில் உள்ள அடியவர்கள் அளவிலா மகிழ்ச்சியுடன் சீகாழி வந்து சேர்ந்தார்கள். திருமண நாளின் முன்னல் காப்பு நாணை நகர் வலம் புரிவித்து, பிள்ளையார் திருக்கரத்தில் புனைவித்தார்கள்.

அன்று இரவு கழிந்தது. திருமண நாளன்று கவுணியர் பெருமான், திருத்தோணியப்பரைத் தொழுது, முத்துச் சிவிகை மீது ஆரோகணித்தருளினர். மங்கல வாத்தியங்கள் ஒலித்தன. திருமண விழாவினைக் காணும் பொருட்டு விண்ணவரும் விமானமூர்ந்து விண்ணிடை சென்றூர்கள்.

திருநல்லூர்ப் பெருமணஞ் சேர்ந்தவுடன் ஆங்குள்ளோர் வந்து எதிர் கொண்டு வணங்கினர்கள். பிள்ளையார் ஆங்கு விளங்கும் திருக்கோயிலுட் சென்று, இறைவரைப் போற்றித் திருவருள் பெற்றூர். திருக்கோயிலின் புறத்துள்ள ஒரு திருமடத்தில் எழுந்தருளினர். திருமணக்கோலம் புனைய லுற்றூர்கள். பொற்குடங்களில் நிறைந்த புனித நறு நீராட்டி, வெண் பட்டாடை சாத்தி, களப கஸ்தூரி புனைந்து, முத்துமாலைகள், திருக் கண்டிகை, மோதிரங்கள் திருமுடி முதலிய அணிகலங்களைச் சாத்தினர்கள். திரு அடையாள மாலையும் சாத்தினர்கள். அழகினுக்கு அழகாகத் திருவெண்ணீற்றை ஐந்தெழுத்து ஓதிச் சாத்தினர்கள். பிள்ளையார் முத்துச் சிவிகை மீது எழுந்தருளினர். வானவர் மலர்மழை பொழிந்தார்கள். கலை நிறை மதிபோல் பிள்ளையார் திருவீதியில் எழுந்தருளி வருகின்றூர்.

அங்கே, திருஞானசம்பந்தருடைய திருக்கரத்தைத் தீண்டுவதற்குத் தவம் செய்த கற்பகப் பூங்கொம்பு அனைய கன்னிகையை அலங்கரித்துக் காப்பு நாண் சேர்த்துச் சடங்குகள் செய்து அமைத்தார்கள். மணப் பந்தரிடையே சம்பந்தர் வந்து சேர்ந்தார். முத்து விதானத்தின் கீழ் மலர்த்தவிசின் மீது வீற்றிருந்தருளினர்.

நம்பாண்டார் நம்பி தமது மனைவியுடன் பிள்ளையாரை எதிர்கொண்டு பாலும் நீரும் கொண்டு பாதபூசை செய்து, அந்நீரைச் சென்னி மேல் தெளித்துக் கொண்டு, உள்ளம் பூரித்தார். பிள்ளையார் திருக்கரத்தில் வாசநீர் வார்த்து, குலமுங் கோத்திரமுங்கூறி, ''என் புதல்வியைப் புகலி வேந்தருக்கு அளித்தேன்'' என்று கூறினர்.

(தொடரும்)

ஏப்ரல்
14
முதல்

சென்னை:
கெயிட்டி • ஸ்ரீகிருஷ்ணா
புவனேஸ்வரி ஜெயராஜ்
மற்றும் தென்னாடெங்கும்



ரவி புரொடக்ஷன்ஸ்

# பேசும் தெய்வம்



தயாரிப்பு: பாலு    இசை: K.V.மஹாதேவன்

திரைக்கதை, வசனம்-டைரக்ஷன்:

இயக்குநர் திலகம்: K.S.கோபாலகிருஷ்ணன்



ELEGANT

# காதல் நாவலும் நானும்

வங்காள மூலம்: ஸ்ரீ அஜித் கிருஷ்ண வசு
தமிழாக்கம்: சி. கிருஷ்ணமூர்த்தி



ஒரு சமயம் எனக்குக் காதல் நாவல் படிக்கும் விருப்பம் ஏற்பட்டது. இரவல் வாங்கிப் படிப்பதை விடக் காசு கொடுத்துப் புத்தகம் வாங்கிவிடுவது மேல் என்று தீர்மானித்தேன் நான். ஆகவே ஒரு நாள் மாலை உலாவச் சென்றபோது பெரிய குளத்தின் கரையிலிருந்த புத்தகக் கடைக்குப் போனேன். கிழக்கு ஆசியாவிலேயே மிகப் பெரிய புத்தகக் கடையாம் அது. எவ்வளவு பெரிய கடை! சுமார் அரை ஏக்கர் நிலத்தை வியாபித்துக் கொண்டு ஒரு மூன்று மாடிக் கட்டிடம்; கட்டிடம் முழுதும் புத்தகங்கள்; அப்படியும் இடம் போதாமல் அந்தக் கட்டிடத்துக்கு இன்னும் சில மாடிகள் கட்டப் போகிறார்களென்று கேள்வி.

கீழ்த்தளத்தில் உள்ளே நுழைந்ததும் வரவேற்பு இலாகா இருந்தது. அங்கிருந்தவரைக் கேட்டேன்: ''காதல் நாவல் கிடைக்குமா?''

பதில் வந்தது: ''நான்காவது மாடி. லிப்டில் ஏறிப் போங்கள்.''

லிப்டில் ஏறி நான் நான்காவது மாடி போய்ச் சேர்ந்தேன். ஒரு பெரிய ஹால். அதில் நாற்புறமும் சுவரில் பொருத்தப்பட்ட அலமாரிகள்; அவற்றைத் தவிர ஏராளமான இரும்பு அலமாரிகள்; எல்லாவற்றிலும் புத்தகங்கள்! எங்கும் புத்தக மயம்! வாங்குபவர்களின் கூட்டம் அதிகம்தான்; இருந்தாலும் அங்குள்ள ஊழியர்கள் கூட்டத்தைச் சாமர்த்தியமாகச் சமாளிக்கிறார்கள்.

நான் அங்கு தயங்கித் தயங்கி நிற்பதைக் கண்ட ஒருவர் என்னிடம் வந்து, ''உங்களுக்கு எப்படிப்பட்ட காதல் நாவல் வேண்டும்?'' என்று கேட்டார்.

நான் பதிலுக்குக் கேட்டேன், ''காதல் நாவல் என்றால் காதல் நாவல்தான்! அதில் வகைகள் வேறா?''

''நன்றாய்ச் சொன்னீர்கள் போங்கள்! காதல் பலதரப்பட்டதாக இருக்கும்போது காதல் நாவல் மட்டும் பலதரப்பட்டதாக இருக்காதா? சரி, இந்தப் பக்கம் போங்கள். இந்தப் பக்கம் முழுதும் காதல் நாவல்கள்தான்.''

அவர் குறிப்பிட்ட பக்கம் சென்றேன். எங்கு பார்த்தாலும் புத்தகங்கள்! இவ்வளவும் காதல் நாவல்களா! எனக்கு உண்டான வியப்புக்கு அளவில்லை.

அங்கிருந்த பணியாளர் ஒருவர் என்னிடம் வந்தார். ''எந்த மாதிரிக் காதல் நாவல் வேண்டும் உங்களுக்கு! இன்பியலா, துன்பியலா?''

''இன்பியலோ, துன்பியலோ, நல்லதாகப் பார்த்து ஒரு நாவல் எடுத்துக் கொடுங்கள்'' என்றேன் நான்.

பணியாளர் சொன்னார்: ''ஏதாவது ஒரு நாவலை எடுத்துக் கொடுப்பதில் என்ன பிரயோசனம்? அதை எடுத்துக் கொண்டு போய்ப் படித்துப் பார்த்து அது உங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் எங்களுக்கல்லவா கெட்ட பெயர்! வாடிக்கைக்காரர்கள் தலையில் ஏதாவதொரு புத்தகத்தைக் கட்டி விடுவதை எங்கள் ஸ்தாபனம் விரும்புவதில்லை. அவரவர்களுடைய விருப்பு வெறுப்புக்களை நன்றாக அறிந்து கொண்டு அவரவருக்குப் பிடித்தமான புத்தகங்களைப் பொறுக்கிக் கொடுப்பது எங்கள் கடமை. இத்தகைய முயற்சியால் நல்ல பலனும் கிடைக்கிறது. ஆகையால் உங்களுடைய விருப்பத்தைத் தெளிவாகச் சொல்லுங்கள்.''

நான் இதற்கு முன் காதல் நாவல் வாசித்த தில்லை. ஆகையால் என்னுடைய விருப்பம் என்ன என்பது எனக்கே தெரியாது. என் திண்டாட்டத்தைக் கவனித்த பணியாளர் எனக்கு உதவி செய்ய முன்வந்தார்.

அவர் சொன்னார்: ''கதாநாயகனும், கதாநாயகியும் அனுபவிக்கும் மகிழ்ச்சியை இந்த வாசகர்களும் அனுபவிக்கிறார்கள். ஆனால் வேறு பல வாசகர்களின் விருப்பம் கதாநாயகனும் கதாநாயகியும் பிரிந்து போய்விட வேண்டும். அவர்களுடைய துன்

பத்தை நினைத்துத் தாங்களும் கொஞ்சம் அழ வேண்டும் என்பதுதான். பிறருடைய துன்பத்தைக் கண்டு அழுவதிலும் ஓர் இன்பம் இருக்கிறதல்லவா? உங்களுக்கு எந்த வகைக் கதை வேண்டும், சொல்லுங்கள்!''

நான் கேட்டேன்: ''எந்தமாதிரிக் கதைகள் அதிகம் விற்பனையாகின்றன?'' என்று.

பதில் கிடைத்தது: ''இளைஞர்களும் யுவதிகளும் இன்பியல் கதைகளையே விரும்புகிறார்கள். ஆனால் அவர்களில் காதலித்துத் தோல்வியுற்றவர்கள் பிரிவில் முடியும் கதைகளை விரும்புகிறார்கள். அனுபவத்திலும் அறிவிலும் முதிர்ச்சி பெற்ற வாசகர்கள் பெரும்பாலும் துன்பியல் கதைகளையே வாங்கி ரசிக்கிறார்கள். நீங்களே பாருங்கள், உலக இலக்கியத்தில் சிறந்த நூல்களெல்லாம் துன்பியல்தான்.''

விஷயம் தெரியாதவர்கள்தான் இன்பமாக முடியும் கதைகளை ரசிப்பார்கள் என்ற பாவம் அவருடைய பேச்சில் தொனித்தது. ஆகவே, ''துன்பியலே எனக்குப் பிடித்தம்'' என்று சொல்லி வைத்தேன்.

''அப்படியானால் இந்தப் பக்கமாகத் துன்பியல் பிரிவுக்குப் போங்கள்'' என்று வழிகாட்டினார் பணியாளர்.

அவர் குறிப்பிட்ட பிரிவுக்குள் நுழைந்தேன். ஏராளமான பலவிதப் புத்தகங்கள் அங்கே வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு புத்தகத்திலும் கண்ணீர் உருக்க வைக்கும் உருக்கமான கதை வாசகனை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருந்தது.

ஒருவர் என்னிடம் வந்து தன்னைத் துன்பியல் பிரிவின் பணியாளர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார். அவர் முகத்தில் விவரிக்க இயலாத சோகம் சூழ்கொண்டிருந்தது. எந்த நிமிஷத்திலும் அவர் அழத் தொடங்கி விடுவார்போலிருந்தது. அவரைப் பார்த்தால், துன்பியல் நாவல்களுக்கு நடுவே வாழ்ந்து வாழ்ந்து அவர் இப்படி ஆகிவிட்டார் போலும் என்று முதலில் நினைத்தேன். ஆனால் நன்கு அவரைக் கவனித்த பிறகு என் தவறு எனக்குப் புரிந்தது. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, சோகமே உருவெடுத்தாற் போலிருந்த அவருடைய முகத்தில் ஓர் அழுத்தத்தையும் உறுதியையும் காண முடிந்தது. துன்பியல் கதைகளுடனேயே வாழ்ந்து வாழ்ந்து எந்தத் துன்பியலையும் சமாளிக்கும் நெஞ்சுரம் பெற்று விட்டார் அவர் என்பதை நான் உணர்ந்தேன்.

''உங்களுக்குத் துன்பியல் வேண்டுமல்லவா? எப்படிப்பட்ட துன்பியல் வேண்டும்? சாவினால் ஏற்படும் பிரிவை விரும்புகிறீர்களா? உயிருடன் இருக்கும்போதே நிகழும் பிரிவை விரும்புகிறீர்களா?''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. ''அப்படியென்றால்?'' என்று கேட்டேன்.

அவர் விளக்கினார்: ''கதையின் முடிவில் கதாநாயகனோ, நாயகியோ இறந்துபோய், அதனால் அவர்களிடையே பிரிவு ஏற்படலாம். அல்லது இருவரும் உயிருடன்தான் இருக்கிறார்கள், ஆனால் ஏதோ காரணத்தினால் அவர்கள் ஒன்று சேர முடியவில்லை. ஆக இரண்டு விதத் துன்பியல் நாவல்கள் உண்டு. புத்தகத்தைத் தேர்ந்தெடுக்க உங்களுக்குள்ள உரிமையில் நான் குறுக்கிட விரும்பவில்லை. ஆனால் என்னைக் கேட்டால் சாவில்லாமலே பிரிவு ஏற்படும் கதைதான் உயர்ந்தது என்பேன். சரத் சந்திரரின் 'கிராம சமாஜம்' நாவலை எடுத்துக் கொள்ளுங்கள். ரமாவோ, ரமேஷோ இறக்கவில்லை; ஆனால் அவர்கள் ஒன்று சேரவும் இல்லை. சாவில் முடியும் கதை ஒரு விதத்தில் நல்லதுதான். ஏனென்றால் அப்படிப்பட்ட கதையில் முடிவு தீர்மானமாக இருக்கிறது. அதில் பிரச்னை ஒன்றும் இல்லை. சந்தேகத்துக்கு இடமில்லை; பங்கிம்சந்திரரின் 'கபால குண்டலா'வைப் பாருங்கள். கதையின் முடிவில் நவகுமார், கபால குண்டலா இவர்களின் சடலத்தை அலைகள் அடித்துக்



கொண்டு வந்து கரையில் ஒதுக்கி விடுவதாக எழுதாமல் கதாசிரியர் கதையின் முடிவைச் சற்றுக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டார். நவகுமாரும் கபாலகுண்டலாவும் அலைகளில் மிதந்து கொண்டு எங்கு போனார்கள்? இந்தக் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு எவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்து விட்டார் தாமோதர் முகர்ஜி! கபால குண்டலாவின் முடிவைப் பற்றித் தாமோதர் புத்தக வரிசையில் படித்திருக்கிறீர்கள் அல்லவா?''

நான் படித்ததில்லை என்பதை வெட்கத்துடன் ஒப்புக் கொள்ள நேர்ந்தது.

''அப்படியா? நீங்கள் காதல் நாவலுக்கே புதிது போலிருக்கிறது'' என்று பணியாளர் சொன்னார். ''அப்படியானால் முதலில் சாவில் முடியும் கதைகளைப் படிக்க ஆரம்பியுங்கள்.

அது பழக்கமான பிறகு சாவில்லாத துன்பியல் கதைகளைப் படிக்கத் தொடங்கலாம். இந்தப் பக்கம் வாருங்கள். இங்கேயுள்ள கதைகளெல்லாம் சாவில் முடிபவை. இவற்றில் உங்களுக்குப் பிடித்ததைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுங்கள்.''

'சாவு—முடிவு'ப் பிரிவுக்குள் நுழைந்தேன். அங்கிருந்த மூவர் என்னிடம் வந்து ஆளுக்கொரு கேள்வி கேட்டார்கள்.

''உங்களுக்குக் கதாநாயகனின் சாவு பிடிக்குமா?''

''இல்லை, கதாநாயகியின் சாவா?''

''அல்லது இரண்டு பேருமே இறக்க வேண்டுமா?''

நான் சொன்னேன்: ''இந்த விஷயத்தில் எனக்கு ஒரு விசேஷ அபிப்பிராயமுமில்லை. ஏதோ நல்ல புத்தகமாகக் கொடுங்கள், அது போதும்.''

முதல் பணியாளர் சொன்னார்: ''நல்ல புத்தகம் என்று பொதுவாகச் சொன்னால் தெளிவாகப் புரியாது. தவிரவும் ராமனுக்கு நல்லதா விருப்பது கிருஷ்ணனுக்குக் கெட்டதாகத் தோன்றலாம். எனக்குப் பிடித்த புத்தகம் உங்களுக்குப் பிடிக்காமல் போகலாமே! அதற்கு என்ன செய்வது?''—

''இதற்குத்தான் 'லோகோ பின்ன ருசிஹி' என்று நம் முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.'' இது இரண்டாவது பணியாளர் சொன்னது.

மூன்றாமவர் சொன்னார்: ''நிலையில்லா மனத்துடன் புத்தகம் படிப்பதில் பிரயோசனமில்லை. நீங்கள் சற்று யோசனை செய்து உங்களுக்கு எந்த விதமான கதை வேண்டும் என்பதை உறுதியாகத் தீர்மானித்துக்கொள்ளுங்கள். உங்கள் விருப்பத்துக்கு ஏற்ப நாங்கள் ஏற்பாடு செய்கிறோம்.''

கதாநாயகி இறந்து போவதைக் கற்பனை செய்யக் கூட மனமில்லை எனக்கு. ஆகையால் ''கதாநாயகனின் மரணத்தில் முடியும் கதையையே கொடுங்கள்'' என்றேன்.

முதல் பணியாளர் சொன்னார்: ''அப்படியானால் இப்படி வாருங்கள். இந்தப் பகுதியில் உள்ள எல்லாப் புத்தகங்களிலும் கதாநாயகன் செத்துப் போகிறான்.''

அந்தப் பகுதியும் பிரம்மாண்டமானதுதான்! எல்லாம் கதாநாயகனின் சாவில் முடியும் கதைகள்! அப்பாடா! இனியாவது ஒரு புத்தகத்தைத் தேர்ந்தெடுத்து விடலாம்!

ஆனால் இப்போதும் ஒருவரும் என்னைப் புத்தகத்தைத் தேர்ந்தெடுக்க விடவில்லை. நான் புத்தகம் எடுக்கப் போனபோது ஒரு பணியாளர் குறுக்கிட்டார்; சரமாரியாகக் கேள்விகளையும் தொடுத்தார். ''கதாநாயகன் எவ்விதம் சாக வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்? இயற்கையாகவா? விபத்திலா? படுகொலை செய்யப்பட்டா? அல்லது தற்கொலை செய்து கொண்டா?''

''அவன் எப்படிச் செத்தாலும் சரி! அவன் சாக வேண்டும்; அவ்வளவுதான்!'' என்றேன்.

பணியாளருக்குக் கொஞ்சம் எரிச்சல் ஏற்பட்டது. ''எப்படியாவது சாக வேண்டுமென்றால் என்ன அர்த்தம்? உங்கள் விருப்பம் என்ன என்பதை ஏன் தெளிவாகச் சொல்லக் கூடாது? உங்கள் விருப்பத்தின்படி புத்தகம் தேர்ந்தெடுத்துக் கொடுப்பதல்லவா எங்கள் கடமை!''

நான் வேறு வழியின்றி, ''கதாநாயகன் இயற்கையாக மரணம் அடைவதாக முடியும் காதல் நாவல் ஒன்று எடுத்துக் கொடுங்கள்'' என்றேன்.

பணியாளர் என்னை ஒரு பக்கம் அழைத்துக்கொண்டு போய்ச் சொன்னார், ''இதோ பாருங்கள், இங்கே உள்ள எல்லாப் புத்தகங்களிலும் கதாநாயகன் இயற்கையாக இறந்து போகிறான்.''

அந்தப் பகுதியிலிருந்த சில ஊழியர்கள் என்னிடம் வந்தார்கள். எல்லோரும் ஒரே குரலில் கேட்டார்கள். ''உங்களுக்கு எந்த மாதிரிக் கதை வேண்டும்?''

நான் பொறுமையாகப் பதில் சொன்னேன். ''கதாநாயகன் இயற்கையாக மரணமெய்தும் துன்பியல் காதல் நாவல் ஒன்று வேண்டும். நல்ல பெரிய புத்தகமாகப் பார்த்துக் கொடுங்கள், ஏனென்றால்...''

என்னை மேலே பேச விடாமல் ஓர் ஊழியர், பணிவுடன் குறுக்கிட்டார். ''பெரியது, சிறியது என்பதெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இயற்கை மரணமென்றால் அது எப்படி நிகழ வேண்டு மென்பதை முதலில் சொல்லுங்கள். இருதயம் நின்றுபோய்த் திடீர் மரணமா, அல்லது நோய்வாய்ப் பட்டுப் பலகாலம் கிடந்து பிறகு நேரும் மரணமா? திடீர் மரணம் வேண்டுமென்றால் இந்தப் பக்கம் வாருங்கள்!''

இரண்டாவது ஊழியர் சொன்னார்: ''ஆனால் திடீர் மரணக் கதைகள் அவ்வளவு பெரிதாக இருக்காது. நீங்கள் நீண்ட கதையல்லவா கேட்கிறீர்கள்! கதாநாயகன் பல காலம் நோயால் அவஸ்தைப்பட்டுக் கடைசியில் சாவதை வர்ணிக்கும் கதைகள்தான் நீளமாக இருக்கும். ஆகையால் இந்தப் பக்கம் வாருங்கள்.''

அவர் குறிப்பிட்ட பகுதிக்குப் போனேன். அங்கே நிஜமாகவே எல்லாப் புத்தகங்களும் நல்ல கனம்! ஆனால் அங்கும் ஏதோ ஒரு புத்தகத்தை உடனே எடுக்க முடியவில்லை.

ஒருவர் கேட்டார்: ''கதாநாயகனுக்கு டி. பி. வந்தால் தேவலையா?''

ஒன்றும் புரியாமல் நான் திருப்பிக் கேட்டேன். ''அப்படியென்றால்?''

பதில் வந்தது: ''நீங்கள் இதற்கு முன் காதல் நாவலே படித்ததில்லையா? கதாநாயகன் வெகுநாட்கள் நோயில் தவிக்க வேண்டுமென்றால் 'டி. பி.' ரொம்ப சௌகரியம். ஆகையால் அநேக கதைகளில் கதாநாயகன் 'டி. பி.'யால் பிடிக்கப்பட்டுக் கடைசியில் சாகிறான். இந்த அலமாரியில் உள்ள எல்லாப் புத்தகங்களிலும் கதாநாயகனுக்கு 'டி. பி.''

''எனக்கு 'டி. பி.'யில் பிடித்தமில்லை'' என்றேன் நான்.

''அப்படியானால் இந்தப்பக்கம் வாருங்கள். இங்குள்ள நாவல்களில் கதாநாயகனுக்கு டி.பி இல்லை. ஆனால் அவன் நாளுக்கு நாள் வற்றி வற்றிக் கடைசியில் செத்துப் போகிறான். காதலில் தோல்வி, காதலியின் பிரிவாற்



"வீட்டைக் காலி பண்ணுகிறீர்களா? இல்லே; உங்க பேரிலே வழக்கு போடட்டுமா?"

"உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. அந்தக் கேஸை என்னிடம் விடுங்கள். கோர்ட் திரும்ப போக ஆறு மாதமாகும் எனக்கு."

றுமை இவையெல்லாம் அவனை உள்ளூற அரித்து விடுகின்றன. சில சமயம் கதாநாயகன் வெளிப் பார்வைக்கு நன்றாகத்தான் இருக்கிறான். நன்றாகச் சாப்பிட்டுக் கொண்டு நடமாடுகிறான். ஆனால் ஒருவரும் அறியாமல் அவனைத் துக்கம் உள்ளூறச் சாப்பிட்டு விடுகிறது. அதிருக்கட்டும், நீங்கள் படிக்கும்போது உங்களுக்கே தெரியும். கதையை இப்போதே சொல்லி நான் கதையின் சுவாரசியத்தைக் கெடுப்பானேன்? இங்கே வாருங்கள்!"

அவர் என்னை வேறோர் ஆளிடம் ஒப்படைத்தார். அந்த ஆள் நான் அனுபவமில்லாதவன் என்று அறிந்து கொண்டு விட்டார் போலிருக்கிறது. அவர் என்னைக் கேட்டார்: "அவர்கள் உங்களுக்கு எல்லாம் தெளிவாகச் சொல்லி விட்டார்களா?"

"ஆகா! சொல்லி விட்டார்கள்" என்றேன். "இவ்வளவு சொல்லாமலிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும்" என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டேன்.

"சிகிச்சை வேண்டுமா? அல்லது சிகிச்சையில்லாமல் சாவது பிடிக்குமா?"

"எப்படியும் சாவானல்லவா?"

ஊழியர் சற்று வியப்பில் ஆழ்ந்தார். "இந்தப் பகுதியில் உள்ள புத்தகங்களில் கதாநாயகர்கள் எல்லோரும் இறந்து போகிறார்கள் என்ற விஷயத்தை உங்களுக்கு ஒருவரும் சொல்லவில்லையா?"

"சொன்னார்கள், சொன்னார்கள்! நான் அதற்குச் சொல்லவில்லை. கதாநாயகன் சாகத்தானே போகிறான்; சாவதற்கு முன் சிகிச்சை பெற்றுவிட்டுத்தான் சாகட்டுமே!"

"அப்படிச் சொல்லுங்கள்! உங்களுக்குச் சிகிச்சைக்குப் பிறகு சாவு பிடிக்கும்! என்னுடன் வாருங்கள், இந்தப் பக்கம்! அந்தப் பக்கத்தில் எல்லாக் கதைகளிலும் கதாநாயகன் சிகிச்சையின்றி இறக்கிறான்."

"அப்பாடி! கடைசியில் தொல்லையே விட்டது. இப்போது புத்தகத்தைத் தேர்ந்தெடுத்து விடலாம்" என்று நினைத்தேன். ஆனால் புத்தகம் வாங்குவது அவ்வளவு எளிதல்ல என்பது பிறகு புரிந்தது. அந்த ஊழியர் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருந்த புத்தகங்களைக் காண்பித்துச் சொன்னார்: "நீங்கள் இந்தப் புத்தகங்களிலிருந்து உங்களுடைய விருப்பப்படி தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். இவற்றை இரண்டு முக்கிய பாகங்களாகப் பிரித்திருக்கிறோம். வலது பக்கம் உள்ள புத்தகங்களில் கதாநாயகன் தன் ஊரிலேயே இறக்கிறான்; இடதுபுறமுள்ள புத்தகங்களில் வெளியூரில் அல்லது வெளி நாட்டில், அவனது மரணம் நேருகிறது. உங்களுக்கு எந்த வகைக் கதை பிடிக்கும்?"

நான் பதில் பேசாமல் வலது பக்கமுள்ள ஒரு புத்தகத்தை எடுக்க முயன்றேன். ஆனால் அதற்குள் அங்கிருந்த சிப்பந்தி "அடடே! என்ன செய்கிறீர்கள்! இருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே பணிவுடன், ஆனால் உறுதியுடன் என்னைத் தடுத்தார்.

நான் திகைத்து நின்றேன்.

அவர் பேச ஆரம்பித்தார். "கதாநாயகன் இறப்பதற்கு முன் அவன் கதாநாயகியைச் சந்திக்க வேண்டுமா, வேண்டாமா? சொல்லுங்கள்!.... மேல் மூன்று வரிசையிலுள்ள புத்தகங்களில் கதாநாயகன் கதாநாயகி இருக்கும் இடத்திலிருந்து வெகு தூரத்தில் இறந்து போகிறான். கீழ் மூன்று வரிசைகளில் உள்ள புத்தகங்களில் கதாநாயகி கதாநாயகனின் மரணப் படுக்கையில் அவனருகே அமர்ந்திருக்கிறாள். உங்களுக்கு எந்த வகை பிடிக்கும்? அவசரமில்லை, நன்றாக யோசித்துப் பதில் சொல்லுங்கள்"

நான் அதிகம் வார்த்தை வளர்த்த விரும்பவில்லை. "சாகுமுன் கதாநாயகன் கதாநாயகியைச் சந்திக்க வேண்டும்."

"அப்படியா! அது பட்டாசாரியின் இலாகா. ஏ பட்டாசாரி! இங்கே வந்து இவரைக் கொஞ்சம் கவனி!"

பட்டாசாரி என்று அழைக்கப்பட்டவர் என்னிடம் வந்து கேட்டார், "சாவதற்கு முன் கதாநாயகன் நாயகியைச் சந்திக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களா? சரி, ஆனால் இந்த மாதிரிக் கதைகளிலும் மூன்று பிரிவுகள் உள்ளன. முதற் பிரிவில் கதாநாயகி கன்னியாகவே இருக்கிறாள். இரண்டாவது பிரிவில் அவள் கல்யாணமாகிச் சுமங்கலியாக இருக்கிறாள். மூன்றாவதில் அவள் விதவை. இன்னும் இந்த ஒவ்வொரு பிரிவிலும் பல உப பிரிவுகள் உண்டு. அதாவது...."

அவர் மேலும் சொல்லிக் கொண்டு போனது என் காதில் விழவில்லை. என் தலை சுற்ற ஆரம்பித்தது. எப்படியோ சமாளித்துக் கொண்டு வீட்டை நோக்கி ஓடினேன். அதன் பிறகு அந்தக் கடைப் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

காதல் நாவலுக்கும் எனக்கும் வெகு தூரம். போனால் போகிறது. நல்ல வேளை, பைத்தியம் பிடிக்காமல் அந்தக் கடையை விட்டுத் தப்பி வந்தேனே, அதுவே போதும்!

# "அம்மா எனக்காகத் தான் ஸிந்தால் பவுடர் வாங்கினாள்...

ஆனால் பெரும் பங்கு தனக்காகவே உபயோகிக்கிறாள்.

"அதன் சுகமான வாசனையில் சொக்கி விட்டாள் அம்மா. அப்பாவும் இதையே உபயோகிக்கிறார்...அதிலுள்ள ஜி-11 (ஹெக்ஸாக்லோரோபீன்) தம் உடம்பிலே நாற்றமென்பதே எழாமல் பாதுகாக்கிறது என்கிறார் அப்பா. அழகுதான்! எனக்காக வாங்கி இருக்கிறாள்...வேர்க்குரு வராமல் என்னைக் காக்க...எனக்குத் தானே அதிகம் தேவை"

## ஸிந்தால்
## டாய்லெட் பவுடர்

புதுமலர்ச்சி பெற இரு மடங்கு உறுதி முறைகள்—ஜி-11 (ஹெக்ஸாக்லோரோபீன்) அடங்கிய ஸிந்தால் சோப் உபயோகித்தபின் ஸிந்தால் டாய்லெட் பவுடரைத் தூவிக் கொள்ளுங்கள்.




கண்கவரும் 2 வகை டப்பாக்களிலே இன்று கிடைக்கிறது ஸிந்தால் டாய்லெட் பவுடர்.




ஜி-11 என்பது, எல். கிவோடன் ஏ ஜி சுவிஸ் அவர்களின் ட்ரேட் மார்க்.





# மறதிக்காரர்களுக்கு மட்டும்!

எஸ், சுந்தரம்

நீங்கள் இந்தக் கட்டுரையைப் படிப்பதிலிருந்தே உங்கள் ஞாபக சக்தி திருப்திகரமாக இல்லை என்பது தெரிகிறது.

பெயர் பெற்ற ஆங்கிலக் கல்விமானான மெக்காலே பிரம்மாண்டமான புத்தகமான 'இழந்த சுவர்க்க'த்தைச் சிறிதும் தவறாமல் முழுதும் சொல்லி முடித்தாராம்.

நெப்போலியன் தன் படையிலிருந்த ஒவ்வொரு வீரனின் பெயரையும் நினைவு வைத்துக் கொண்டிருந்தானும்.

ஹார்வர்ட் பல்கலைக் கழகத்தின் தலைவர் சார்லஸ் எலியட் அங்கு நாற்பது ஆண்டுகளில் படித்த அத்தனை மாணவர்களின் பெயர்களையும் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தார் !

இதை யெல்லாம் கேட்டவுடன் உங்களுக்கு இருந்த கொஞ்சநஞ்ச நம்பிக்கையும் போய்விட்டதா? கவலைப்படாதீர்கள்.... மெக்காலே முதலியவர்கள் இயற்கையின் வரப்பிரசாதம் பெற்றவர்கள். அனைவரும் மெக்காலேக்களாக ஆக முடியாது. ஞாபகசக்தி என்பது பயிற்சியைப் பொறுத்தே வளர்ச்சியடைகிறது என்பது உண்மையானாலும்கூட அந்த வளர்ச்சிக்கு ஒவ்வொரு நபருக்கும் ஓர் உச்சவரம்பு உண்டு.

ஆனால் ஒரு விஷயம். ''என்னையா ஞாபகம் வைத்துக் கொள்ளச் சொல்கிறீர்கள்? எனக்கு நினைவிருக்காது ! மறதி அதிகமாயிற்றே?'' என்று பேசுவதை இன்று முதல் மூட்டை கட்டி வைத்து விடுங்கள். மறதியைத் தொலைக்க முதல் வழி, ''எனக்கு மறதி இல்லை'' என்ற நம்பிக்கையின் தோற்றமே என்பது அறிஞர்கள் கருத்து.

ஒரு முறை ஐக்கிய நாட்டுச் சபையில் ஒரு விசித்திரமான கஷ்டம் ஏற்பட்டது. ஒரு முக்கிய தஸ்தாவேஜியை அல்பேனிய மொழியில் பெயர்த்து எழுதவேண்டியிருந்தது. ஆனால் அல்பேனிய மொழி தெரிந்த ஆள் அகப்படவேயில்லை. 'இதேதடா தர்மசங்கடமாகப் போய் விட்டதே!' என்று அதிகாரிகள் தலையைச் சொறிந்து கொண்டார்கள். கடைசியில் ஒரு பிரஞ்சு மொழிபெயர்ப்பாளர் நான்கே நாட்களில் தாம் அந்த வேலையைச் செய்து தருவதாகச் சொன்னாராம். அனைவரும் வியப்பில் மூழ்குமாறு அவர் நான்கு நாட்களில் அல்பேனிய மொழியைக் கற்றுக் கொண்டு சிறிய தவறுகூட இல்லாமல் அந்த மொழிபெயர்ப்பை முடித்துக் கொடுத்தார் ! காரணம் அதற்கு முன்பே அவருக்கு இருபது மொழிகள் தெரியுமாம். அதாவது மொழிகளைக் கற்றுக் கொள்ளும் வழி அவருக்கு அத்துபடி. அதைப் போலவே தகவல்களை நினைவில் வைத்துக் கொள்வதற்கான சில வழிகள் இருக்கின்றன. அவற்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

மறதி என்பதற்கு உங்கள் மூளையிடம் அளவுக்கு அதிகமாக எதிர்பார்க்கிறீர்கள் என்று பொருள் கொள்ளலாம்..அதாவது எண்ணிக்கையறிதல், தரம் பிரித்தல், கற்பனையில்காணல் போன்ற சக்திகளை நீங்கள் கையாளவில்லை எனலாம். அல்லது உங்களுக்கு அக்கறை இல்லாத விஷயங்களை ஞாபகம் வைத்துக் கொள்ள நீங்கள் முயலுகிறீர்கள். அல்லது நினைவில் இருக்க வேண்டிய விஷயங்களில் நீங்கள் போதிய கவனம் செலுத்தவில்லை. இவற்றில் ஏதாவது ஒரு காரணமாகத்தான் இருக்க வேண்டும்.

தேர்வுக்கு முதல் நாள் இரவு மையைக் குடித்துக் கண்ணைக் கெடுத்துக் கொண்டு தூக்கத்தை விரட்டி உருப் போட்டாலும் மறு நாளில் கேள்விக்கு விடை தெரியாமல் மாணவர்கள் ஏன் அவதிப்படுகிறார்கள் ? சினிமா பற்றிய செய்திகளை, கிரிக்கெட் பற்றிய தகவல்களை எவ்வித பிரயாசையும் இல்லாமல் அலட்சியமாக அவர்களால் சொல்ல முடிகிறதே, அது எப்படி ? உண்மையிலேயே ஒன்று உங்களுக்கு இன்பம் தருவதாக இருந்தால்தான் அல்லது உங்கள் கவனத்தைக் கவர்ந்தால்தான் அது நினைவிருக்கும்.

மூளை ஒரு காமிராவைப் போன்றது என்பார்கள். இரண்டு விஷயங்களை ஒரே



சமயத்தில் ஒரேவிதமாக அது பதிவு செய்வதில்லை. எதிரேயிருக்கும் மலர்க் கொத்தைப் படம் பிடிக்கும்போது அதன்பின் வெகு தூரத்தில் இருக்கும் கட்டடமும் அதே தெளிவுடன் எப்படி விழ முடியும்?

ஞாபக மறதிப் பேராசிரியர்களின் கதையும் இப்படித்தான். கடிகாரத்தின் சாவிக்குப் பதில் பூனையின் வாலைப் பிடித்து அவர் திருகினால் அவர் மூளை வேறு ஆராய்ச்சி எதிலோ ஈடுபட்டிருப்பதாகப் பொருள்.

ஐன்ஸ்டைன் ஒரு விசேஷ விருந்தின் முக்கிய விருந்தினராக நியூயார்க் நகரத்துக்கு வந்து சேர்ந்தார். குறிப்பிட்ட ஹோட்டலுக்குத் தாம் சற்று முன்னதாகவே வந்துவிட்டதாக அறிந்ததும், வெளியே உலாவிவிட்டு நேரத்துக்குத் திரும்பிவிடலாம் என்று கிளம்பினார். திடீரென்று வழியில் தாம் விருந்துக்குப் போக வேண்டிய உணவு விடுதியின் பெயரை மறந்துவிட்டார்! ஏனென்றால் அதுவரை பௌதிகத்தில் சிக்கலான பிரச்னைகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். நல்ல வேளை! போலீஸ்காரர்கள் தொலைபேசி மூலம் நியூயார்க்கின் எல்லா ஹோட்டல்களிலும் விசாரித்துக் கடைசியில் ஐன்ஸ்டைனின் ஹோட்டலைக் கண்டு பிடித்துச் சொன்னார்கள். இதில் ஒரு வேடிக்கை! இவ்வளவு நடக்கும் வரையிலும்



ஐன்ஸ்டைன் தம்முடைய ஹோட்டல் இருந்த தெருவிலேயே குறுக்கும் நெடுக்குமாக அலைந்திருக்கிறார்!

நினைவு வைத்துக் கொள்ளும்படி மூளை விழிப்பாக இருந்தாலன்றிச் செய்திகள் அதில் பதிவாகாது என்பதும் உண்மை. போலீஸ்காரர்கள் பயிற்சி விடுதி ஒன்றில் வகுப்பு நடந்து கொண்டிருந்தது. முன்னேற்பாட்டின்படி திடீரென்று இரண்டு பேர் வகுப்புக்குள் நுழைந்து ஒருவரையொருவர் அடித்துக் கொண்டார்கள்; பிரமாதமான சண்டை! பிறகு இருவரும் ஓடிப் போய்விட்டார்கள். சண்டை நடந்த நேரம் மொத்தம் ஆறு விநாடிகள்! வகுப்பில் இருந்த ஆசிரியர், உடனே மாணவர்களை நடந்த நிகழ்ச்சியைப் பற்றிய விவரங்களை எழுதித் தரச் சொன்னார். ஒருவர்கூட ஒழுங்காக எழுதவில்லையாம்! காரணம் அவர்கள் இதை எதிர்பார்க்காதது தான்.

நம்மைப் பற்றிய செய்தியாக இருந்தால் அது நிச்சயம் நமக்கு நினைவிருக்கும். அதாவது அதில் நாம் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும்.

டிபோட்டில் நகரத்தில் ஒரு வியாபாரச் சந்தையை ஆரம்பித்து வைக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவர் சென்றிருந்தார். அங்கு மோர்ஸ் ஒலிப்பான் முறை (தற்காலத் தந்தி முறை)யைப் பற்றிப் பேச்சு வந்தது. ''ஓ, அதற்கென்ன? நாற்பது வருஷங்களுக்கு முன்பு நான் படித்தது. இப்பொழுதும் நினைவிருக்கிறது பாருங்கள்!'' என்று சொல்லிக் கொண்டே மேடையில் ஒரு வார்த்தையை மோர்ஸ் முறையில் அடித்தார் ஐஸன்ஹோவர். அந்த வார்த்தை எது தெரியுமோ? அது அவருடைய பெயர்தான்!

''மக்கள் அவதிப்படுவது அறியாமையால் அல்ல. தேவையில்லாத, பொய்யான



அல்லது தவறான தகவல்களை நினைவில் கொள்வதால்தான்'' என்று மார்க் ட்வெய்ன் ஒரு முறை எழுதினார். ஆகவே, இது விஷயத்தில் சிறு வயது முதலே சரியான அடிப்படையில் பயிற்சி பெற வேண்டும். ஆரம்பம் கோளாறானால் முற்றும் கோளாறாகத்தான் போகும்.

சொற்களை மூளையில் இருத்துவதைவிடச் சில இயந்திரப் பயிற்சிகளை எளிதாக நினைவு வைத்துக் கொள்ள முடிகிறது. சைக்கிள் விடுதல், பியானோ வாசித்தல், டைப் அடித்தல் இவை நன்றாகப் பழக்கத்துக்கு வந்த பிறகு அவ்வளவாக மறப்பதில்லை.

வயதேறினால் மறதியும் அதிகமாகிறது என்றாலும் இதோ சில கிழங்களின் சாதனைகள் உங்களுக்குத் தைரியமூட்டும்.

எடிஸனின் சிறந்த கண்டுபிடிப்புகள் சில அவரது எழுபதாவது வயதில் நிகழ்ந்தன.

கதே தமது 'பாஸ்ட்' என்ற நூலின் இரண்டாம் பகுதியை எழுதியது எண்பது வயதுக்கு மேல்தான்!

விக்டர் ஹியூகோ எண்பத்து மூன்று வயதில் களி துள்ளும் கவிதைகளை எழுதினார்.

எண்பத்தைந்து வயதில் டிடியன் பிரசித்தி பெற்ற ஓவியமொன்றைத் தீட்டினார்!

ஹாயி என்ற அமெரிக்க மருத்துவர் தொண்ணூற்றொன்பது வயது வரை வேலையிலிருந்தார்! சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்.

தொண்ணூற்று நாலு வயதில் இறந்த பெர்னார்ட் ஷாவுக்குச் சாகும் வரையில் அசாத்திய ஞாபக சக்தி இருந்ததாம்!

# முள் எடுக்க முள்



இரவு பத்து மணி. சாயங்காலம் நான்கு மணிக்குத் தொடங்கின கோடை மழை தானும் சோடையில்லை என்று கொட்டிவிட்டுச் சற்றே ஓய்ந்திருந்தது. தெரு தெரியாது மழைத்தண்ணீர் நிரம்பி ஓடிக் கொண்டிருந்தது.

அந்த நேரத்தில் டாக்ஸி ஒன்று அடையாற்றின் பங்களா ஒன்றின் வாசலில் வந்து நின்றது. அதனுள்ளிருந்து அவசரம் அவசரமாகக் கையில் ஒரு 'சூட்கேஸ்'டன் இறங்கிச் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுத் துரிதமாக, தன் பங்களாவின் வாசல் இரும்புக் கிராதியைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார் பிரபல 'நாயுடு பேக்கரி'யின் சொந்தக்காரரான பெருமாள் நாயுடு. பங்களாவின் வெளிக் கதவில் பூட்டியிருந்த பூட்டைத் திறந்து உள்ளே நுழைந்து, நிதானமாக வாசற்கதவின் எல்லா உள் தாழ்ப்பாள்களையும் போட்டுவிட்டு நேராக மாடிக்குச் சென்று தம் பிரத்தியேக அறைக்குள் நுழைந்தார் நாயுடு. தம் கையிலிருந்த தோல் பெட்டியை அங்கிருந்த மேசை மேல் வைத்துவிட்டு அறையின் மூலையிலிருந்த பானையிலிருந்து ஒரு தம்ளர் தண்ணீர் அருந்திவிட்டு, 'உறையூரா'வைப் பதம் பார்த்து உதட்டில் பொருத்தினார். சுருட்டை உறிஞ்சிக் கொண்டே மேசையின் மீதிருந்த தோல் பெட்டியைத் திறந்தார்.

அப்போது திடீரென்று அவர் மேலேயே இறங்குவது போல் பெருத்த இடிச் சத்தம் கேட்டது. பயந்து போன நாயுடு திறந்த பெட்டியை அப்படியே மூடி வைத்துவிட்டுப் பங்களாவின் வெளிப்புறப் பால்கனிக்கு வந்தார். வானத்தைப் பார்த்தார். மின்னல் வெட்டி மறைந்து கண்ணைப் பறித்தது.

மேகங்கள் கருங்குவியலாக மண்டியிருந்தன. உடனே தெருவைப் பார்த்தார். மழை நீர் சற்று வடிந்திருந்தது. ஆனாலும் தெருவில் கணிசமாக ஓடிக் கொண்டிருந்தது தண்ணீர். மெர்க்குரி விளக்கு வெளிச்சத்தில் மழைத் தண்ணீர் உருக்கிக் கொட்டின வெள்ளி ரசமாய்த் தெரிந்தது. அதை ரசிக்கத் திராணி இல்லாதவர் போல் முகத்தைத் திருப்பித் தம் வீட்டைச் சுற்றியிருந்த தோட்டத்தை நோட்டம் பார்த்தார். எல்லாச் செடிகளும் பருவம் எய்திய மங்கை போல் செழித்து நின்றன. மலர்கள் மேல் துளிர்த்து நின்ற மழைத் திவலைகள் பாதரசமாய் ஜொலித்தன. மழை எங்கே எங்கே எனக் காத்திருந்தவைபோல் ஆங்காங்கே மண்டூகங்கள் மூளைத்து மற்றபடி அமைதியாய் இருந்த அந்தப் பிரதேசத்தில் நாராசத்தை உண்டாக்கின.

சுருட்டை இழுத்து உறிஞ்சி அதைக் கையில் எடுத்து அதன் ஒளியில் கண்டிருந்த சாம்பலை வெளியே தெறிக்கத் தட்டிவிட்டு உள்ளே வந்தார். வந்தவர் மேசை மீதிருந்த பெட்டியைத் திறந்து அதனுள்ளிருந்ததை எடுத்து இரும்பு அலமாரியினுள் வைக்க விழைந்தார். அச்சமயம் எதிர்பாராதவாறு தெருவில் ' விசில் ' சப்தம் கேட்டது. தொடர்ந்து, 'பிடி, விடாதே!' என்ற கூச்சலும் கேட்டது. நாயுடு திடுக்கிட்டார்! உடனே அறையின் விளக்கை அணைத்து விட்டுப் பால்கனிக்கு ஓடி வந்தார். ஓர் உருவம் அவர் தோட்டத்துக்குள் புகுந்து, ஓடி ஒளிந்து கொள்ள இடம் தேடிக் கொண்டிருந்தது.

மறுபடியும் விசில் சப்தம் கேட்டது. சட்டென்று, வாயிலிருக்கும் சுருட்டின் தணல் நுனி, தாம் நின்று கவனிப்பதைக் காட்டிக் கொடுத்துவிடக் கூடாதே என்ற விசாரத்



துடன் கருட்டை அவசரமாக வாயிலிருந்து பிடுங்கி எடுத்துவிட்டுத் தெருவைப் பார்த்தார். இரு போலீஸ்காரர்கள் குறுக்கும்நெடுக்குமாய் ஓடினார்கள். நாயுடுவுக்குப் புரிந்து விட்டது. உடனே தம் தோட்டத்துக்குள் நுழைந்து ஓடின உருவத்தைத் தேடினார். தோட்டத்தில் அதைக் காணோம். பால்கனியின் கீழே பார்வையைத் திருப்பினார். அந்த உருவம், மழை நீர் வடிவதற்காகப் பொருத்தப்பட்டிருந்த இரும்புக் குழாயைப் பிடித்துக் கொண்டு மாடி நோக்கி ஏறிக் கொண்டிருந்தது. பெருமாள் நாயுடு சடாரென்று தம் அறைக்குள் ஓடி ஒளிந்து கொண்டார். 'அந்த உருவம் எப்படியும் பால்கனிக்குள்தான் வரவேண்டும். அப்போது 'கப்'பென்று பிடித்துவிடலாம்' என்று தீர்மானித்தார். நாயுடு எதிர்பார்த்தபடியே குழாய் வழியாக மேலே ஏறி வந்த உருவம் பால்கனிக்குள் குதித்தது. காவலாய்க் காத்திருந்த பெருமாள் நாயுடு அந்த உருவத்தின் மேல் பாய்ந்து பிடித்தார். சற்றும் இதை எதிர்பாராத அந்த உருவம், ''ஐயா, என்னைக் காட்டிக் கொடுத்து விடாதீங்க. நான் ஏழை'' என்று கெஞ்சியது.

தம் அறைக்குள் இழுத்துவந்து விளக்கைப் போட்டு அதன் வெளிச்சத்தில் உருவத்தை ஒரு முறை உற்றுப் பார்த்தார்.

முகத்தைப் பார்த்து 'ஏழை பாழை' என்று தெரிந்துகொள்ள முடியாத உருவம். நாலைந்து நாட்கள் முகச் சவரம் செய்துகொள்ளாத முகத்தில், காந்தக் [கல்லில் ஒட்டிக் கொண்ட இரும்புத் தூள்கள் போல் கம்பிகள் காணப்பட்டன. ஏழைக்கு அறிகுறியாக இடுங்கிய கண்களோ, வற்றின வதனமோ, உலர்ந்த உதடுகளோ, ஒட்டிப் போன உடம்போ இல்லை. அணிந்திருந்த சட்டையில் அழுக்குக்குமேல் கிழிசல்கள் நிறைந்திருந்தன. ஆனால் ஒரு கிழிசலாவது தைக்க முயன்றதாகத் தெரியவில்லை. கழுத்துப் பட்டையை ஒரு கலர் சில்க் கைக்குட்டை அலங்கரித்தது.

மார்பு சட்டைப் பிடியைத் தளர்த்தி விட்டு, ''என்னடா, பண்ணினே....?'' என்று அதட்டிக் கேட்டார் நாயுடு.

''ஒண்ணும் பண்ணலீங்க......!''

''ஒண்ணும் பண்ணலையா இரண்டு போலீஸ்காரங்க துரத்திகிட்டு வராங்க..?''

''இல்லீங்க........ அது வந்து....''

''என்னடா, இல்லீங்க....!''

''சத்தியமாச் சொல்றேங்க. நான் ஒண்ணும் பண்ணலீங்க. நாலு வீடு தள்ளி ஒரு வீட்டுக்குள் கொல்லைப் பக்கம் வழியா நுழைஞ்சேன். ஒண்ணும் கிடைக்கலே. வெந்நீர்த் தவலை தான் இருந்திச்சு. சரி, அதையாவது எடுத்துக்கிடலாம்னு தூக்கினேன். அதுக்குள்ளாற பூனை யொண்ணு இருந்திச்சு போல.... நான் கவனிக்கலே. தவலையைத் தூக்கினதும் அது மேலே பாய்ஞ்சு வெளியே ஓடிப் போச்சு. நான் ஏதோ என்ன

# சங்கரசப்பு

மோன்னு உளறிப் போய்த் தவலையைத் தடாலென்று கீழே போட்டுட்டேன். அந்தச் சத்தம் கேட்டு வீட்டுக்கார அம்மா சத்தம் போட்டாங்க. நான் தப்பிச்சேன், பிழைச்சேன்னு ஓடியாந்தேன். வெளியே வந்தா இரண்டு நெருப்புக் குச்சிக்காரங்க லோந்து சுத்திக்கினு வந்துகிட்டிருந்தாங்க. அவங்க என்னைப் பார்த்துட்டாங்க. நான் டபாய்ச்சுக்கினு இந்தத் தோட்டத்துக்குள்ளே பூந்து ஒளிஞ்சுக்கிட்டேன். வீட்டுக்குள்ளே வெளிச்சம் இல்லாததைப் பார்த்ததும் மாடிக்கு ஓடி வந்தேன். அவ்வளவுதாங்க. என்னை நம்புங்க...''

வாசலில் பெரிய இரும்புக் கிராதி நகரும் சத்தம் கேட்டது. உடனே எட்டிப் பார்த்த பெருமாள் நாயுடு இரு போலீஸ்காரர்கள் தம் வீட்டை நோக்கி வருவதைப் பார்த்தார்.

''ஐயோ, போலீஸ்காரங்க! ஐயா, என்னைக் காப்பாத்துங்க... இந்தத் தொழில் எனக்குத் தெரியாதுங்க. நான் புச்சு. வயித்துக் கொடுமைதான் வம்பிலே மாட்டி விட்டுடுச்சு. வயசான கிழவி. சம்சாரம் புள்ளைத்தாச்சி. நாலஞ்சு கொயிந்தைங்க. தங்கச்சி வேறே தாலியறுத்து வீட்டுக்கு வந்திருக்கு. வேலை கிடைக்கலே. என் வவுறு காய்ஞ்சாலும் என்னை நம்பியிருக்கிற வயிறுங்களைக் கழுவத்தானே வேணும்! அதனாலேதான் இந்தக் காரியத்துக்குத் துணிஞ்சேன்.''

''டேய், வாயை மூடு. வாயிலே போட்டேனுத் தெரியுமா? செய்த திருட்டுக் காரியத்துக்குச் சமாதானம் சொல்றியா? உங்க மாதிரி ஆளுங்களுக்குத்தான் எப்போதும் வயதான தாய், நிறைமாத மனைவி, கைம்பெண் தங்கச்சி, நாலைந்து குழந்தைகள் எல்லாம் இருக்குமே! பொய் சொல்லாதே! சொன்னே, போலீஸ்காரங்க கையிலே பிடித்துக் கொடுத்து விடுவேன்.'' அவர் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் கீழே வீட்டின் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது.

''ஐயா, தயவு பண்ணுங்க.....''

''நீ சொன்னதெல்லாம் பொய்தானே! வயசான கிழவி, நாலைந்து குழந்தைகள், தாலியறுந்த தங்கச்சி.... எல்லாம் என் மனசுலே இரக்கம் ஏற்படத்தானே?''

''ஆமாங்க.....''

''இந்தத் தொழில் பழசு, உனக்குப் பழக்கப்பட்டதுதானே?''

அவன் மருண்டு நின்றான்.

''என்னடா....?''

தன் பதிலில் தன் வருங்காலமே அடங்கியிருப்பதாகக் கருதி, ''ஆமாங்க....!'' என்றான்.

''டேய், இந்தப் பெருமாள் நாயுடுகிட்டேயே அளக்கத் துணிஞ்சயே! மழை வடிகால் வழியே நீ மாடிக்குக் குரங்கு மாதிரி ஏறி வந்த வேகம், வாகவமே நீ இந்தத் தொழிலில் ஊறிப் போனவன்னு தம்பட்டம் அடிக்குதே......!''

''என்ன பண்றதுங்க.... வயித்துக் கொடுமைங்க!''

''டேய், மறுபடியும் வயித்தைக் காட்டிப் பேசாதே. வயித்துலேயே போடுவேன்.''

கீழே தடதட வென்று பலமாகக் கதவு தட்டப்பட்டது.

''எலே, அந்த உள்ளுக்குப் போடா. அந்த பீரோ பக்கத்துலே ஒளிஞ்சுக்க. இதோ, வர்றேன்.''

பெருமாள் நாயுடு ஒரு கனைப்பு கனைத்துக் கொண்டு மாடிப்படி வழி இறங்கிக் கீழே போய் வாசற்கதவைத் திறந்தார்.

''மன்னிக்க வேண்டும், இந்த ராத்திரியில் உங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதைப் பற்றி. தொழில் முறைக் கட்டாயம்தான்..'' என்றார் ஒரு போலீஸ்காரர்.

''என்ன விஷயம்....?'' என்று எப்போதுமே விஷயத்துக்கு விரையும் பெருமாள் நாயுடு கேட்டார்.

''ஒரு திருடனுங்க..... பக்கத்துலே, ஒரு வீட்டுலே புகுந்து எதையோ லபக்கிட்டு ஓடினுங்க. நாங்க அவனைப் பார்த்துவிட்டுத் துரத்தினோம். எங்கேயோ மறைஞ்சுட்டான். இந்த வீட்டுத் தோட்டத்துக்குள்ளே புகுந்த மாதிரி பட்டது. மாடியில் வேறு 'டக்' கென்று வெளிச்சம் வந்ததால் பால்கனி வழியே மேலே ஏறியிருப்பானோன்னு எங்களுக்குச் சந்தேகம்.''

''என் வீட்டு மாடிப் பால்கனி வழியாகவா? இல்லியே.... நான் மாடியில்தான் இருந்தேன், இத்தனை நேரம்?''

''நீங்கள் எவ்வளவு நேரமா வீட்டுக்குள்ளாற இருக்கீங்க....?''

''ஒரு மணிக்கு மேலேயே....!''

''ஓஹோ.... அப்படியா? அப்படியென்றால் இருக்காது. திருடன் இப்போதுதான் பத்து நிமிடங்களுக்கு முன்பு ஓடி வந்தான்.''

''இல்லே.... உங்களுக்குச் சந்தேகம் இருந்தால் மாடிக்கு வந்து பாருங்கள். எனக்கு ஆட்சேபம் இடையாது.''

''சே, சே! திருடன் இருந்தால் நீங்களே சொல்லிவிட மாட்டீர்களா? நாங்கள் வருகிறோம். மன்னிக்க வேண்டும், சிரமத்துக்கு. வணக்கம்.''

''ஹூம்.... உங்க 'ட்யூட்டி'யை நீங்க செய்யுங்க. தவிர இப்போ திருட்டுப் புரட்டெல்லாம் கூடிப் போச்சு..... வணக்கம்'' என்று கூறிவிட்டு வாசற்கதவைத் தாளிட்டு விட்டு அவசரமாக மாடிக்கு வந்தார்.

''டேய், வெளியே வாடா!''

''ஐயா, பெருமாள் நாயுடு உங்களுக்கு ரொம்ப நன்றியுங்க.''

''பெருமாள் நாயுடுவா! உனக்கு எப்படியடா, என் பெயர் தெரியும்?''

''நீங்கள்தானே, சற்று முன்பு கூறினீர்கள்!''

''அவ்வளவுதானே!''

''இல்லே.... அதற்கு மேலும் உண்டு. நான் அந்த அறைக்குள் ஒளிந்து கொண்டிருந்த போது, மேசை மீதிருந்த தோல் பெட்டியைப் பார்த்தேன். அந்தப் பெட்டியின் மேல் 'பெருமாள் நாயுடு' என்ற வாசகத்தைப் பார்த்தேன்.''

திருடனின் பேச்சு கொச்சையிலிருந்து இலக்கணமாய் மாறிவிட்டதை உணர்ந்த நாயுடு திடுக்கிட்டார்.

''டேய், எதுக்குடா அந்தப் பெட்டியைப் பார்த்தே?''

''பெட்டியை வெறுமனே பார்த்தது மாத்திரமில்லே. பெட்டியை நன்றாகத் திறந்தும் பார்த்தேன்.''

''என்னது......?'' என்று கேட்டுக் கொண்டே அவன் மேல் பாய்ந்தார்.

அவன் நகர்ந்து அறையிலிருந்த சோபாவின் மறுபக்கம் போய் நின்று கொண்டான்.

''பெருமாள் நாயுடு, நான் இங்கே வந்ததே உங்க பெட்டியைத் திறந்து பார்க்கத்தானே!''

''டேய், திருட்டு நாயே! பெட்டியைத் திறந்தாயா? நன்றி கெட்ட பயலே! தேனே

யாராவது தடவிக் கொடுப்பாங்களா ? உன்னைப் போலீஸ்காரங்கிட்டே ஒப்படைக்காமல் காப்பாற்றினேனே, அதற்குப் பிரதிபலனா ?''

''நாயுடுகாரு, என்னைப் பயமுறுத்தாதீர். உம்முடைய சுயநலம்தான் என்னைக் காட்டிக் கொடுக்கவில்லை !''

''எலே, சுயநலமா? இரு. இதோ கூப்பிட்டு உன்னை ஒப்படைக்கிறேன்.''

''கூப்பிடுங்க. பலமா சத்தம் போட்டுக் கூப்பிடுங்க. உங்க பெட்டியிலே இருக்கிறதை நானே அவங்களுக்குக் காண்பிக்கிறேன்....''

''என்னது....?''

''ஆமாம். இதோ பாருங்கள். இதைப் போல் ஆயிரக்கணக்கில் உங்கள் பெட்டியில் உறங்குகின்றனவே, அவை யாவற்றையும் அவர்களிடம் ஒப்படைக்கிறேன்....'' என்று கூறிக் கொண்டே தன் இடுப்பில் மறைத்து வைத்திருந்த நூறு ரூபாய்க் கத்தை ஒன்றைக் காண்பித்தான்.

''என்ன.....?'' நாயுடுவுக்குத் தேள் கொட்டின மாதிரி ஆகி விட்டது. ஆனாலும் அவர் நிலைமையைச் சமாளித்துக் கொள்ளத் தயங்கவில்லை.

''ஏய், என் வீட்டுக்குள் திருட்டுத்தனமாய் நுழைந்துவிட்டு எங்கிருந்தோ கிளப்பிக் கொண்டு வந்த நூறு ரூபாய் நோட்டுக்களைக் காண்பித்து என்னைப் பயமுறுத்துகிறாயா? இரு, இதோ நானே போலீசுக்குப் போன் செய்து அவர்களை இங்கு தருவிக்கிறேன்'' என்று சொல்லிய வண்ணம் டெலிபோனை அணுகினார்.

''போலீசுக்குப் போன் செய்கிறீர்களா ? ஊஹூம், செய்யுங்கள்! நண்டு தன் கழுத்தையே கவ்வின மாதிரி நீங்களே உங்களுக்கு ஆபத்தைத் தேடிக் கொள்கிறீர்கள் !

''இதைத்தான் நான் கொண்டு வந்தேன் என்றால் அந்தப் பெட்டியில், பெட்டி கொள்ளாது முடங்கிக் கிடக்கிறதே. நோட்டுக் கத்தைகள், அதை யார் கொணர்ந்தார்கள்! பெருமாள் நாயுடு, நான் இந்தத் தொழிலுக்குப் புதிதில்லை. போலீஸ் படையே என்னை அறியும். கூப்பிடுங்கள். போனை வைத்து விடாதீர்கள். பல்லாவரத்தில் ரொட்டிக் கிடங்கு என்று பெயருக்கு ஒரு கடையை நடத்திக் கிடங்குக்குள் கள்ள நோட்டு அச்சடிப்பது எனக்குத் தெரியாதென்று நினைக்காதீர். போலீஸ் வந்தால் இந்தக் கள்ள நோட்டுக்களை அவர்களிடம் சமர்ப்பித்து எல்லாச் சங்கதியையும் சொல்லி விடுவேன். என் சக தொழிலாளியான உம்மைப் பற்றி எனக்குத் தெரியாதா ?''

நாயுடு வியர்த்து விதிர் விதிர்த்தார். தொண்டையை என்னவோ செய்தது. பாம்பின் முன்பு நடுங்கும் தேரை மாதிரி தவித்தார்.

''நீ யார்....? உனக்கு என்னிடம் வேண்டியது என்ன? பணம் என்றால் எவ்வளவு என்று சொல்லிவிடு'' என்று பறந்தார் நாயுடு.

''இரண்டாயிரம் ரூபாய். ஆனால் கள்ள நோட்டல்ல. நல்ல நோட்டு.''

''இரண்டாயிரமா? அவ்வளவு பணம் என்னிடம் இப்போது இல்லை. 'செக்' தரட்டுமா? இரு, 'செக்' வேண்டாம். பணம் இருக்கிறதா என்று பார்க்கிறேன்....'' என்று உள்ளே போய் இரும்பு அலமாரியைத் திறந்தார். திறந்த அவர் முகத்தில் திருப்தி காணவில்லை.

''என்ன, கைத் துப்பாக்கியைக் காணவில்லையா ? பாவம், அதை முன்பே எடுத்துப் பத்திரப்படுத்தி விட்டேன். இதோ, பாரும். எனக்கு முன் யோசனை கொஞ்சம் உண்டு. நீர் கீழே இறங்கி என் ஆட்களுக்குப் பதில் சொல்லப் போனபோது அதைப் பீரோவிலிருந்து எடுத்துக் கொண்டு விட்டேன். வீண் கலாட்டா எதுவும் செய்யாமல் என்னோடு ஸ்டேஷனுக்கு வாரும்.''

''என்ன.... நீ.... நீர் யார்?'' என்றார் கரகரத்த குரலில் பெருமாள் நாயுடு.

''நீர் பெருமாள் அல்லவா? உம்மைக் கையும் களவுமாகப் பிடிக்க வந்த பெத்த பெருமாள், சி. ஐ. டி. சுவாமி! ஊஹூம் ! அந்தப் பெட்டியை எடுத்துக் கொண்டு சட்டென்று கிளம்பும். கீழே உமக்காக மழையைப் பொருட்படுத்தாமல் காத்திருக்கிறார்கள், என் உதவிக்காக வந்த ஆட்கள். அவர்களுக்கு ஜலதோஷம் பிடிப்பதற்குமுன் கீழே போக வேண்டும்.''

''சி. ஐ. டி. சுவாமியா? சார், உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். நீங்கள் யமனையே பிடித்துக் கொண்டு வந்துவிடுவீர்கள் என்று சொல்வார்கள். நான் நேரில் பார்த்ததில்லை. ஆனால் இன்று பார்த்தேன்'' என்று தம் தோல்வியிலும் அவர் வெற்றியைப் பாராட்டிவிட்டு இன்ஸ்பெக்டர் சுவாமி தொடர முன்னால் நடந்தார் நாயுடு.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மின்சார இயல்பு பற்றிய ஆரம்ப சோதனைகளை நடத்தி வெற்றி கண்ட விஞ்ஞானி 'ஃபாரடே'யிடம் இங்கிலாந்து அரசாங்கத்தைச் சேர்ந்த அதிகாரி ஒருவர், 'உங்களுடைய ஆராய்ச்சியினால் என்ன பயன்?' என்று வினவினார். உடனே ஃபாரடே, ''மின்சாரத்தைப் பற்றி இப்பொழுது ஒன்றும் சொல்வதற்கு இல்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்; ஒருநாள் உமது 'வாரிசுகள்' அதன் மீது வரி விதிப்பார்கள்'' என்று பட்டென்று பதில் கூறினார்.

- வி. குமரேசன்




☐ முதல் பரிசு நாவல்

☐ பயிர் செழிக்க

☐ கோடி அர்ச்சனை

✽ 'முள்ளும் மலரும்' முடிவு உள்ளத்தைத் தொட்டது. மங்கா ஓர் உன்னதப் படைப்பு. கதையில் எண்ணற்ற உணர்ச்சி மிக்க சம்பவங்களை அள்ளிக் கொடுத்த ஆசிரியர் உமா சந்திரன் கடைசியாக மங்காவின் மகன் கண்ணன் என்ன ஆனான் என்று எழுதாதது ஏனோ தெரியவில்லை.

6—4—67 ராஜலக்ஷ்மி
சென்னை—1

✽ முதற் பரிசு பெற்ற இக் கதையில் காளியண்ணனின் படைப்பு வெகு அருமை. கதை சொற்களில் அடங்காத பெருமையைப் பெற்று விட்டது. 'கல்கி' முதற் பரிசு கொடுத்த கதையாயிற்றே!

சென்னை—2
1—4—67 எல். கிருஷ்ணசாமி

✽ மங்காவின் உள்ளம் மங்காத செல்வமாகிவிட்டதை நன்கு விளக்கி யுள்ளார் உமாசந்திரன்.

சென்னை—1
7—4—67 பொன்னை மணி பி.ஏ.,பி.எல்.

✽ கதை சரியான முறையில் முடிக்கப்பெறவில்லை. தங்கையின் மீது இணையில்லாப் பாசம் வைத்திருக்கும் அண்ணன் ஒருவன் செய்யும் காரியமாக இல்லை, காளியண்ணனின் கொடுஞ் செயல்.

சென்னை - 3
6 - 4 - 67 வி. பி. ராஜு

✽ இயற்கைச் சூழ்நிலையோடு பாமர வாழ்க்கையினைத் திரு உமாசந்திரன் அவர்கள் ஆரம்ப முதல் உயிரோட்டமாகவும், தத்ரூபமாகவும் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

பண்புமிக்க அருமையான நாவலை எழுதிய திரு உமாசந்திரன் அவர்களுக்கும், வெளியிட்ட தங்களுக்கும், தேர்ந்தெடுத்த தேர்வுக் கமிட்டியாருக்கும் எம் மனமுவந்த நல் வாழ்த்துக்கள் உரியதாகும்!

சென்னை-12
6-4-67 மு. வச்சிரவேலன்

ஃ ஃ ஃ

பத்திரிகைகள் பலவும் சினிமா போன்றவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்து வரும் இன்றைய நிலையில் அடிப்படைப் பிரச்னையான உணவுப் பிரச்னை பற்றித் தங்களின் 2—4—67 இதழில் ரூபாய்க்கு மூன்று படி அரிசி என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையைப் படித்தேன். மிகவும் நன்றாக இருந்தது. விவசாயத்துக்காக ஒரு பகுதியை ஒதுக்கி நல்ல கருத்துக்களை வெளியிடுத்தினால் உற்பத்தியாளருக்கும் உபயோகிப்போருக்கும் பயனளிக்கும் என நினைப்பதோடு விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவரை உற்சாகப்படுத்தி அவர்களையும் விவரம் தெரிந்தவர்களாக ஆக்க முற்பட்ட பெருமை தங்களுக்கே உரியதாகும்.

கூத்தப்பார் மா. தண்டாயுதபாணி
30—3—67 விவசாயி

ஃ ஃ ஃ

ஏப்ரல் 2ந் தேதி கல்கி இதழில் 'ரூபாய்க்கு மூன்று படி அரிசி' கட்டுரையில் மிகத் தெளிவாக விஞ்ஞானக் கருத்துக்கள் எடுத்துரைக்கப்பட் டிருக்கின்றன. கட்டுரையை வாசித்ததும், நம் தமிழ் நாட்டு விவசாயிகள் புதிய நெல் வகைகளையும் ரஸாயன உரங்களையும் நல்ல அளவிலும் முறையிலும் உபயோகித்து நெல் விளைச்சலை ஜப்பான் முதலிய நாடுகளைப் போல் அதிகரிக்க முடியும் என்ற நம்பிக்கை வலுப்பெறுகிறது.

நெய்வேலி—1
3—4—67 த. ரா. விசுவநாதன்

ஃ ஃ ஃ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் சென்னை மேலை மாம்பலம் ஸ்ரீ சங்கரமடத்தில் ஸ்ரீ பகவத்பாதாளுடைய பாதங்களைப் பிரதிஷ்டை செய்து, சகல ஜனங்களும் குருவின் அனுக்கிரஹமும் பெற்று விளங்க நல்வழி காட்டி யிருக்கிறார்கள்.

ஸ்ரீ பக்த சமாஜம் இவ்வருடமும் ஸ்ரீசங்கர ஜயந்தி உத்ஸவத்தைச் சிறந்த முறையில் கொண்டாடத் தீர்மானித்துள்ளது. புண்யமான ஸ்ரீ சங்கரஜயந்தி தினத்தில், ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களின் பாதார விந்தங்களில் லக்ஷார்ச்சனை செய்யத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இந்த லக்ஷார்ச்சனையில் கலந்து கொள்ளும் பக்தர்களுக்கு நமது பரமாசாரியாளின் ஆசியுடன் வெள்ளிப் பாதுகைகள் கிருஹத்தில் பூஜையுடன் வைத்துக் கொள்ளப் பிரஸாதத்துடன் கொடுக்க ஏற்பாடாகி யிருக்கிறது.

14—5—67 மாலை 6—30 மணிக்கு ஸ்ரீ சங்கர ஜயந்தி. ஸ்ரீ பகவத்பாதாளின் பாத கமலங்களுக்கு லக்ஷார்ச்சனை ஆரம்பம்.

18—5—67 ஸ்ரீ பகவத்பாதாளின் பாத கமலங்களுக்கு லக்ஷார்ச்சனை பூர்த்தி. மாலை ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர் வெளியீட்டு விழா.

இந்த லக்ஷார்ச்சனையில் ஆஸ்திகப் பெருமக்கள் எல்லோரும் கலந்து கொண்டு ஸ்ரீ பகவத்பாதர்களின் பிரசாதத்துக்கும் ஸ்ரீ ஆசார்யாளின் அனுக்கிரஹத்துக்கும் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

லக்ஷார்ச்சனை ஒரு அர்ச்சனைக்கு: ரூ. 10. தபாலில் பெற விரும்புவோர் தபால் செலவு இரண்டு ரூபாய் தனியாக அனுப்பவும்.

ஸ்ரீ பக்த ஸமாஜம்,
சென்னை—33 6-ஏ, ஸ்டேஷன் ரோடு,
1—3—67 மேலை மாம்பலம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

Registered as a Newspaper in Ceylon